# சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயம்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.)
அளிக்கப்பெறும் ஆய்வேடு


ஆய்வாளர்

**தி.கோகுலக்கண்ணன்**
**(பதிவு எண். R09TAM04)**

நெறியாளர்

**முனைவர் வை.இராமராஜபாண்டியன்**






தமிழ்த்துறை
பெரியார் பல்கலைக்கழகம்
பெரியார் பல்கலை நகர்
சேலம்–636 011.


சனவரி – 2016

# நெறியாளர் சான்றிதழ்

**முனைவர் வை.இராமராஜபாண்டியன்,** நாள் :
இணைப்பேராசிரியர்,
இக்கால இலக்கியத்துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

**‘சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயம்’** என்னும் தலைப்பில் **தி.கோகுலக்கண்ணன்** அவர்கள் முனைவர் பட்டத்திற்காகச் (பிஎச்.டி) செய்த இந்த ஆய்வு பெரியார் பல்கலைக்கழகத் தமிழ்த்துறையில் அவர் ஆய்வு செய்த காலத்தில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும் இந்த ஆய்விற்காக வேறு எந்தப்பட்டமும் ஆய்வாளருக்கு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**தமிழ்த்துறைத் தலைவர்** **நெறியாளர்**

**(முனைவர் வை. இராமராஜபாண்டியன்)**

# ஆய்வாளர் உறுதிமொழி

**தி. கோகுலக்கண்ணன்,**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
தமிழ்த்துறை,
பெரியார் பல்கலைக்கழகம்,
பெரியார் பல்கலை நகர்,
சேலம்–636 011.

நாள் :

**'சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயம்'** என்னும் தலைப்பில் முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி) எழுதப்பெற்ற இவ்வாய்வு எனது சொந்த முயற்சியால் உருவானது என்றும், இதற்குமுன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்படவில்லை என்றும் உறுதி அளிக்கின்றேன்.

**ஆய்வாளர்**

**(தி. கோகுலக்கண்ணன்)**

**உறுதிக் கையொப்பம்**

**நெறியாளர்**
**முனைவர் வை.இராமராஜபாண்டியன்**
இணைப்பேராசிரியர்,
இக்கால இலக்கியத்துறை,
தமிழியற்புலம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

# நன்றியுரை

முதுகலை பட்டம் தொடங்கி முனைவர் பட்டம் வரை பயிலவும் ஆராயவும் வாய்ப்பளித்த பெரியார் பல்கலைக்கழக முன்னாள் இந்நாள் துணைவேந்தர்களுக்கும், பல்கலைக்கழக பதிவாளர் அவர்களுக்கும், ஆட்சிக்குழு உறுப்பினர்களுக்கும் என் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.

விரும்பிய பகுதியில் முனைவர்பட்ட ஆராய்ச்சியை மேற்கொள்ள அனுமதி வழங்கியதோடு மட்டுமல்லாது, என் ஆய்வின் மீது மிகுந்த அக்கறையுடன் தகுந்த ஆலோசனைகளை வழங்கிய தமிழ்த்துறை தலைவர் **முனைவர் தி.பெரியசாமி** அவர்களுக்கும் நான் நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

அறிமுகமான நாள் முதல் இன்று வரையிலும் என்மீதும் என் ஆய்வின் மீதும் மிகுந்த அக்கறை செலுத்துவது மாத்திரமல்லாமல், என் ஆய்வைக் கட்டமைப்பதில் நெறியாளராகவும் வாழ்வை செம்மைப்படுத்துவதில் வழிகாட்டியாகவும் இருந்து, எனக்கு ஊக்கமும் ஆக்கமும் அளித்துவரும் எனது நெறியாளரும், தற்சமயம் மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் இணைப்பேராசிரியராகவும் பணியாற்றி வரும் **முனைவர் வை.இராமராஜபாண்டியன்** அவர்களுக்கு என்றென்றும் நன்றிக்கடன் பட்டவனாவேன்.

என் ஆய்வு செம்மையுற உறுதுணையாக இருந்த தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர் **முனைவர் இரா.தேவணன்** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முதுகலை பயிலத் தொடங்கியது முதல் இன்றுவரை ஆய்வு சம்பந்தமான அறிவுரைகளை வழங்கிய தமிழ்த்துறை பேராசிரியர் **முனைவர் மோ.தமிழ்மாறன்,** இணைப்பேராசிரியர் **முனைவர் ம.சுந்தரமூர்த்தி**, உதவிப்பேராசிரியர்களான **முனைவர் சு.வேலாயுதன், முனைவர் க.மைதிலி, முனைவர் இரா.வசந்தமாலை** முதலிய அனைவருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கடந்த பத்து வருடங்களாக என் வாழ்வின் அனைத்து இன்ப துன்பங்களிலும் என்னுடன் இருந்து வரும் என்னுயிர் நண்பர்கள் **வை.கதிரேசன், இரா.இளவரசன், ச.காளிமுத்து, சி.ராஜலிங்கம், மா.ப.ரமேஷ்குமார், மு.சு.அருண்குமார், வே.சிவா, கு.கண்ணன், மு.கண்ணன், மா.கணேஷ் அவர்களுக்கும், ந.சோபா சக்ரவர்த்தினி, பொ.கலைவாணி, பா.ரமணி, வி.ரேவதி** அவர்களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வின் வளர்ச்சிக்கு உதவிய பெரியார் பல்கலைக்கழக நூலகத்தாருக்கும், சேலம் மாவட்ட மைய நூலகத்தாருக்கும், மதுரை, தஞ்சை, திருச்சி பல்கலைக்கழக நூலகத்தாருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வேட்டை சிறப்புடனும் பொறுப்புடனும் கட்டமைத்துக் கொடுத்த நண்பர் திரு **சி.கௌதமன்** அவர்களுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**தி. கோகுலக்கண்ணன்**

# சுருக்கக்குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | – | அகநானூறு |
| ஆசாரம். | – | ஆசாரக் கோவை |
| இனியவை. | – | இனியவை நாற்பது |
| இன்னா. | – | இன்னா நாற்பது |
| உ.ஆ. | – | உரையாசிரியர் |
| ஐ.ஐம்பது. | – | ஐந்திணை ஐம்பது |
| ஐ.எழுபது. | – | ஐந்திணை எழுபது |
| கடுகம். | – | திரிகடுகம் |
| களவழி. | – | களவழி நாற்பது |
| கார். | – | கார் நாற்பது |
| குறள். | – | திருக்குறள் |
| சி. மூலம். | – | சிறுபஞ்சமூலம் |
| நாலடி. | – | நாலடியார் |
| நான்மணி. | – | நான்மணிக்கடிகை |
| நூ.எண். | – | நூற்பா எண் |
| தி.நூ.ஐம்பது. | – | திணைமாலை நூற்றைம்பது |
| தொ.ஆ. | – | தொகுப்பாசிரியர் |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள் |
| பழமொழி. | – | பழமொழி நானூறு |
| பா. எண். | – | பாடல் எண் |
| முதுமொழி. | – | முதுமொழிக் காஞ்சி |

# பொருளடக்கம்

# முன்னுரை

ஆரம்ப காலத்தில் இருந்து இன்றுவரை பக்தி சார்ந்த சமூகமாகவே தமிழ்ச்சமூகம் இயங்கி வருகிறது. உலகில் பிற சமூகங்களை விடவும் தமிழ்ச் சமூகம் பக்தி நெறியில் மிகுந்த ஈடுபாடுடையதாக விளங்குகின்றது. இயற்கை வழிபாட்டில் இருந்து சமயம் என்ற அமைப்பு உருவாக முக்கியக் காரணமாக இருப்பது, நமக்குத் தெரியாத, நமக்கும் மேலான ஏதோவொரு அதீத சக்தி நம்மை இயக்குகிறது என்ற கருத்தாக்கமே ஆகும். இதுவே பக்தியின் தொடக்க நிலையாகவும் அமைகிறது. தமிழில் காணப்படுகின்ற இலக்கண இலக்கியங்கள் பலவற்றிலும் பக்தியின் தாக்கம் இருந்துகொண்டுதான் உள்ளது.

சங்ககாலத் தமிழகத்தில் வைதீக சமயமே மிகுந்த செல்வாக்குடன் காணப்பட்டதால், அக்கால இலக்கியங்களில் குறைந்த அளவே பிற சமயத் தாக்கங்கள் காணப்படுகின்றன. மேலும் அக்கால மக்களிடம் சமயப் பூசல் அவ்வளவாகக் காணப்படவும் இல்லை. ஆனால் அதன் பின்னர் வந்த சங்கம் மருவிய காலகட்டத்தில் சமண, பௌத்த சமயங்களின் ஆதிக்கம் மிகுதியாகக் காணப்படுகின்றது. ஒவ்வொரு சமயத்தாரும் தங்கள் சமயக் கருத்துக்களை மக்களிடையே புகுத்த இலக்கியங்களையே மிகுதியும் கையாண்டனர். இதன் காரணமாக அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் சமண, பௌத்த, வைதீக சமயங்கள் சார்ந்த செய்திகள் மிகுதியும் காணப்படுகின்றன.

தமிழகத்தில் சமயம் சார்ந்த சிந்தனைகள் தொடக்கத்தில் இருந்தே காணப்பட்டாலும், அது ஒரு அமைப்பாக உருவாகவில்லை. சங்கம் மருவிய காலத்தில் ஏற்பட்ட சமயப் பூசல்களினாலும், மக்களிடையே ஏற்பட்ட

குழப்பமான மனநிலையாலும், ஒவ்வொரு சமயத்தாரும் தங்களின் சமயக் கருத்துக்களையும் கோட்பாடுகளையும் மக்களிடையே நிலைநிறுத்த சமயத்தை ஓர் அமைப்பாக உருவாக்கினர். தமிழகத்தில் உள்ள சமயங்களில் மிகப்பழமையான சமயங்களான வைதீகம், சமணம், பௌத்தம் ஆகிய மூன்றும் சங்க மருவிய காலத்தில் தான் மிகுதியான செல்வாக்கைப் பெற்றிருந்தன. எனவே சமயம் சார்ந்த ஆய்வில் சங்கம் மருவிய இலக்கியங்களைப் பற்றி ஆய்வு செய்ய வேண்டியது மிகவும் இன்றியமையாததாகும்.

**ஆய்வுத் தலைப்பு**

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயம்** என்பது ஆய்வுத் தலைப்பாக அமைகிறது.

**ஆய்வு நோக்கம்**

தமிழ் இலக்கிய காலகட்டத்தில் ‘பக்தி இலக்கிய காலம்’ என்று தனியாகக் கூறப்பட்டாலும், சங்க இலக்கிய காலத்திற்கு முன்பிருந்தே சமயம் சார்ந்த செய்திகள் இருந்து வந்துள்ளன. இருப்பினும், தமிழகத்தில் சமயப்பூசல் என்பது சங்கம் மருவிய காலத்தில் தான் மிகுதியும் நடைபெற்றது. தமிழகத்தில் வைதீகம், சமணம், பௌத்தம் ஆகிய மூன்று சமயங்கள் தான் பழைமையான சமயங்களாகக் கருதப்படுகின்றன. இம்மூன்று சமயங்களும் நன்கு வளர்ச்சியடைந்த காலமாக சங்கம் மருவிய காலம் அமைகிறது. இக்காலகட்டத்தில் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இம்மூன்று சமயங்களின் கருத்துக்கள் மிகுதியும் காணப்படுகின்றன. அவ்விலக்கியங்களில் இடம்பெற்றுள்ள இம்மூன்று சமயங்கள் சார்ந்த செய்திகளை ஆராய்வது இவ்வாய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

இலக்கியங்களில் சமயம் என்பது மிகப்பரந்த எல்லை. ஒவ்வொரு கால இலக்கியங்களிலும் சமயம் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. அவற்றை முழுவதும் ஆய்வு செய்வதென்பது இயலாததாகும். எனவே, சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் மட்டும் ஆய்வு எல்லையாகக் கொள்ளப்படுகின்றன.

**சான்றாதாரங்கள்**

ஆய்விற்கான அடிப்படை ஆதாரங்கள் முதன்மை ஆதாரங்கள் துணைமை ஆதாரங்கள் என இரு வகையில் அமைகின்றன.

**முதன்மை ஆதாரங்கள்**

சங்கம் மருவிய இலக்கியங்களான பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் முழுமையும் முதன்மை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**துணைமை ஆதாரங்கள்**

சமயம் சார்ந்த திறனாய்வு நூல்கள், கட்டுரைகள், ஆய்வேடுகள், களஞ்சியங்கள், அகராதிகள், நாளேடுகள் முதலியவை துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்படுகின்றன.

**முன்னாய்வுகள்**

சு.மாதவனின் அறஇலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், திருமதி சிவகாமசுந்தரியின் திருவாசகமும் சைவசித்தாந்தங்களும், இரா.சங்கரின் பதினோறாம் திருமுறைகளில் சைவ சித்தாந்தக் கூறுகள் போன்றவை இவ்வாய்விற்கு முன்னாய்வுகளாக அமைகின்றன.

## ஆய்வு அணுகுமுறை

சமயச் சான்றோர்கள் பலரும் தங்கள் சமயத்தைக் கடைபிடிப்போர் மேற்கொள்ள வேண்டிய அறநெறிகள் பலவற்றை வரையறை செய்துள்ளனர். அவ்வற நெறிகள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள பாடல்களுடன் ஒப்பிட்டுக் கூறுமிடங்களில் ஒப்பீட்டு அணுகுமுறையும், ஒவ்வொரு சமயப் பாடல்களையும் பகுக்கும் இடங்களில் பகுப்பாய்வு அணுகுமுறையும், பாடல்களில் காணப்படும் சமயக் கருத்துக்களை விவரித்துக் கூறும் இடங்களில் விளக்கமுறை அணுகுமுறையும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

## ஆய்வுப் பகுப்பு

இவ்வாய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகப் பகுக்கப்பட்டுள்ளது. அவை,

1. வழிபாடும் சமயமும் – அறிமுகம்
2. சங்கம் மருவிய இலக்கியங்களில் சமணம்
3. சங்கம் மருவிய இலக்கியங்களில் பௌத்தம்
4. சங்கம் மருவிய இலக்கியங்களில் வைதீகம்

என்பனவாகும்.

**வழிபாடும் சமயமும் – அறிமுகம்** என்பது முதலாமியலாகும். வழிபாட்டு முறையே சமயம் என்ற அமைப்பிற்குத் தோற்றுவாயாகவும் அடித்தளமாகவும் அமைகிறது. ஆரம்ப நிலையில் மனிதன் தனக்கு உண்டான அச்சத்தின் காரணமாக இயற்கையை வழிபட்டதும், அதன் தொடர்ச்சியாக முன்னோர் வழிபாடும் நடுகல் வழிபாடும் வளர்ச்சி அடைந்ததும் இவ்வியலில் ஆராயப்படுகிறது. இயற்கை வழிபாடு, முன்னோர் வழிபாடு, நடுகல் வழிபாடு,

குலதெய்வ வழிபாடு என்ற இவ்வழிபாட்டு முறைகள் சமயம் என்ற அமைப்பாக எவ்வாறு உருமாற்றமடைகின்றன என்பதை விளக்குவதாக இவ்வியல் அமைகிறது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சமணம்** என்பது இரண்டாமியலாகும். சங்கம் மருவிய காலத்தில்தான் சமணமும் பௌத்தமும் தமிழகத்தில் மிகுந்த செல்வாக்கைப் பெற்றிருந்தது. இதனால்தான் சமண பௌத்த சமயங்களின் பொற்காலமாக சங்கம் மருவிய காலத்தைக் கூறுவர். இக்காலகட்டத்தில் தோன்றிய இலக்கியங்களில் இச்சமயங்களின் கருத்துக்கள் மிகுதியும் காணப்படுகின்றன. சமணர்கள் வாழ்வியல் நெறிகளில் கடைபிடிக்கக் கூடிய கோட்பாடுகளைப் பலவாறாக வகைப்படுத்தியுள்ளனர். அவை மாவிரதங்கள் என்றும், சமிதிகள் என்றும், ஐம்பொறி அடக்கம் என்றும், ஆகஸ்யதம் என்றும் பலவாறாக விரிகின்றன. இவற்றில் மிக முக்கியமான சமணக் கோட்பாடாக மாவிரதங்கள் அமைகின்றன. இம்மாவிரதங்கள் பதினெண் கீழ்க்கணக்கில் இடம்பெற்றுள்ளமை பற்றியும், இன்னபிற சமணர்களின் ஒழுக்க நெறிகள் பற்றியும் ஆராய்வதாக இரண்டாவது இயல் அமைகிறது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பௌத்தம்** என்பது மூன்றாமியலாகும். பௌத்த சமயத்தின் அடித்தளமாக அமைபவை, புத்தரால் மொழியப்பட்ட 'நான்கு வாய்மைகள்' ஆகும். இந்நான்கு வாய்மைகள் 'நான்கு சத்தியங்கள்' எனவும், 'சதுர் ஆர்ய சத்யாணி' எனவும், 'நான்கு உண்மைகள்' எனவும் பலவாறாகக் கூறப்படுகின்றன. இப்புத்த சமயக் கோட்பாடுகள் பலவும் பதினெண் கீழ்க்கணக்கில் மிகுதியாகக் காணப்படுகின்றன. இவ்விதம் பௌத்த சமயக் கருத்துக்கள் பதினெண் கீழ்க்கணக்கில் இடம்பெற்றுள்ளதை ஆராய்வதாக மூன்றாவது இயல் அமைகிறது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் வைதீகம்** என்பது நான்காமியலாகும். தமிழகத்தின் தொடக்ககால சமயமாக வைதீக சமயமே இருந்துள்ளது. ஆரம்பநிலையில் சைவம், வைணவமாக பிரிந்திருந்த வைதீக சமயம், சமண பௌத்த சமயங்களின் வருகைக்குப் பிறகு ஒன்றாக இணைகின்றன. பதினெண் கீழ்க்கணக்கில் பல பாடல்கள் வைதீக சமயம் சார்ந்ததாகக் காணப்படுகின்றன. சிவன், உமையாள், கணபதி, வேலன் முதலான சைவக் கடவுள்கள் பற்றிய செய்திகளும்; திருமால், திருமகள் முதலான வைணவக் கடவுள்கள் பற்றிய செய்திகளும்; இந்திரன், காமன், எமன், குபேரன் பற்றிய பொதுவான வைதீக தெய்வங்கள் பற்றிய செய்திகளும் ஆராய்வதாக நான்காவது இயல் அமைகிறது.

இவ்வாய்வின் ஒவ்வொரு இயலின் முடிவிலும் கண்ட கருத்துக்கள் தொகுப்புரையாக இடம்பெற்றுள்ளன. ஆய்வில் கண்ட முடிவுகள் முடிவுரையாகத் தரப்பட்டுள்ளன.

இவ்வாய்வேட்டின் இறுதியில் துணைநூற்பட்டியல் இடம்பெற்றுள்ளது. இவ்வாய்விற்குப் பயன்படுத்தப்பட்ட நூல்கள் அகரவரிசைப்படி தரப்பட்டுள்ளன.

# வழிபாடும் சமயமும் – அறிமுகம்

## முன்னுரை

உலகில் பிற சமூகங்களை விட, தமிழ்ச் சமூகம் வழிபாட்டிற்கும் சமயத்திற்கும் அதிக முக்கியத்துவம் தருகின்றது. தமிழர்கள் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்விலும் இவையிரண்டும் மிகமுக்கியப் பங்கு வகிக்கின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை, பயிரிடுதல் முதல் அறுவடை செய்தல் வரை என அனைத்து இடங்களிலும் வழிபாடும் சமயமும் முதன்மைப்படுத்தப்படுகின்றன. இன்றைய நாகரிக உலகிலும் தமிழர்களிடையே வழிபாட்டின் மீதான நம்பிக்கையும், சமயத்தின் மீதான தாக்கமும் சற்றும் குறையவில்லை. தமிழர்களின் இறையியல் சார்ந்த முறையானது இயற்கை வழிபாட்டில் தொடங்கி சமயம் என்ற மிகப்பெரும் அமைப்பாக மாற்றமடைகிறது. அச்சமய வடிவில் தோன்றிய வழிபாடானது, அடுத்து அன்பின் வெளிப்பாடாகவும், நன்றியுணர்வின் வெளிப்பாடாகவும் பலவாறாக மாற்றமடைகின்றன. தமிழர்களிடையே காணப்படும் சில வழிபாட்டு முறைகளையும், வழிபாட்டின் அடுத்த நிலையான கடவுள், சமயம் என்பதைப் பற்றியும் ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## இயற்கை வழிபாடு

மனிதனை வியப்பில் ஆழ்த்தும் ஆக்க சக்திகளில் இயற்கையும் ஒன்று. மனிதனால் விளங்கிக்கொள்ள முடியாத பல கூறுகள் இயற்கையில் புதைந்து கிடக்கின்றன. உலகில் உள்ள அனைத்து உயிரினங்களின் இயக்கமும் இயற்கையைச் சார்ந்தே அமைந்துள்ளன.

மனிதன் தன் வாழ்வினை இயற்கையின் துணை கொண்டே வடிவமைத்தான். இயற்கையில் கிடைக்கும் பொருட்களைக் கொண்டே

மனிதனின் வாழ்வாதாரங்கள் நகர்கின்றன. பஞ்ச பூதங்களும், அதன்வழி விழையும் பொருட்களுமே மனிதனின் உணவுப் பொருள் ஆகின்றன என்ற நன்றியுணர்வின் வெளிப்பாடாகவே இயற்கை வழிபாடு இன்றளவில் கடைபிடிக்கப்படுகின்றன. ஆனால் தொடக்க காலத்தில் இவ்வழிபாடு அச்சத்தின் அடிப்படையிலேயே தோன்றியிருக்க வேண்டும். இதனை க.ப.அறவாணன் "பெய்தும் பெய்யாதும் மனித வாழ்வைச் சீர்குலைக்கின்ற மழை, பற்றி எறிகின்ற தீ, பெரும் மழையில் மரத்தின் மேல் விழுந்து அழிக்கின்ற இடி, மரங்களையும், இல்லங்களையும் சாய்த்து வீழ்த்துகின்ற புயல், கொடும்புயல், பெரும் மழை, இவற்றிற்கு ஆதாரமாக இருக்கின்ற ஆகாயம், கடல் ஆகியன மனிதனுக்கு அச்சம் தருவனவாக இருந்தமையால் வழிபடு பொருள்கள் ஆயின. நிலம், நீர், தீ, வளி, விண் ஆகிய ஐம்பூதங்களும் தமிழர் வரலாற்றில் ஆதி இயற்கை வழிபாட்டுப் பொருள்கள் ஆயின"[1] என்று குறிப்பிடுவர்.

ஐம்பூதங்களால் தனக்குத் துன்பங்கள் நிகழ்கின்றன என்ற அச்சத்தின் வெளிப்பாடாகவே இயற்கை வழிபாடு தோன்றுகிறது. நாம் இன்று இயற்கையின் வழி காணும் அனைத்துமே ஏதோவொரு உருவநிலையில் வழிபடு பொருட்களாகவே இருக்கின்றன. இயற்கை வழிபாடே பின்னர் கடவுள் வழிபாடாக தோற்றம் பெறுகிறது. இன்று வைதீக சமயத்தில் காணப்படும் கடவுள்கள், இயற்கையின் ஏதாவதொரு அங்கமாக உருவகப்படுத்தப்படுகின்றன. அச்சம் என்ற நிலையில் தொடங்கி அன்பு என்ற நிலையில் இயற்கை வழிபாடு நிலை கொண்டுள்ளது.

"உலகளாவிய கடவுள் நம்பிக்கை, வழிபாடு, பூசை ஆகியவற்றைப் பொறுத்த அளவில், அவை அச்ச அடிப்படையிலும், அன்பு அடிப்படையிலும்

எங்கும் தன்னிச்சையாகத் தோன்றித் தழைத்திருத்தல் வேண்டும். அன்பு காட்டுவனவற்றிற்கு நன்றி காட்டுவதும், அச்சம் ஊட்டுவனவற்றிற்கு அடிபணிவதும் மனிதச் செயல்கள், நிலம், நீர், தீ, காற்று, விண் என்ற ஐம்பூதங்களும் மனிதனுக்கு நன்மை செய்வனவாகவும், தீமை செய்வனவாயும் திகழ்ந்தன''[2] என்று க.ப.அறவாணன் மேலும் விளக்குவர்.

பல நேரங்களில் நிலமானது அவன் வாழ்விற்கு ஆதாரமான உணவுப் பொருட்களைத் தந்து காத்தது, சில நேரங்களில் அவை வறண்டு எவ்வித உணவுப் பொருட்களும் விளையாமல் பஞ்சத்தில் ஆழ்த்தியது. நீரானது அவன் தாகத்தைத் தணிப்பதோடு அல்லாமல், விளைச்சலுக்கும் ஆதாரமாக இருந்தது. சிலசமயங்களில் நீர் அளவுக்கு அதிகமாக மழையாகக் கொட்டியும், கடலாகக் குமுறியும் அல்லது பொழியாமலேயும் அவனுக்குத் துன்பத்தைத் தந்தது. உணவுகளைச் சுட்டுச் சமைக்க, குளிரில் இருந்து காக்க துணை புரிந்த தீயானது, காடுகளை வீடுகளை அழித்தும் கொடுமை புரிந்தது. சுவாசத்திற்கு ஆதாரமாக விளங்கிய காற்று, கடும் புயலாக மாறி வீடு, காடுகளை அழித்தது. மழை, ஒளி, காற்று ஆகியவற்றின் ஆதாரமாக இருக்கும் விண், கொட்டும் மழையாகவும், கடும் ஒளியாகவும், கொடும் புயலாகவும் மாறியது. இவ்வாறாக ஐம்பூதங்களால் எந்த அளவிற்கு நன்மையோ அதே அளவில் துன்பமும் வந்து சேர்கின்றன என்பதை உணர்ந்த பண்டைய மக்களின் உள்ள வெளிப்பாடாகவே இயற்கை வழிபாடு தோற்றமடைகிறது. "நன்மை செய்த ஒருவர் மீது அன்பு காட்டினால் அவர் மேலும் நன்மை செய்வார் அன்றோ? தீமை செய்த ஒருவர் முன் பணிந்து போற்றினால் அவர் தீமை செய்யாது இருப்பார் அன்றோ? அதன் விளைவாகவே ஐம்பூத வழிபாடும் பூசையும், நிலவழிபாடு – பூமாதேவி வழிபாடாயிற்று; நீர் வழிபாடு கங்காதேவி / வருண /

மழை / இந்திர வழிபாடாாயற்று; தீ வழிபாடு சேய், சிவ வழிபாடாயிற்று; காற்று வழிபாடு வாயு அனும வழிபாடாயிற்று; விண் வழிபாடு சூரிய, சந்திர வழிபாடுகள் ஆயின''[3] என்று கூறுவர்.

க.ப. அறவாணன் கூறியது போல, அச்ச அடிப்படையிலே இயற்கை வழிபாடு தோன்றி, பின் அன்பின் அடிப்படையில் மாறியிருக்க வேண்டும். தம் வாழ்வாதாரத்தை அழிக்கும் ஆற்றல் இயற்கையிடம் இருக்கிறது என்ற அச்சத்தின் வெளிப்பாடாக வழிபாடு தோன்றியது. காலஞ்செல்லச் செல்ல தம் வாழ்வாதாரமே இயற்கையை நம்பித்தான் உள்ளது என்பதை மனிதன் உணர்ந்தவுடன் அவனுக்குள் நன்றியுணர்வு ஏற்பட்டது. அந்நன்றியுணர்வினை வெளிப்படுத்த அவற்றினை வழிபடும் நிலையைத் தொடங்கினான்.

உணவு உற்பத்திக்கு இயற்கையே ஆதாரமாக இருப்பதால் ஒவ்வொரு செயலைத் தொடங்கும் முன்பும் இயற்கைக்கு நன்றி செலுத்த, அவற்றிற்கு பூசை செய்வதும், உரிய மரியாதை செலுத்துவதும் தனது கடமை என்று உணர்ந்ததன் நிலையில் தான் இயற்கை வழிபாடு தோன்றுகிறது. வெறுமனே இயற்கையை மட்டும் வணங்காமல் அவற்றிற்கு உருவம் கற்பித்தும் வழிபடத் தொடங்கினான். இறைவழிபாட்டிற்கு மட்டுமல்லாமல் அனைத்து வழிபாடுகளுக்கும் வழிபாடே அடிப்படையாக அமைகிறது.

**நடுகல் வழிபாடு**

வழிபாட்டு முறைகளில் நடுகல் வழிபாட்டு முறையும் மிகத் தொன்மையானது ஆகும். நமக்குக் கிடைக்கிற இலக்கிய வரலாறுகளுக்கு முன்பிருந்தே இவ்வழிபாட்டு மரபானது இருந்து வந்துள்ளது. இயற்கை வழிபாட்டிற்கு அடுத்து இவ்வழிபாட்டு முறை தோன்றியிருக்கக் கூடும். தமிழகத்தின் பரவலான இடங்களில் இவ்வழிபாட்டு முறை காணப்படுகிறது.

உருவ வழிபாட்டின் தொடக்கத்திற்கு அடித்தளம் இட்டது நடுகல் வழிபாட்டு முறையே. இறந்தவர்களின் நினைவாகவே நடுகற்கள் வைத்து வழிபடும் நடைமுறை சங்ககாலம் முதற்கொண்டு இருந்துவருகிறது. “இறந்தவர்களின் நினைவாக நடப்பட்ட கற்கள் ‘நடுகற்கள்’ ஆகும். இறந்தவர்களின் நினைவும், அதுசார்ந்த நம்பிக்கையும் தங்களு.கு ஆற்றலை வழங்கும் என்ற கருத்தில் உருவானதே ‘நடுகற்கள்’. ஆதித் தமிழனின் வழிபாட்டில் நடுகற்கள் முக்கிய இடம் வகிக்கின்றன’’[4] என்ற கருத்தும் இதனை மெய்ப்பிக்கும்.

ஆதித் தமிழன் வாழ்ந்த காலத்தில் கடைபிடிக்கப்பட்ட இம்முறை காலங்காலமாக வளர்நிலை அடைந்து கொண்டே வருகிறது. நமக்குக் கிடைத்த பழைமையான இலக்கண, இலக்கிய நூல்கள் அனைத்திலும் நடுகல் வழிபாட்டு முறை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. இந்நடுகல் வழிபாட்டு மரபு மிகப் பழைமையானது என்பதை, “இறந்தவர்களைப் புதைத்த இடங்களின் மீது கல் நடுதல் மட்டுமே அல்லாமல், பிற இடங்களிலும் நினைவுச் சின்னங்கள் அமைக்கும் மரபைச் சங்கப் பாடல்கள் காட்டுகின்றன. சங்க இலக்கியம் காட்டும் சான்றுகள், நமக்குக் கிடைக்கும் இலக்கியச் சான்றுகளுள் பழமையானவை. சங்க இலக்கியம் நினைவுக்கல் எழுப்பும் மரபிற்குத் தொடக்கம் குறித்ததாகக் கூற முடியாது. ஏனெனில், காலப்பழமை வாய்ந்த இலக்கண நூலாகிய தொல்காப்பியம் (கி.மு. மூன்றாம் நூற்றாண்டு) இறந்தவர் நினைவாகக் கல் எடுத்தல் பற்றி விரிவாகக் குறிப்பிடுகிறது. நினைவுக் கற்கள் நிறுவும் மரபு தோன்றிய காலத்தை அறுதியிட்டுக் கூறமுடியாவிட்டாலும் கிறிஸ்து பிறப்பதற்கு பன்னெடுங்காலத்திற்கு முன்பாகவே இம்மரபு தோன்றியிருக்கும் எனக் கூறலாம்’’[5] என்கிறார் வெ.கேசவராஜ்.

நடுகல் வழிபாட்டிற்கு பல காரணங்கள் கூறப்படுகின்றன. ஆன்மா பற்றிய எண்ணமும் நடுகல் வழிபாட்டிற்குக் காரணமாக இருந்திருக்கக் கூடும். என்றும் கருதுகின்றனர். பண்டைத் தமிழர்கள் ஆவி, ஆன்மா முதலியவற்றின் மீது மிகுதியான நம்பிக்கை கொண்டிருந்தனர். ஆவி, ஆன்மா பற்றிய நம்பிக்கைகள் இன்றளவிலும் மக்களிடம் இருந்துகொண்டுதான் உள்ளது. இறந்தவர்களின் ஆன்மா சிலகாலம் இவ்வுலகில் இருந்துவிட்டுத்தான் செல்கிறது என்ற சிந்தனை பண்டைக்கால மக்களிடையே மிகுதியும் காணப்படுகிறது.

"இறந்தவன் ஆன்மாவைச் சில சடங்குகள் மூலம் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வரவழைக்கலாம். அங்குள்ள ஒரு பொருளில் நுழைந்து கொள்ளச் செய்யலாம் என்ற நம்பிக்கை உலகம் முழுவதும் பழங்குடி மக்கள் பண்பாடாக உள்ளது. ஆன்மா உடலிலிருந்து பிரிந்து சாவு ஏற்படாமலேயே சில காலம் இருத்தல் கூடும் என்பது பண்டைய மக்களின் நம்பிக்கை. சில காலம் இருத்தல் இயலுமானால் நெடுநாட்கள் இருத்தலும் இயல்பே. அப்படிப் பிரிந்திருக்கும் ஒருபகுதி ஆன்மா வேறிடத்திலும், ஒரு பகுதி ஆவியின் இருப்பிடத்திலும் இருக்கும். உடலை விட்டுப் பிரிந்திருக்கும் ஆன்மா ஒரு பறவை, செடி, மரம், பெட்டி, புழு, மீன் முதலியவற்றில் இருக்கும். இவற்றிற்குத் துன்பம் நேரின், ஆன்மாவின் எஞ்சிய பகுதி உறையும் உடலுக்கும் துன்பம் நேரும். நெடுநாள் ஆவி குடியிருக்க வேண்டுமெனில் அழியாத, கடினமான உயிர் இல்லாத பொருள் தேவை என்ற நம்பிக்கை, மேற்கூறிய நம்பிக்கையின் வளர்ச்சியாகத் தோன்றியது. காலத்தால் பிற்பட்ட பண்டைய மக்களின் காதைகளில் கற்களில் ஆன்மா நெடுநாள் தங்கமுடியும் என்ற கருத்து தோன்றியது"[6] என்கிறார் க.ப.அறவாணன். இறந்தவர்களின் ஆன்மாவை இவ்வுலகில் நிலைபெறச்

செய்ய வேண்டும் என்ற நோக்கத்திலும் நடுகல் வழிபாட்டு முறை தோன்றியிருக்கலாம் என்பதை மேற்கண்ட மேற்கோளின் வழி அறியமுடிகிறது.

இறந்தவர்களின் ஆவியை இவ்வுலகில் நிலைபெற வைத்தால் நமக்கு நன்மை நிகழும் என்றும், நடுகல் நட்டு வழிபடுவது அவர்களுக்குச் செய்யும் நன்றிக்கடன் என்றும் பண்டைய மக்கள் நம்பினர். பண்டைக் காலத்தில் போரில் பங்கேற்று, அதில் இறந்த வீரர்களுக்கும் நடுகல் வைத்து வழிபட்டனர். நடுகல் வழிபாட்டில் போரில் இறந்தவர்களுக்கு நடுகல் வைத்து வழிபடுவதே மிகமுக்கியமானதாகக் கொள்ளப்படுகிறது. சங்க இலக்கியத்திலுள்ள பல பாடல்கள் நடுகல் வழிபாட்டு முறையினை வெளிப்படுத்துவதாக அமைந்துள்ளன. அவை பெரும்பாலும் போரில் இறந்தவர்களின் நினைவை பிரதிபலிக்கும் விதமாகவே அமைந்துள்ளன.

“சங்க இலக்கியத்தில் புறநானூற்று வீரயுகப் பாடல்கள் பலவும் ‘மாடுபிடி’ சண்டைகளை மையமாகக் கொண்டதே. இப்படி குலங்களுக்கு இடையில் நடந்த மோதல்களில் இறந்து போனவர்களையும், இயற்கையுடன் நிகழ்ந்த மோதல்களில் இறந்தவர்களையும் வழிபடும் முறையென்பது ஆதித்தமிழனின் வழிபாட்டின் முக்கிய இடம் வகிக்கிறது”[7] என்று கூறுவர் சு.வெங்கடேசன்.

சங்க இலக்கியத்தில் புறநானூறு மட்டுமல்லாமல் பிற நூல்களிலும் நடுகல் வழிபாடு பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. புறப்பாடல்களில் அமைந்துள்ள நடுகல் வழிபாட்டு முறைகள் அனைத்தும் வீரம் சார்ந்ததாகவே காணப்படுகிறது. நாட்டுக்காகப் போரில் உயிரை விட்டவர்களுக்காகவே நடுகற்கள் நடப்பட்டுள்ளன.

“பல்லாத் திரள்நிரை பெயர்தரப் பெயர்தந்து,
கல்லா இளையர் நீங்க நீங்கான்,
வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனல் சிறையின் விலங்கியோன் கல்லே’’[8]

என்ற புறப்பாடலில் நிரை மீட்கும் பொருட்டு இறந்த வீரனின் நினைவாக நடப்பட்ட நடுகல்லைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. இவை மட்டுமல்லாது இன்னும் பல பாடல்கள் நிரை மீட்டலுக்காக இறந்தோரின் நினைவாக நடுகல் நட்டதைக் கூறுவதாக அமைகின்றன.

“பரலுடை மருங்கிற் பதுக்கை சேர்த்தி
மரல் வகுந்து தொடுத்த செம்பூங் கண்ணியொடு
அணமயிற் பீலிசூட்டிப், பெயர் பொறித்து
இனிநட் டனரே! கல்லும்’’[9]

“ஊர்நனி இறந்த பார்முதிர் பறந்தலை
ஓங்குநிலை வேங்கை ஒள்ளிணர் நறுவீப்
போந்தைஅம் தோட்டின் புனைந்தனர் தொடுத்துப்
பல்ஆன் கோவலர் படலை சூட்டக்
கல்ஆ யினையே – கடுமான் தோன்றல்’’[10]

என்ற பாடல்கள் அனைத்துமே இறந்த வீரர்களுக்காக நடப்பட்ட நடுகற்களைப் பற்றிக் கூறுவதாக அமைந்துள்ளன. ‘நிரை மீட்டலுக்கான போரில் இறந்த வீரனுக்கு, அவன் பெயரும், பெருமையும் பொறித்த நடுகல் நடப்பட்டு அதற்கு மயிற்பீலியும் பூமாலையும் சூட்டி வழிபட்டனர் என்பதாக மேற்கண்ட பாடல்கள் தெரிவிக்கின்றன. புறநானூறு மட்டுமல்லாது அகநானூறு நூலிலும் நடுகல் வழிபாட்டு முறை பற்றி குறிப்பிடப்பட்டுள்ளது.

“நிரம்பா நோக்கின்; நிரயம் கொண்மார்,
நெல்லி நீளிடை எல்லி மண்டி,
நல்லமர்க் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி யதர்தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்’’[11]

என்ற அகநானூற்றுப் பாடலும் நிரை மீட்டலுக்கான போரில் இறந்தவரின் நினைவாக நடப்பட்ட நடுகல் பற்றியே கூறுவதாக அமைந்துள்ளது. ‘பல பூக்கள் இருந்தாலும் சில பூக்களே சிறந்தவைகளாகக் கொள்ளப்படுகின்றன. பல உணவு வகைகள் இருந்தாலும் சிலவே சிறந்ததாகக் கருதப்படுகின்றன. பல குடிகள் இருந்தாலும் சிலவே சிறந்த குடிகளாக விளங்குகின்றன. அதுபோல கடவுள் பல என்று கூறப்பட்டாலும் அவற்றில் இறந்தவர்களுக்காக நடப்பட்ட நடுகற்களை வணங்குவதே சிறப்புடையதாகும்’’ என்கிறது புறநானூறு. இதனை,

“ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி,
ஒளிறுஏந்து மருப்பின் களிறு எறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவின் அல்லது
நெல்வகுத்துப் பரவும் கடவுளும் இலவே’’[12]

என்ற பாடலின் வழி அறியலாம்.

இவ்வாறாக நடுகல் வழிபாடானது ஆதி இனக்குழு மக்களிடம் இருந்து காணப்படும் மிகப் பழமையான வழிபாட்டு முறையாகக் காணப்படுகிறது. போரில் இறந்த வீரர்களுக்காகவும், இறந்தவர்களின் ஆன்மா இவ்வுலகில் இருந்து நன்மையை விளைவிக்கவேண்டும் என்ற நோக்கத்திற்காகவும் நடுகல் வழிபாட்டு முறையானது தோன்றியது எனலாம்.

**முன்னோர் வழிபாடு**

நடுகல் வழிபாட்டைப் போலவே முன்னோர் வழிபாடும் பண்டைக் காலத்தே தோன்றி விட்டது. இறந்துபோன வீரர்களுக்கு நடுகல் நடப்பட்டு வழிபட்டதைப் போல, இறந்துபோன முன்னோர்களுக்கும் நடுகல் நட்டு வழிபடும் முறை பண்டைக் காலத்தில் இருந்துள்ளது. கடவுளின் தோற்றத்திற்கான கருத்தாவாக இம்முன்னோர் வழிபாட்டு முறையும் இருந்திருக்கக் கூடும். இன்றைய நிலையில் நாம் வழிபடும் சிறுதெய்வங்கள் அனைத்தும் முன்னோர் வழிபாட்டிலிருந்து வந்தவைதாம். முன்னோர் வழிபாடானது சிறுதெய்வங்களாகத் தொடங்கி, கடவுளாக வளர்ச்சியடைந்து சமயம் என்ற அமைப்பைத் தோற்றுவிக்க அடிப்படையாக இருந்தது எனலாம். இதற்கு “உலகத்தின் பல சமயங்கள் முன்னோர் வழிபாட்டை அடித்தளமாகக் கொண்டுள்ளன என்பதை மறுப்பதற்கு இல்லை. கிரேக்கம், ரோமாபுரி முதலான நாடுகளிலும் இவ்வழிபாட்டின் கூறுகள் உள்ளன. இந்தியாவில் மிகுதியாக உள்ள குடும்பத்தினர், இறந்த தாத்தா, பாட்டி ஆகியோரைக் கடவுள்கள் என்று கருதினர்’’[13] என்ற க.ப.அறவாணன் கருத்தைச் சான்றளிக்கலாம்.

தங்கள் குடும்பத்தில் இருந்த பெரியவர்கள், முன்னோர்கள், தங்கள் குடும்பத்திற்காக செய்த நன்மைகளையும் போராட்டங்களையும் நினைவில் கொள்ளவும் அவர்களுக்கு நன்றி செலுத்தவும் அவர்களை வழிபடத் தொடங்கியதன் விளைவே முன்னோர் வழிபாட்டிற்குத் தொடக்கமாக இருந்திருக்கலாம். அதோடு மட்டுமல்லாமல் இறந்தவர்கள் இவ்வுலகை விட்டுப் போவதில்லை என்றும், அவர்களது உயிர்கள் இங்கேயே தான் உலவிக்கொண்டிருக்கின்றன என்றும் நம்புவதன் அடிப்படையில் இவ்வழிபாடு நிலைபெற்றது.

“உயிர் அழியாது என்ற நிலையில் தான் முன்னோர் வழிபாடு கருக்கொண்டிருக்க வேண்டும். உடலில் இருந்து நீங்கிய முன்னோர் உயிரைப் போற்றும் முகமாகவே சமாதிகள் எழுப்பப்பட்டன. இறந்தோர் உடலை எறிக்காமல் புதைக்கும் வழக்கமும் போற்றப்பட்டது. குறிப்பாக அரசர்கள், சமயத்தலைவர்கள், ஊர்ப் பெரியோர் ஆகியோர் இறப்பிற்குப் பின் அன்னோர் உடல் எரிக்கப்படாமல் புதைக்கப்பட்டன’’[14] என்று கூறுவாரும் உண்டு.

இறந்தவர்கள் நம்மை விட்டு நீங்குவதில்லை, நம்மைச் சுற்றி அல்லது உலகில் எங்காவது, தான் ஆவியாக உலவி வருகின்றனர். அவ்வாறாக இருந்து தங்கள் குடும்பத்தைக் காத்து வருகின்றனர். அவர்கள் வாழ்ந்தவரை செய்த நன்மைக்காகவும், இனிமேல் வரும் துன்பங்களில் இருந்து நம்மை விடுவிக்க வேண்டும் என்ற எண்ணத்தின் விளைவுதான் முன்னோர் வழிபாடாகும்.

“முதலில் மக்கள் இறந்த தாய் தந்தையரைத் தொழத் தொடங்கினர். அவர்களை அடக்கஞ் செய்த இடத்தில் கல்லை நாட்டு அக்கல்லின்கண் முன்னோர்கள் உயிரோடிருந்து தங்களின் வணக்கத்தை மகிழ்ச்சியுடன் ஏற்றுத் தங்களுக்கு நலன் தருவதாக நம்பி வழிபட்டனர். நாளடைவிற் கிடைத்த பலனுக்கு ஏற்றவாறு வழிபாடு விருத்தியடைந்து வந்தது’’[15] என்று உரைப்பர் சாமிசிதம்பரனார்.

இறந்தவர்கள் அனைவருமே வழிபடப் படுவதில்லை. வாழும் போது அவர்கள் செய்த நன்மையின் அடிப்படையில் தான் அவர்கள் வழிபடும் உயர்நிலையை அடைகிறார்கள். “இறந்தவர்களை வழிபடும் இப்பழக்கம் இறந்த அனைவருக்கும் வாய்ப்பது அன்று. வாழும் போது பெரும் புகழ் எய்தியவர் இறந்தபின் நல்லவர்கள் வழிபாட்டிற்கு உரியவர் ஆகிவிடுகிறார்கள் என்று

நம்பப்படுகிறது''[16] இம்முன்னோர் வழிபாடானது இந்தியாவில் உள்ள பழங்குடி மக்களிடம் இருந்துதான் தொடங்குகிறது. இந்தியாவில் முன்னோர் வழிபாட்டு முறை மக்களிடையே மிகுந்திருப்பதைப் போலவே உலகின் பல்வேறு நாடுகளிலும் இவ்வழிபாட்டு முறை தொடக்கத்தில் இருந்தே இருந்து வருகிறது.

“கடவுளின் இருப்பிடங்களை வழிபடுவதற்கு முன்னால், முன்னோர்கள் அடக்கம் செய்யப்பட்ட கல்லறைகளை முதலில் வணங்குதல் கிரேக்கர்களின் வழக்கம் ஆகும். பிஜித் தீவு வாழ்மக்கள் கிட்டத்தட்ட தம்மை ஆளும் அரசனைக் கடவுளுக்கு அடுத்த வரிசை என்று எண்ணி வழிபட்டனர்.... பெருவில் இறந்த அரசன் அப்படியே கடவுளாக வழிபடப்பட்டான். நியூசிலாந்து தீவு வாழ் பழங்குடி மக்கள் இறந்துவிட்ட தன் இனக்குழுத் தலைவர்களையே தெய்வமாக வழிபட்டனர். சீனா முன்னோர் வழிபாட்டில் நம்பிக்கையுடைய நாடு ஆகும். சீனாவில் **4,000** ஆண்டுகளாக முன்னோர் வழிபாடு போற்றப் பெறுகிறது. அரசனாலும் பொதுமக்களாலும் முன்னோர் வழிபடப் பெறுகின்றனர். எகிப்திலும் முன்னோர் வழிபாடு பெருமளவில் இருந்தது. கடவுளுக்கு அளிக்கப் பெறும் புனித மதிப்புகள் அரசர்களுக்கும், அவர்கள் வாழும் காலத்திலேயே எகிப்தியரால் செய்யப் பெற்றன. கடவுள் தன்மைகள் மனிதனுக்கு ஏற்றப்பட்டுப் புகழப் பெற்றன. கிரேக்க மதம், முன்னோர் வழிபாட்டை அடித்தளமாகக் கொண்டு எழுப்பப் பெற்றது என்பர்.''[17] இவ்வாறு உலக நாடுகளில் உள்ள மக்களால் கடைபிடிக்கப்படும் முன்னோர் வழிபாட்டு முறையை தெளிவுபடுத்துகிறார் க.ப.அறவாணன்.

இறந்தவர்கள் தங்களுக்கு செய்த நன்மைக்காக முன்னோர் வழிபாடு உண்டானதைப் போல, இறந்தவர்களின் ஆவி தங்களைத் துன்புறுத்தும் என்ற வகையிலும் முன்னோர் வழிபாடு உருவாகியிருக்கக் கூடும். இறந்தவர்களின்

தீராத ஆசை, பகை போன்றவற்றால் அவர்கள் இவ்வுலகைவிட்டு செல்லாமல், இங்கேயே ஆவியாக உலவிக் கொண்டு, மக்களுக்குத் துன்பம் செய்வர் என்று எண்ணியதால், அவர்கள் விரும்பியதை படையலிட்டு வழிபடத் தொடங்கினர். "இறந்த கொடியவர்தம் ஆவி ஊர் மக்களுக்குத் துன்பம் என எதிர்பார்க்கப் பெற்று, இறந்தவர் புதைக்கப்பட்ட இடத்தில் வைக்கப்பட்ட கல்லறைக்கு வழிபாடு நிகழ்த்தப்பெற்றது.... ஒவ்வோர் ஆண்டும் இறந்தோர்க்காக வழிபாடு நிகழ்த்தி விருந்து நிகழ்த்தினர். இந்தியாவில் கொண்டாடப் பெறும் தீபாவளி எனும் பண்டிகை இறந்தவர் வழிபாடாக இருப்பதும் கருதத்தக்கது.''[18]

இறந்தவரின் மீதான அன்பு, அச்சம் முதலியவற்றின் வெளிப்பாடாகவே இவ்வழிபாட்டு முறை தோற்றம் பெற்றது. இறந்தவரின் நினைவுகள் தங்களுக்குள் என்றும் இருக்க வேண்டும் என்பதற்காகவும், அவர்களின் ஆன்மா இவ்வுலகில் நிலையில்லாமல் அலைந்து திரியக்கூடாது என்பதற்காகவும் அவை வேறோர் உலகம் சென்று அங்கு தங்கிவிட வேண்டும் என்பதற்காகவும் கடைபிடிக்கப்பட்டு வந்த இவ்வழிபாட்டு முறையில், இறந்தவர்கள் தாங்கள் வாழ்ந்த காலத்தில் விரும்பிய பொருட்களை அவர்களுடன் சேர்த்துப் புதைக்கும் வழக்கமும் இருந்துள்ளது.

"இறந்துபோன மனிதனின் உடலோடு அவன் பயன்படுத்திய ஆயுதம், அவனோடு தொடர்புடைய பொருட்கள், அந்தக் குலத்தின் சின்னம் ஆகியவற்றையும் சேர்த்து புதைத்து தனது முன்னோரை வழிபடும் முறை அன்று முக்கியமானதொன்றாக கடைபிடிக்கப்பட்டுள்ளது.''[19]

இறந்தவர்கள் மீண்டும் இவ்வுலகிற்கு வரக்கூடாது அவர்களின் ஆன்மா மேலுலகத்திலேயே தங்கிவிட வேண்டும் என எண்ணினர். இறந்தோர் ஆவியே

பேயாகத் திரிகின்றது என்று பல இனத்தவரும் நம்பினர். இறப்பிற்குப் பின்னர் நம்மால் செய்யப்படுகின்ற சடங்குகள் அவர்களின் கோபத்தைத் தனிக்கிறது என்று நம்பினர். இவற்றோடு மட்டுமல்லாமல் அவர்கள் வாழ்ந்த காலத்தில் தன் சமூகத்திற்காக செய்த நன்மைகள் முதலியவற்றையும் கருத்தில் கொண்டே முன்னோர் வழிபாடு உருவாகியது. ஆரம்ப நிலையில் தம்முன்னோர்களின் இழப்பை ஈடுகட்ட முடியாமலும், பின்னர் அவர்களை வழிபடுவது தங்களின் கடமை என்ற எண்ணத்தாலும் இவ்வழிபாட்டுமுறை இன்றளவும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

**குலதெய்வ வழிபாடு**

முன்னோர் வழிபாட்டின் அடுத்த நிலையே குலதெய்வ வழிபாடாகும். இன்றைய தமிழ்ச் சமூகத்தில் மிகுதியான சாதிகளும், ஒவ்வொரு சாதிக்குள்ளும் மிகுதியான குலங்களும் காணப்படுகின்றன. ஒவ்வொரு குல மக்களுக்குமென தனித்தனியான குல தெய்வங்கள் உண்டு. எந்தவொரு செயலைச் செய்யத் தொடங்கும் முன்னும் குலதெய்வத்தை வணங்கிவிட்டுச் செல்லும் வழக்கம் இன்றளவும் பலராலும் கடைபிடிக்கப்பட்டு வருகிறது.

குலதெய்வங்கள் பெரும்பாலும் அந்தந்த குல மக்களால் மட்டுமே வழிபடப்பட்டு வருகின்றன. அந்தக் குலத்தில் தோன்றிய ஒருவரின் நினைவாகவே இவ்வழிபாடு கடைபிடிக்கப்பட்டு வருகிறது. ஆரம்ப காலத்தில் யாரேனும் ஒருவர் ஒரு குலத்தைத் தோற்றுவித்திருக்கலாம். அக்குலத்திற்காக பல நன்மைகளைச் செய்திருக்கலாம். பல போராட்டங்களை நடத்தியிருக்கலாம். அக்குலத்திற்காகவே தன் உயிரையுங் கூட விட்டிருக்கலாம் என்பதன் அடிப்படையில் தான் இவ்வழிபாட்டு முறை நிகழ்த்தப்படுகிறது. இதனை, ‘‘குலதெய்வ வழிபாடு பெரும்பாலும் சில பல

தலைமுறைகளுக்குள் வாழ்ந்து மறைந்த முன்னோர்களின் வழிபாடுதான். ஆயினும் அந்த முன்னோரைப் பற்றிய வாழ்க்கைக் கதைகள் காலப்போக்கில் முன்பே வழங்கிக் கொண்டிருக்கும் கதைகளோடு இணைந்து உருமாறி விடுவதும் முற்றிலும் மறக்கப்பட்டு விடுவதும் இயல்புதான். ஆயினும் வாய்மொழியாகப் பாதுகாக்கப்பட்ட சில தெய்வங்களின் வரலாறுகள் நமக்குக் கிடைக்கின்றன''[20] என்ற செய்தி விளக்கும்.

குலதெய்வ வழிபாடுகளில் சாதியமுறை மிகுதியாகக் காணப்படுகின்றது. ஒரு சாதியில் உள்ள பல பிரிவுகளுக்கு பல குலதெய்வங்கள் இருப்பதும், ஒரே குலதெய்வம் பல பிரிவுகளுக்கு தெய்வங்களாக இருப்பதும் பெரும்பான்மை இடங்களில் காணப்படுகின்றது. குலதெய்வங்கள் பெரும்பாலும் ஊருக்கு வெளியே ஒதுக்குப் புறங்களில் தான் காணப்படுகிறது. அவ்விடம் அவர்கள் புதைக்கப்பட்ட இடமாகவும் இருத்தல் கூடும். ஒரு குடும்பத்தினரால் கடைபிடிக்கப்பட்டு வந்த முன்னோர் வழிபாடே, அக்குடும்பம் விருத்தியடையும் நிலையில் குலதெய்வ வழிபாடாக மாறுகிறது. குலதெய்வங்கள் தங்களையும் தங்கள் ஊரையும் பாதுகாப்பதாக நம்பினர். “குடும்பத் தெய்வங்கள் குல தெய்வங்களாகவும், குலதெய்வங்கள் ஊர்த் தெய்வங்களாகவும், ஊர்த் தெய்வங்கள் பல வைதீகத் தெய்வங்களாகவும் மாறுவது இயல்பு''[21] என்கிறார் ஆறு.இராமநாதன்.

இன்று பெரும்பாலான ஊர்களில் காணப்படும் ஊர்த்தெய்வங்கள், காவல் தெய்வங்கள் எனப்படுபவை முன்னொரு காலத்தில் குலதெய்வங்களாக இருந்தவையே. குலதெய்வ வழிபாடு ஆதிகாலத்தில் இருந்தே கடைபிடிக்கப்பட்டு வருகிறது. “ஆதி இனக்குழு மக்கள் இரத்த வழிபட்ட குலங்களாகவும், குடிகளாகவும் (Tribes) மாற ஆரம்பித்தனர். சமூக,

பொருளியல் வளர்ச்சி நிலையையொட்டிய இந்த மாற்றத்தில் குலத்தலைமையும், குல மரபும், குலச் சின்னங்களும் உருவாக ஆரம்பித்தன''[22] என்பர்.

ஆதி இனக்குழு மக்களிடம் இருந்து தோன்றிய இவ்வழிபாடு இன்று பல்வேறு வகையில் மாற்றமடைந்துள்ளன. குலதெய்வங்களில் பெரும்பாலானவை கையில் ஏதாவது ஆயுதங்களோ, ஏதாவது பொருள்களோ வைத்துக் கொண்டுள்ளன. அவை, அவர்கள் உயிருடன் இருந்த காலத்தில் பயன்படுத்தியவையாக இருக்கலாம். அதனை அடையாளப்படுத்தும் பொருட்டு அவர்களுடன், அவர்கள் பயன்படுத்திய ஆயுதங்களையும், இன்னபிற பொருட்களையும் புதைக்கும் வழக்கமும், அவர்கள் குடும்ப, குலதெய்வங்களாக மாறும் போது, அப்பொருட்களை வைத்து வழிபடும் பழக்கமும் இருந்து வருகிறது. இன்றைய நிலையில் ஒவ்வொரு சாதிக்குள்ளும், ஒவ்வொரு குலத்துக்குள்ளுமே பல குலதெய்வங்கள் வழிபடப்படுகின்றன.

“குலதெய்வங்கள் ஊரின் வெவ்வேறிடங்களில் வைத்து வழிபடப்படும்போக்கு பெரும்பான்மையான கிராமங்களில் காணப்பட்டாலும் பல்வேறு குலதெய்வங்கள் அல்லது பல்வேறு சாதி மக்களின் குலதெய்வங்கள் ஒரு தெய்வத்தின் தலைமையில் ஒரே இடத்தில் வைத்து வழிபடப்படும் போக்கும் பரவலாகக் காணப்படுகிறது''[23] என்று கூறுவர்.

சாதிகளுக்குள்ளும் குலங்களுக்குள்ளும் ஏற்பட்ட குழப்பங்கள், பிரச்சனைகள், அதிகாரப் பகிர்வுகள் இவற்றின் காரணமாக ஒரே சாதியில், ஒரே குலத்தில் பல குலதெய்வங்கள் தோன்றக் காரணமாக அமைந்தன. சாதிக்குள் எந்த குலம் உயர்வானதாகவோ, அதிக மக்கள் எண்ணிக்கை கொண்டதாகவோ உள்ளதோ அதுவே அச்சாதியில் உள்ள அனைத்து.க்

குலங்களுக்கும் முதன்மைப்படுத்தப்பட்டும், தலைமைப் பண்பு கற்பிக்கப்பட்டும் வணங்கப்படுகின்றன.

இன்று குலதெய்வங்களாக வணங்கப்படுபவர்கள் முன்னொரு காலத்தில் நம்மைப்போல் வாழ்ந்தவர்கள். நமக்காக வாழ்ந்தவர்கள். நமக்காகத் தம் உயிரை விட்டவர்கள் என்ற நம்பிக்கையின் அடிப்படையிலும் நன்றியின் அடிப்படையிலும் அவர்களின் தியாகத்திற்கு உரிய மரியாதை கொடுக்க வேண்டுமென்ற உயரிய எண்ணத்திலும் இன்று வரையிலும் அவர்களை நாம் வணங்கி வருகிறோம். ஒவ்வொரு குலதெய்வ வழிபாட்டிற்குள்ளும் நமது பண்டைய வரலாறு, கலாச்சாரம் ஆகியவை புதைந்து கிடக்கின்றன.

**சமயம் என்பதன் பொருள்**

மனிதனை இயக்கி வருபவைகளில் சமயம் மிகமுக்கிய பங்கு வகிக்கின்றது. மனிதனின் பிறப்பு முதல் இறப்பு வரையிலுமான அனைத்து நிகழ்வுகளிலும் சமயத்தின் தாக்கம் இருந்து கொண்டுதான் உள்ளது. சமயம் எவ்வாறு, எப்படி, ஏன், எதற்கு தோன்றியது என்பதை அறுதியிட்டுக் கூறுதல் அவ்வளவு எளிதானதல்ல. என்று தோன்றியது என உறுதிபடக் கூறமுடியாத அளவிற்கு மிகப் பழமையானதாக சமயம் இருப்பதோடு மட்டுமல்லாமல், காலத்திற்கு ஏற்றவாறு தன்னை புதுமைப்படுத்தியும் கொள்கிறது. தொடக்ககால சமய முறைக்கும் இக்கால சமய முறைக்குமிடையே உள்ள மாற்றங்களை நாம் நுண்ணிதின் நோக்க அறியஇயலும். மக்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்தும் நோக்கிலேயே சமயம் தோன்றியது என்பதால், மக்களின் வாழ்க்கை முறை எப்போதெல்லாம் மாற்றமடைகிறதோ, சமயமும் அதற்கேற்றவாறு மாறுகிறது அல்லது மாற்றப்படுகிறது.

உலகில் உள்ள பல சமயங்களில், சில சமயங்கள் தவிர பல சமயங்கள் நெகிழும் தன்மை உடையதாகவே காணப்படுகிறது. நெறிபிறழ்ந்து செல்லும் மனிதனை கட்டுப்படுத்தவும், தன் கட்டுக்குள் வைக்கவும் சமயங்கள் உதவின. சமயங்களை வளர்த்ததிலும், வடிவமைத்ததிலும் சமயச் சான்றோர்களின் பங்கு மிக முக்கியமானது. காலமாற்றத்திற்கேற்பவும் மக்களின் மன மாற்றத்திற்கேற்பவும் சமயங்களில் பல மாற்றங்களைச் செய்தனர். சமயம் என்பது மக்களுக்கு நன்நெறியைக் காட்டும் வழிகாட்டியாகவே விளங்குகிறது.

“சமயம் என்பது யாது? சமயம் என்பதற்கு நெறி, கொள்கை என்பனவாகச் சில பொருட்கள் உள்ளன. ஒருவர் அன்றாட வாழ்க்கையை ஒழுங்குபெற நடத்துவதற்குச் சில நன்னெறி அல்லது நற்கொள்கைகளை வகுத்துக் கொள்ள வேண்டும். அன்றேல் அவர்தம் வாழ்க்கை முறையோடு நடைபெறாது. இந்த நன்னெறிகளின் தொகுப்பே சமயம் எனச் செப்பப்படுகிறது’’[24] என்கிறார் ந.சுப்புரெட்டியார்.

எல்லாச் செயல்களிலும் கட்டுப்பாடு என்பது மிகமுக்கிய ஒன்றாகும். கட்டுப்பாடானது அகம், புறம் என இருநிலைகளிலும் நடக்கும். அகநிலையில் மனக்கட்டுப்பாடும், புறநிலையில் கொள்கைகள் கோட்பாடுகள் முதலியவற்றால் நிகழும் கட்டுப்பாடும் மிக முக்கியமானதெனலாம். சமயம் என்பது புறக்கட்டுப்பாட்டு நிலையைச் சார்ந்ததாகும். மனிதனைக் கட்டுப்படுத்தும் கொள்கைகள் கோட்பாடுகளை உள்ளடக்கியதாகவே சமயங்கள் திகழ்கின்றன.

“பண்டைக் காலத்திலிருந்தே மனித சமுதாயத்தை நல்வழிப்படுத்தி ஒருங்கிணைத்துச் செல்வதற்குச் சமயங்களும், அவை சார்ந்த கோவில்களும்

அருந்தொண்டாற்றி வந்திருக்கின்றன. இறையுணர்வு மக்களது மனதில் ஆழமாக வேரூன்றியதால், கண்ணையும், கருத்தையும் கவருகின்ற வகையில் இறைத் திருவுருவங்களைக் கோவில்களில் அமைத்து வழிபாடு செய்து வரலாயினர். சமய அறநெறிக் கருத்துக்களும், இறை வழிபாடும் இன்னல்கள் நிறைந்த வாழ்வினின்றும் விடுபட வைக்கும் சாதனங்களாக ஏற்றுக்கொள்ளப் பட்டிருக்கின்றன. இதனால்தான் மனித வாழ்க்கையில் நிகழும் முக்கியமான நிகழ்ச்சிகள் அனைத்தும் சமயத்துடனும், இறைவழிபாட்டுடனும், சமயச் சடங்குகளுடனும் பின்னிப்பிணைக்கப்பட்டிருக்கக் காணலாம்''[25] எனச் சமயமும் மனித வாழ்வும் பின்னிப் பிணைந்தது என்ற கூற்றை ஏகாம்பரநாதர் விளக்குவர்.

வழிபாடு என்பது தனித்தனி இனங்களுக்காகவும், குலங்களுக்காகவும் என ஏற்படுத்தப்பட்ட ஒன்றாகும். குறிப்பிட்ட இன, குல மக்களைச் சார்ந்தோர் மட்டும் அதில் பங்கேற்பர். ஆனால் சமயம் என்பது பல்வேறு இன, குல மக்களின் ஒருங்கிணைந்த அமைப்பாகும். சிதறிக் கிடந்த மனித இனத்தை ஒருங்கிணைக்க முயற்சித்ததன் வெளிப்பாடாக சமயம் என்ற அமைப்பு தோன்றியிருக்க வேண்டும். அதோடல்லாமல் ஒன்றிணைத்த மக்களை ஒழுங்குற வாழ்விக்கவும் சமயம் துணைபுரிகின்றது. சமயம் என்ற சொல்லை ஆராய முற்படும் போது, பல்வேறு அறிஞர்களும் வெவ்வேறான கருத்துக்களை முன் வைக்கின்றனர்.

“சமையம் என்பது சமைக்கப்பட்டது என்ற பொருளில் ஒரு தெய்வத்தை வழிபடுவதற்கு வகுக்கப்பட்ட நெறியினைக் குறிப்பதாகும். சமையம் என்ற சொல் சமயம் என்ற மருவிற்று. வடமொழியில் அச்சொல் நெறி என்றும் பொழுது என்றும் பொருள்படும். சமயம் என்ற தமிழ்ச்சொல் system என்ற ஆங்கிலச்

சொல்லின் பொருளைக் குறிப்பதாகும்''[26] என்கிறார் கா.சு.பிள்ளை. இக்கூற்றின் படி மனிதனைப் பக்குவப்படுத்த உருவாக்கப்பட்ட அமைப்பே சமயம் என்பதை அறியமுடிகிறது. மனிதன் எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்றில்லாமல், அவன் வாழ்வதற்கான ஒழுகலாறுகளை வகுப்பதாக சமயமானது விளங்குகின்றது. பெரும்பாலானோர் சமயம் என்பதை மதம் என்ற பெயராலும் குறிப்பிடுவர். சமயம், மதம் ஆகிய இரண்டும் சற்றேறக்குறைய ஒரு பொருள் உடையதாகவே விளங்குகின்றது.

“மதம், சமயம் என்னும் இரு சொல்லும் ஒரு பொருளனவாயினும், தம்முள் நுண்பொருள் வேறுபாடுடையன. ஒரு தெய்வத்தை அல்லது இறைவனை மதித்து வழிபடுவது மதம்; இறைவனை இன்மையிலேனும் மறுமையிலேனும் அடைவதற்குச் சமைவது சமயம். ஆகவே மதத்தினும் சமயத்திற்கு ஒழுக்கமும் நோன்பும் மிக வேண்டுவன வாம்''[27]

மேற்காண் மேற்கோளின் படி சமயம், மதம் என்ற இரண்டுமே ஒத்த பொருள் உடையனவாகவும், இறை வழிபாட்டை வெளிப்படுத்தும் விதமாகவும் பயன்படுத்தப்பட்டு வருகின்றன என்பது தெளிவாகிறது. அவற்றுள் சில நுண்ணிய வேறுபாடுகள் மட்டுமே காணப்படுகின்றன.

“ஆறு, நெறி, கொள்கை, மதம், சமயம் என்பன ஒருபொருட்சொற்கள், இவற்றுள் பின்னிரண்டும் வடமொழியென்னும் சமஸ்கிருதத்திலும் வழங்குவதாலும், அம்மொழி பிறமொழியினின்று கடன் கொள்ளாத தேவமொழியென்னும் நம்பிக்கை இடைக்காலத் தமிழருள்ளத்தில் பதிக்கப்பட்டிருந்ததாலும் அவ்விரு சொல்லும் வடசொல்லே யென்று இன்றும் கருதப்பட்டு வருகின்றன''[28] மதம், சமயம் இரண்டு சொற்களுமே தமிழ்ச் சொற்களாகத்தான் இருக்க முடியும். வடமொழியாளர் தங்களின் செல்வாக்கை

வளர்க்கும் பொருட்டே இவ்விரு சொற்களையும் சமஸ்கிருதச் சொற்களாக மக்கள் மனதில் பதிய விட்டனர். மதம், சமயம் இரண்டும் மனிதனின் வாழ்வியல் கட்டமைப்பிற்காகவும், அவன் தனது வாழ்வினை அடுத்த நிலைக்குக் கொண்டு செல்லும் தூண்டு கோலாகவும் செயல்படுத்தப்பட்டு வருகின்றன.

“சமயம் என்ற சொல் ‘வாழ்வை முழுமையாக்குவது’’ எனும் பொருளிலேயே இச்சொல்லுக்கு நிகரான ‘மதம்’ என்ற சொல்லும் வழக்கில் உள்ளது.’’[29]

மனிதனின் எண்ணங்களைத் தூய்மையாக்கவும், அவற்றை முழுமையாக்கவும் சமயங்களும் மதங்களும் தோற்றுவிக்கப்பட்டன. மனிதனின் கொள்கைகளைச் செயல்படுத்தும் வழிமுறைகளைக் கூறுவதாகவும் அமைகின்றன.

“மதம், மனிதன் அடைய விரும்பிய இலட்சியத்திற்கு அவனை இட்டுச் செல்வதோடு, அனைவருக்கும் வாழ்க்கை இலக்கினை கூட்டாக அடைய வழி சொல்லுகிறது. மனிதன் மதம் என்ற அமைப்பின் மூலம் சமூகம் என்ற அமைப்பைத் தெரிந்து கொண்டான். அதனால் அவனது சமூக உணர்வு மேம்பட்டு விளங்குகின்றது’’[30]

இவ்வாறாக மதம், சமயம் என்பவை ஒரு பொருள் கொண்ட இருசொற்களாகவே விளங்குகின்றன. இவைகளுக்குள் மிக நுண்ணிய வேறுபாடுகளே காணப்படுகின்றன. சமயமானது காலத்திற்கேற்பத் தன்னை புதுமைப்படுத்திக் கொள்வதாகவே உள்ளது. சமைக்கப்பட்டதே ‘சமையம்’ என்றும் பின்னர் சமயம் என்றும் மருவிற்று. ‘சமைக்கப்பட்டது’ என்பது பதப்படுத்தப்பட்டது. பக்குவப் படுத்தப்பட்டது எனப் பொருள் தருகின்றன.

இதில் மனிதனை தீய நெறியில் செல்லாமல் தீய எண்ணங்களை வளர்க்காமல் பக்குவப்படுத்த உருவான அமைப்பு முறையே சமயமாகும். மனிதனைக் கட்டுப்படுத்த, பக்குவப்படுத்த மனிதனால் உருவாக்கப்பட்டதே சமயம் எனப்படுகிறது.

**கடவுள்**

மனிதன் தொடக்கத்தில் இயற்கையை மட்டுமே வழிபட்டுக் கொண்டிருந்தான். இயற்கைதான் இவ்வுலகை இயக்குகிறது என்றும், இயற்கையால் தான் தம் வாழ்வும் இயங்குகிறது என்றும் எண்ணி இயற்கையை வழிபடத் தொடங்கினான். ஆரம்ப நிலையில் இயற்கையைக் கண்டு அஞ்சியும், பின் அதன் ஆற்றலைக் கண்டு அன்பும் கலந்து வழிபட்டான். காலங்கள் மாற மனிதனின் எண்ணங்களும் மாறின. இயற்கையில் தான் அதிசயத்தைவைகளுக்கு உருவம் கொடுக்க எண்ணியதன் வெளிப்பாடே கடவுள் ஆகும். "உலகளாவிய கடவுள் நம்பிக்கை, வழிபாடு, பூசை ஆகியவற்றைப் பொறுத்த அளவில், அவை அச்ச அடிப்படையிலும், அன்பு அடிப்படையிலும் எங்கும் தன்னிச்சையாகத் தோன்றித் தழைத்திருத்தல் வேண்டும்''[31] என்ற க.ப.அறவாணனின் கூற்று கடவுளின் தோற்றத்தை வெளிப்படுத்துவதாக அமைந்திருப்பதைக் காணலாம்.

இன்று காணும் பொருட்கள் யாவும் இன்னொரு நாள் இருப்பதில்லை. இன்று இல்லாத பொருள் இன்னொரு நாள் திடீரென காணப்படுகிறது. இவற்றைக் கண்ட மனிதன், இவையெல்லாம் இயல்பாக நடப்பதன்று. தனக்கு மீறிய, தன்னால் காணஇயலாத ஒரு சக்தி இவற்றை உருவாக்கியது, இயக்குகிறது என்ற எண்ணம் மனிதனின் அடிமனதில் தோன்றியதன் வெளிப்பாடாகவே கடவுள் என்ற ஒன்று உருவாகிறது. இதுபற்றி கா.சு.பிள்ளை

அவர்கள், “கடவுள் என்னும் மொழி இருபொருள் உடையது. (1) கடவுள் = எல்லாவற்றையும் கடந்த பொருள். இதனால் கடவுள் உயிரும் அன்று, உலகப் பொருள்களும் எதுவுமன்று. உலகப் பொருள் ஒன்றும் அன்றாதலின் அது உலகப் பொருள் போல அழிவதன்று, காணப்படுவடுவதன்று, உலகெலாம் அறிதற்கு அரியது என்ற கருத்துக்கள் தொடர்ந்தெழும் என்க. (2) கடவுதல் என்பது செலுத்துதல் என்னும் பொருளுடைமையால் எல்லா உலகத்தையும் உயிர்களையும் உள்நின்று செலுத்துவது அப்பொருள் என்பது முடியும்’’[32] என்று உரைப்பர். கடவுள் எல்லாவற்றையும் கடந்த பொருள் என்பதனால், இவ்வுலகில் உள்ள எந்தவொரு பொருளையும் ஒப்பிட முடியாத கண்களுக்குப் புலப்படாத ஒன்றாகவே இருக்கிறது என்பதும், உலகப் பொருள்களை உள்ளிருந்து இயக்குகிறது என்பதும் அறியமுடிகிறது. மேலும் கடவுள் என்பதைப் பற்றிக் கூறும் போது, “கடவுள் என்ற சொல் சிறந்த மெய்க்கருத்துக்களை அடக்கிக்கொண்டு நிற்கிறது. உலகெல்லாம் உணர்ந்து ஓதற்கரிய முதல்வனைக் குறிப்பதற்கு வேறு எந்தச் சொல்லும் அத்தகைய பொருத்தமுடையதென்று தோன்றவில்லை. காணப்படுகின்ற உலகத்தைக் கடந்த பொருள், மனதைக் கடந்து சொல்லைக் கடந்த பொருள் என்ற கருத்துக்களை அச்சொல் குறிக்கின்றது.’’[33] என்பதும் மேற்காண் கூற்றை ஒத்திருப்பதாகவே அமைந்துள்ளது.

கடவுள் என்ற சொல் இன்னும் பல பெயர்களால் அழைக்கப்படுகின்றன. அவ்வாறு அழைக்கப்படும் சொற்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பொருளை உணர்த்துவதாய் அமைந்துள்ளன. இதனை தேவநேயப் பாவாணர் “எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் கடவுள். எல்லா உலகங்களையும் ஆள்வதால் ஆண்டவன் என்றும், எங்குந் தங்கியிருப்பதால் இறைவன் என்றும்,

எல்லா உயிர்கட்கும் உணவைப் பகிர்ந்தளிப்பதால் பகவன் என்றும் பெயர் பெறுவன்’’[34] என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வாறாக இயற்கை வழிபாட்டின் அடுத்த நிலை, உருவ வழிபாடாக மாறுகிறது. இவ்வுருவ வழிபாடே கடவுள் வழிபாடு என்பதாக மாற்றமடைகிறது. கடவுள் என்பவள் எல்லாவற்றையும் கடந்தவன் என்றும், எல்லாவற்றையும் இயக்குபவன் என்றும், எல்லாவற்றினுள்ளும் இருப்பவன் என்றும் காணமுடியாத, கற்பனையில் அகப்படாதவன் என்றும் பொருள் கொள்ளப்படுகிறான்.

**சமய உருவாக்கம்**

வழிபாடு என்பதன் அடுத்தநிலை கடவுளாகவும், கடவுள் என்பதன் அடுத்தநிலை சமயம் என்பதாகவும் மாற்றமடைகிறது. சமயம் என்பது யாரால், எதற்கு, ஏன் தோற்றுவிக்கப்பட்டது என்று அறுதியிட்டுக் கூற இயலாது. உலகில் உள்ள சமயங்களில் ஒருசில சமயங்களே, தங்கள் சமய வரலாற்றினை முழுமையாகக் கொண்டுள்ளன. உலகில் பெரும்பாலான சமய வரலாறுகள் கிடைக்கவில்லை. சமய உருவாக்கத்திற்கு பல்வேறு காரணங்கள் சொல்லப்படுகின்றன. ஒவ்வொரு சமயத்தாரும் தங்கள் சமயம் தோன்றியதற்கு ஒவ்வொரு காரணங்களைக் கூறுகின்றன. ஆனால் பொதுவான நிலையில் சமயத் தோற்றமானது வழிபாட்டு முறையிலிருந்து வளர்ந்த நிலையாகவே கருதப்படுகிறது. ஒவ்வொரு நாட்டிற்கும், இனத்திற்கும், மொழியினருக்கும் என தனித்தனியான சமயங்கள் உள்ளன. தங்களின் வாழ்வியல் சூழலுக்கு ஏற்பவே சமயத்தைக் கட்டமைத்துக் கொள்கின்றனர்.

“ஒவ்வொரு மொழியும் அதைப்பேசுகிற மக்களின் கருத்துக்கும், பண்பாட்டிற்கும் ஏற்ப வளர்ச்சியடைகிறது. மக்களின் பண்பாடும், கருத்துக்களும் பெரும்பாலும் அவர்கள் சார்ந்துள்ள மதக் கொள்கையையொட்டி அமைகின்றன. பண்டைக் காலத்தில் இலக்கியங்களை வளப்படுத்துவதில் மதங்கள் முதன்மையாக இருந்தன. மதங்கள் வழியாக மக்களுக்குக் கொள்கைகள் வளர்ந்து, அந்தக் கொள்கைகள் அவர்களின் இலக்கியங்களிலே இடம் பெற்றன. தமிழ் மொழியும் பண்டைக் காலத்திலே சமயங்கள் சார்பாக வளம் பெற்றது’’[35] மதங்களே மக்களின் கருத்துக்களையும், பண்பாடுகளையும் நிர்ணயிக்கும் காரணிகளாக உள்ளன என்பதை மேற்கண்ட மயிலை சீனி, வேங்கடசாமி அவர்களின் கூற்றிலிருந்து அறியமுடிகிறது. மனிதனின் நம்பிக்கையைச் செயல்படுத்தும் நோக்கிலேயே சமயங்கள் அமைகின்றன. ஒவ்வொரு மனிதனுக்குள்ளும் அச்ச உணர்வானது இருந்து கொண்டுதான் உள்ளது. தான் செய்யும் செயல்களில் நடத்தைகளில் தவறுகள் இருப்பின், தன்னை மீறிய ஒரு சக்தி தன்னை தண்டிக்கும் என்ற எண்ணம் பெரும்பாலானோரிடம் இன்றளவும் உள்ளது. “மதம் மனிதனுடைய பய உணர்வு, மன அழுத்தம், குற்றவுணர்வு, இயற்கை பற்றிய பயம், ஆவிமீது கொண்ட நம்பிக்கை இவற்றின் வெளிப்பாடே ஆகும்’’[36] என்ற அ.செல்வநாதன் அவர்களின் கூற்று மதத்திற்கான மிகத் தெளிவான வரையறையைக் கூறுவதாக உள்ளது.

மதத்தின் நோக்கம் மனிதனை அனைத்து நிலைகளில் இருந்தும் காப்பது ஆகும். மனிதனுக்கு ஏற்படும் துன்பங்களை நீக்கி, நிறைவான இன்பத்தை விளைவிப்பதாகும். மனிதனைச் சூழ்ந்துள்ள ஆபத்துக்களை உணர்த்துவது, அதில் இருந்து விலக்குவது ஆகியவற்றிற்காகவே மதங்கள்

தோற்றுவிக்கப்படுகின்றன. "மனிதனுடைய பிறப்புமுதல் இறப்பு வரை அவன் படும் துன்பங்களில் அவனோடு இருந்து துன்பங்களுக்கான காரணங்களை விளக்கியும், தீய சக்திகளின் ஆளுகையைக் குறிப்பிட்டு அவற்றிலிருந்து விடுபட்டு வாழவும் மதங்கள் மனிதனுக்கு உதவுகின்றன''[37] என்பர் அ.செல்வநாதன். மனிதனின் அனைத்து நிகழ்வுகளிலும் மதங்களின் தாக்கம் இருந்து கொண்டுதான் உள்ளன என்பதை மேற்கண்ட கருத்துக்கள் உணர்த்துவதாக உள்ளது.

மதம் தோன்றிய முறையினை ஏழுவகையாக வகைப்படுத்துவர். அவை,

"1. அச்சம்

2. முற்காப்பு

3. நன்றியுணர்வு

4. பாராட்டு

5. அன்பு

6. கருதுகோள்

7. அறிவு வளர்ச்சி''[38]

என்பதாக அமைகிறது. அச்சத்தின் அடிப்படையிலே தான் வழிபாட்டு முறையானது தோன்றியது. வழிபாட்டின் அடுத்த நிலை கடவுளாகவும், பின்னர் சமயமாகவும் மாற்றமடைகிறது. தீய சக்திகளில் இருந்து தன்னைக் காக்க உதவும் அதீத சக்தியாகவும், அவ்வாறு காத்ததினால் அதன்மீது மனிதனுக்கு ஏற்பட்ட நன்றியுணர்வின் வெளிப்பாடாகவும், தான் செய்யும் நற்செயல்களை பாராட்டி ஊக்குவிப்பதாகவும், அன்பின் வடிவமாகவும், தன் வாழ்விற்கான வழியைத் தேர்ந்தெடுக்கும் கருதுகோளாகவும், அறிவு வளர்ச்சிக்குத் துணைநிற்பதாகவும் சமயம் (அ) மதம் அமைகிறது.

## தொகுப்புரை

வழிபாடுகளில் முதலில் தொடங்கியதாகக் கூறப்படுவது இயற்கை வழிபாடே ஆகும். இயற்கையை விளங்கிக் கொள்ள முடியாத நிலையில் அச்ச உணர்வுடன் அதனை வழிபடத் தொடங்குகிறான். இயற்கையின் ஆற்றலை உணர்ந்த பின்னர், அதன் வல்லமையை அறிந்து அன்பின் வெளிப்பாடாக வழிபடத் தொடங்குகிறான்.

இயற்கை வழிபாட்டை அடியொற்றியே நடுகல் வழிபாடும், முன்னோர் வழிபாடும், குலதெய்வ வழிபாடும் தோற்றம் பெறுகின்றன. நடுகல் வழிபாடானது பெரும்பாலும் இறந்த வீரர்களின் நினைவாக நடப்பட்டவைகளாகவே உள்ளன. குறிப்பாக ஆநிரை கவர்தல், மீட்டல் போன்ற போர்களின் இறந்த வீரர்களுக்கு நடப்பட்ட நடுகற்கள் பற்றிய செய்திகள் மிகுதியும் காணப்படுகின்றன.

முன்னோர் வழிபாட்டில் இறந்த தாய், தந்தையர்களின் நினைவாக வழிபடப்படும் முறை குறிப்பிடப்பட்டுள்ளது. இறந்தவர்களின் நினைவாகவும், அவர்களின் அருள் எப்பொழுதும் கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடனும் முன்னோர் வழிபாட்டு முறையானது அமைகின்றது.

முன்னோர் வழிபாட்டின் அடுத்த நிலையே குலதெய்வ வழிபாட்டு முறையாகும். முன்னோர் வழிபாடு காலங்கடந்த நிலையில் குலதெய்வ வழிபாடாக மாறுகிறது.

வழிபாடானது வளர்ச்சியடையும் போது சமயம் என்ற அமைப்பாக மாறுகிறது. சமயத்தின் மூலமாக கடவுள் என்ற ஒன்று கற்பிக்கப்படுகிறது.

எல்லாவற்றையும் கடந்தவன் கடவுள் என்றும், உலகில் உள்ள பொருட்களை உள்ளிருந்து இயக்குபவன் என்றும் பொருள் கொள்ளப்படுகின்றது.

கடவுள் என்பது சமயம் தோன்றுவதற்கு அடிப்படையாக அமைவது, மக்கள் நல்வழியில் நடக்கவும், ஒற்றுமையுணர்வை வளர்க்கவும் உதவுவது ஆகும்.

## அடிக்குறிப்புகள்

1. க.ப.அறவாணன், தமிழர் வழிபாட்டு மரபுகள், பக்.30–31.
2. மேலது, ப.23.
3. மேலது, ப.23.
4. சு.வெங்கடேசன், கலாச்சாரத்தின் அரசியல், ப.53.
5. வெ.கேசவராஜ், தென்னிந்திய நடுகற்கள், பக்.28–29.
6. க.ப.அறவாணன், தமிழர் வழிபாட்டு மரபுகள், ப.66.
7. சு.வெங்கடேசன், கலாச்சாரத்தின் அரசியல், ப.53.
8. புறம். 263: 5–8.
9. மேலது, 264: 1–4.
10. மேலது, 265: 1–5.
11. அகம்., 67: 6–10.
12. புறம்., 335: 9–12.
13. க.ப.அறவாணன், தமிழ்மக்கள் வரலாறு, ப.53.
14. மேலது, ப.52.
15. சாமி சிதம்பரனார், தமிழர் சமயம், ப.68.
16. க.ப.அறவாணன், தமிழ் மக்கள் வரலாறு, ப.56.
17. மேலது, ப.53.
18. மேலது, ப.57.
19. சு.வெங்கடேசன், கலாச்சாரத்தின் அரசியல், ப.53.
20. ஆறு.இராமநாதன், தமிழர் வழிபாட்டு மரபுகள், ப.24.
21. மேலது, ப.27.
22. சு.வெங்கடேசன், கலாச்சாரத்தின் அரசியல், ப.51.

23. ஆறு.இராமநாதன், தமிழர் வழிபாட்டு மரபுகள், ப.25.

24. ந.சுப்புரெட்டியார், சைவமும் தமிழும், ப.1.

25. ஏ.ஏகாம்பரநாதன், சோழர் காலத்தில் சமணசமய வளர்ச்சி, ப.251.

26. கா.சு.பிள்ளை, தமிழர் சமயம், ப.

27. தேவநேயப்பாவாணர், தமிழர் மதம், ப.3.

28. மேலது, ப.1.

29. இரா.சக்குபாய், சங்ககாலத் தமிழர் சமயம், ப.1.

30. அ. செல்வநாதன், மதங்களும் மனித ஒற்றுமையும், ப.30.

31. க.ப.அறவாணன், தமிழ்மக்கள் வரலாறு, ப.23.

32. கா.சு.பிள்ளை, தமிழர் சமயம், பக்.91–92.

33. மேலது, ப.45.

34. தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், ப.44.

35. மயிலை சீனி. வேங்கடசாமி, சமயங்கள் வளர்த்த தமிழ், ப.7.

36. அ.செல்வநாதன், மதங்களும் மனித ஒற்றுமையும், ப.25.

37. மேலது, ப.35.

38. தேவநேயப் பாவாணர், தமிழர் மதம், பக்.6–9.

# சங்கம் மருவிய இலக்கியங்களில் சமணம்

## முன்னுரை

தமிழ் அற இலக்கிய வளர்ச்சியில் சமணத்தின் பங்கு மிக முக்கியமானது ஆகும். தமிழில் உள்ள தொன்மையான அறஇலக்கியங்கள் பெரும்பான்மை சமணர்களால் இயற்றப்பட்டுள்ளன. சமணர்கள் அக இலக்கியங்களைவிட, அற இலக்கியங்களையும் இலக்கணங்களையும் மிகுதியும் படைத்துள்ளனர். சங்க காலத்தில் சமண சமயத்தின் தாக்கம் குறைவாகக் காணப்பட்டாலும், அதன் பின்னர் வந்த சங்கம் மருவிய காலத்தில் சமணம் மிகுதியான வளர்ச்சியை அடைந்தது. சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய பெரும்பாலான நூல்கள் சமணர்களால் படைக்கப்பட்டவை. சங்க இலக்கியங்களில் பெரிதும் ஆதிக்கம் செலுத்திய காதலும் வீரமும், சங்கமம் மருவிய இலக்கியங்களில் சமணர்களாலும் பௌத்தர்களாலும் புறந்தள்ளப்பட்டன. அனைத்தையும் விட அறமே மனித குலத்திற்கு இன்றியமையாதது என இவ்விரு சமயங்களும் கருதின. பிற சமயங்களை விட சமண சமயம் மிகுந்த கட்டுப்பாடுகளைக் கொண்ட சமயமாகும். இச்சமயம் இல்லற வாழ்வை விட துறவறத்தையே பெரிதும் வலியுறுத்தியது. அவ்வகையில் சங்கம் மருவிய இலக்கியங்களில் சமண அறக்கருத்துக்கள் இடம்பெற்றுள்ளதை ஆய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## சமண சமயத் தோற்றம்

இந்தியாவில் தோன்றிய சமயங்களில் முக்கிய சமயமாகக் கருதப்படுவது சமணமாகும். சமண சமயம் பன்னெடுங் காலத்திற்கு முன்பே தோன்றியிருந்தாலும் கூட மகாவீரரின் வருகைக்குப் பிறகு தான்

சிறப்பான நிலையை அடைந்தது எனலாம். சமண சமயம் ஜைனம், ஆருகதம், நிகண்டம், அநேகாந்தவாதம், ஸியாத்வாதம் என்ற பெயர்களாலும் அழைக்கப்படுகின்றன.

"சமணர் (ஸ்ரமணர்) என்றால் துறவிகள் என்பது பொருள். துறவை வற்புறுத்திக் கூறி, துறவு பூண்டோரே வீடுபெறுவர் என்று இந்த மதம் சாற்றுகிறது. எனவே, துறவு எனப் பொருள்படும் சமணம் என்னும் பெயர் இந்த மதத்திற்குச் சிறப்புப் பெயராக வழங்கப்படுகிறது. புலன்களையும் கர்மங்களையும் ஜயித்தவர் (வென்றவர்) ஆகலின் தீர்த்தங்களுக்கு ஜினர் என்னும் பெயர் உண்டு. ஜினரைக் கடவுளாக உடைய மதம் ஜைன மதம் எனப்பட்டது. சமண சமயக் கடவுளுக்கு அருகன் என்ற பெயரும் உண்டு. ஆகவே அருகனை வணங்குவோர் ஆருகதர் என்றும் இந்த மதத்திற்கு ஆருகத மதம் என்றும் பெயர் கூறப்படுகிறது.

சமணக் கடவுள் பற்றற்றவர் ஆதலின் நிர்க்கந்தர் அல்லது நிகண்டர் எனப்பட்டார். அது பற்றிச் சமண சமயம் நிகண்ட மதம் எனப் பெயர் பெற்றது. மதங்கள் ஏகாந்தவாதம் அநேகாந்தவாதம் என இருவகை. சமணம் ஒழிந்த ஏனைய மதங்கள் எல்லாம் ஏகாந்தவாத மதங்கள். சமணம் ஒன்றே அநேகாந்த வாதத்தைக் கூறுவது. ஆகவே இம்மதத்திற்கு அநேகாந்தவாத மதம் என்று பெயர் உண்டாயிற்று. ஸியாத்வாதம் என்றாலும் அநேகாந்தவாத மதம் என்றாலும் ஒன்றே. அசோக (பிண்டி) மரத்தைப் போற்றுவது சமணர் வழக்கமாதலின் சமணருக்குப் பிண்டியர் என்னும் பெயர் பெறப்படுகிறது''[1] என்று சமணத்தின் வேறு பெயர்களை விரிவாக விளக்குவர் மயிலை சீனி.வேங்கடசாமி.

சமண சமயத்திற்குப் பல்வேறு பெயர்கள் காணப்பட்ட போதிலும், அவைகள் காலப்போக்கில் அழிந்து, இன்று சமணம் என்ற பெயராலேயே அழைக்கப்படுகிறது. சமணம் கி.மு.6ஆம் நூற்றாண்டில் தோன்றியிருக்கக் கூடும் என்பது பல்வேறு அறிஞர்களின் கருத்தாகும். விருஷப தேவர் தான் சமண சமயத்தை தோற்றுவித்தார் என்பர். அதன் பின்னர் 23 தீர்த்தங்கரர்கள் சமண சமயத்தை வளர்த்தனர். அவர்களில் மகாவீரரின் பங்கு மிகமுக்கியமானதாகும். மகாவீரரைத் தவிர பிறதீர்த்தங்கரர்கள் பற்றிய செய்திகள் நம்பும்படியாக இல்லை. “இயற்கைக்கு ஒவ்வாத உயரத்தையும் நீண்ட ஆயுளையும் தீர்த்தங்கரர்களுக்குச் சமணர்கள் கற்பித்தனர்? சமண சமயத் தத்துவத்தின் படி சீவன் அல்லது உயிருக்கு அளவும் பருமனும் உண்டு. உயிரானது எந்த உடலைத் தன் உறைவிடமாகக் கொள்கிறதோ அந்த உடலின் பருமனுக்கு ஏற்றாற்போல் தன்னைப் பெருக்கிக் கொள்ளவும் சுருக்கிக் கொள்ளவும் உரித்தான தன்மையைப் பெற்றது. முன் யானையின் உடலில் இருந்த உயிர் பின் சிற்றெறும்பின் உடலில் புகநேரிட்டால் தன்னைச் சுருக்கிக் கொள்ளும். முன் சிற்றெறும்பில் இருந்த உயிர் பின் யானையின் உடலில் புகுந்தால் யானையின் பருமன் தன்னைப் பெருக்கிக் கொள்ளும். பழமொழி நானூறில் ‘பெரியதன் ஆவி பெரிது’ என்ற கருத்து பெய்யப் பெற்றுள்ளது. எனவே, இருபத்திரண்டு தீர்த்தங்கரர்களுக்கும் அதிக உயரத்தையும் நீண்ட ஆயுளையும் கற்பித்தது அவர்கள் பெரியோர் என்ற கருத்தை வலியுறுத்தியதாக இருக்கலாம்’’[2] என்பர் ஆர்.பார்த்தசாரதி.

பண்டைக்கால பெரியோரின் வரலாற்றைக் கூறும்போது மிகைப்படுத்திக் கூறும் வழக்கம் மக்களிடம் இருந்துள்ளது. எல்லாச் சமயங்களிலும் இந்நிலையினைக் காணலாம். சமணர்கள் கூறும் 22 தீர்த்தங்கரர்களைப் பற்றிய

கதைகள் கற்பனைக் கதைகள் என்று எடுத்துக் கொண்டாலும் 23, 24–வது தீர்த்தங்கரர்கள் பற்றிய வரலாறு உண்மை என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி. “முதல் இருபத்திரண்டு தீர்த்தங்கரர்களைக் கற்பனைப் பெரியார் என்று ஒதுக்கிவிட்டு முறையே 100 ஆண்டும் 72 ஆண்டும் உயிர் வாழ்ந்தவராகக் கூறப்படுகிற கடைசி இரண்டு தீர்த்தங்கரர்களாகிய பார்சுவநாதரையும் மகாவீரரையும் உலகத்தில் வாழ்ந்திருந்த உண்மைப் பெரியார் என்றும் கொண்டு, இவர்கள் காலத்தில் தான் சமண மதம் தோன்றியிருக்க வேண்டும்’’[3] என உறுதிபட உரைக்கின்றார்.

சமண சமயம் தோன்றிய காலநிலையினைச் சரிவரக் கண்டறிய முடியாவிட்டாலும், சமணத்தை வளர்ந்து உலகறியச் செய்தது பார்சுவநாதரும் மகாவீரருமே ஆவார்கள். பார்சுவநாதர் கி.மு.8ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். இவருக்குப் பின்னர் 250 ஆண்டுகள் கி.மு.6ம் நூற்றாண்டில் தோன்றிய மகாவீரர் 72 ஆண்டுகள் உயிர் வாழ்ந்திருக்கிறார்.

மகாவீரர் பற்றி மேலும், “இச்சைகளின்றும் நீங்கித் தலையறுத்து உயிர்க்குறுதி பயக்க அன்று முயன்று கொண்டிருந்த ‘நிக்கந்தர்’ என்போரால் தலைவராக ஆசானாக ஏற்றுக்கொள்ளப்பட்டார். அவருக்கு முன்னோடி என்று கருதப்பட்ட பார்சுவநாதர் அறிவுரைகளையும் கொள்கைகளையும் புதுக்கியும் பெருக்கியும் மக்களுக்குக் கற்பிக்கத் தொடங்கினார். சிதறிக் கிடந்த சமண சமயக் கொள்கைகள் அனைத்தையும் ஒருமுகப்படுத்தி சமண சமயத்தை ஒரு தனிச் சமயமாக உருவாக்கிய பெருமை அவரைச் சாரும்’’[4] என்று விளக்குவர். இவ்வாறு சமண சமயம் வளர்த்தெடுத்ததில் மகாவீரரின் பங்கு மிகவும் இன்றியமையாததாகும்.

**சமண சமய நெறிகள்**

சமண சமயமானது துறவிகள், இல்லறத்தார் கடைபிடிக்கவேண்டிய நெறிமுறைகள் பலவற்றை வகுத்துள்ளது. இச்சமண நெறிகள் இந்தியாவில் உள்ள பிற சமய நெறிகளைக் காட்டிலும் வேறுபட்டத் தன்மையுடையதாகவே காணப்படுகின்றன. சமண நெறிகளை நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என மூன்றாக வகைப்படுத்துகின்றனர். இம்மூன்றும் சமணர்களால் மும்மணிகள் என அழைக்கப்படுகின்றன. முதலில் நற்காட்சியும் அதன்வழி நல்ஞானமும் அதன் அடுத்த நிலையில் நல்லொழுக்கப் பாதையில் பயணிப்பதுமே சமண நெறியின் சாராம்சமாக விளங்குகின்றது. இவைமட்டுமல்லாது இன்னும் பல ஒழுக்க முறைகளையும் நோன்புகளையும் சமணம் முன்மொழிகிறது. இதுபற்றி நா.சுப்பிரமணியன், ‘‘நற்கடைப்பிடி, நல்லறிவு, நல்லொழுக்கம் என்பன அணுகுமுறைகள் : அஹிம்சை, பொய்யாமை, கள்ளாமை, பிரம்மச்சரியம், உலகைத் துறத்தல், கற்பு, உளநிறைவு என்பன நோன்புகள். இவற்றுள் பிரம்மச்சரியம், உலகைத் துறத்தல் என்பன துறவு நெறியினருக்கும், கற்பு, உளநிறைவு என்பன இல்லற நெறியினர்க்குமாகப் பேசப்படுபவை’’[5] என்று குறிப்பிட்டு விளக்குவர்.

**நற்காட்சி**

நற்காட்சி என்பது சம்யக் தரிசனம் என்பதன் தமிழாக்கத் தொடராகும். உண்மையான சித்தாந்தத்தைக் கண்டு கொள்ளவும் சமணர்கள் போதித்துள்ள சித்தாந்தத்தை ஏற்று அதில் முழு ஈடுபாட்டோடு செயல்படுவதுமே நற்காட்சியாகும். இதனை அருங்கலச் செப்பானது பின்வருமாறு வரையறுக்கிறது.

“மெய்ப்பொருள் தேறுதல் நற்காட்சி என்றுரைப்பர்

எப்பொருளும் கண்டுணர்ந் தார்’’[6]

என்று நற்காட்சிக்கு இலக்கணம் கூறும் அருங்கலச் செப்பு அதன் உறுப்புகள் எட்டினைப் பற்றியும் கூறுகிறது.

“எட்டுவகை உறுப்பிற் றாகி இயன்றது

சுட்டிய நற்காட்சி தான்’’[7]

“ஐயம் அவாவே உவர்ப்பு மயக்கின்மை

மெய்பெற இன்னவை நான்கு’’[8]

“அறப்பழி நீக்கல் அழிந்தாரைத் தாங்கல்

அறத்துக்கு அளவளா மூன்று’’[9]

ஐயம் இன்மை, அவா இன்மை, உவர்ப்பு இன்மை, மயக்கம் இன்மை, அறப்பழி நீக்கல், அழிந்தாரைத் தாங்கல், அளவளாவல் இந்த ஏழுடன் அறம் விளக்கல் என்பதையும் சேர்த்து நற்காட்சியானது எட்டு உறுப்புகளைக் கொண்டதாக உள்ளது.

**ஐயம் இன்மை**

ஒருமித்த உணர்வோடும் அறிவோடும் சமண சமய நெறிகளுக்குள் தன்னை ஈடுபடுத்திக் கொள்வதே ஐயம் இன்மையின் இயல்பாகும். இதனை,

“மெய்ந்நெறிக்கண் உள்ளம் துலக்கின்மை காட்சிக்கண்

ஐயம் இலாத உறுப்பு’’[10]

என அருங்கலச் செப்பு கூறுகிறது. உண்மை நெறியில் மனம் எந்த நிலையிலும் தன்னிலை மாறாது நிலைத்து இருத்தல் வேண்டும் என்பதாக ‘ஐயம் இன்மை’ அமைகிறது.

**அவா இன்மை**

இவ்வுலகில் காணப்படுகின்ற பொருட்களின் நிலையாமைத் தன்மையை அறிந்தும், அவற்றால் வாழ்வில் ஏற்படும் உணர்வுகளின் நிலையாமைத் தன்மையை அறிந்தும் அதன் மீதான அவாவினை அறுத்து வாழ்தலே 'அவா அறுத்தல்' ஆகும்.

''தடுமாற்ற இன்பக்கு இறவாமை ஆகும்
வருமாற்று அவா இன்மை நற்கு''[11]

என்ற அருங்கலச் செப்பின் நூற்பா, 'பிறவி சுகத்தில் பற்றில்லாமலும் இல்லற சுகத்தில் நம்பிக்கை வைக்காமலும் இருத்தலே அவா இன்மை' என்கிறது.

**உவர்ப்பு இன்மை**

உடலும் உணர்வும் நிலையில்லாதவை என்பதை உணர்ந்து, அதனை மும்மணிகளால் தூய்மைப்படுத்தி, நல்ல இயல்புகள் மற்றும் நல்ல குணங்களின் மீது ஈடுபாடு கொள்ள வைப்பதே 'உவர்ப்பு இன்மை' என்பதன் இயல்பாகும்.

''பழிப்பில் அருங்கலம் பெய்த உடம்பு என்று
இழிப்பு இன்மை மூன்றாம் உறுப்பு''[12]

உடல் நிலையில்லாதது என்பதாலும் உணர்வு நிலையில்லாதது என்பதாலும் அதன் மீது வெறுப்பு கொள்ளல் கூடாது. அதனை நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்பதன் வழி தூய்மைப்படுத்தி அருவறுப்பு கொள்ளாமல் இருத்தல் வேண்டும்.

**மயக்கின்மை**

தீயவழியில் செல்லும் உயிர்களிடம் மனதாலும் சொல்லாலும் பணிவு கொள்ளுதலும், போற்றுதலும், வணங்குதலும், புகழ்தலும் செய்யாது இருத்தல் மயக்கின்மை ஆகும்.

''பாவ நெறியாளரைச் சேர்ந்த மதிப்பின்மை
மோவம் இலாத உறுப்பு''[13]

தீய வழியில் செல்பவனை மதித்தல் கூட செய்யக் கூடாது என்பதை வலியுறுத்துவதாக மயக்கின்மை அமைகிறது.

**அறப்பழி நீக்கல்**

சமண அறநெறியான மும்மணிகளை கடைபிடிப்போர் தமக்கு வரும் இன்னல்களில் இருந்து நெறி பிறழாமல் அறத்தின்வழி நின்று தமக்கு வரும் பழியை நீக்கலே அறப்பழி நீக்கல் எனப்படுகிறது.

''அறத்துக்கு அலர்களைதல் எவ்வகையாயினும்
திறத்தின் உவகூ வனம்''[14]

என்ற அருங்கலச் செப்பின் வரிகள் சமணர்களின் அறப்பழி நீக்கலை விவரிப்பதாக அமைந்துள்ளது.

**அழிந்தாரைத் தாங்கல்**

சமணர்கள் தாங்கள் கடைபிடித்து வந்த மும்மணிப் பாதையில் இருந்து விலகியதால், அவர்களின் வாழ்வில் ஏற்படும் அழிவு நிலையில் இருந்து அவர்களைக் காத்து, அறத்தின் வழி நெறிப்படுத்துதலே அழிந்தாரைத் தாங்கல் எனப்படுகிறது. இதனை,

“அறத்தின் தளர்ந்தாரை ஆற்றின் நிறுத்தல்
சிறப்புடை ஆறாம் உறுப்பு’’[15]

என்ற அடிகளின் மூலம் அறியலாம்.

**அளவளாவல்**

வீடுபேறு அடைவதற்கான பாதையில் செல்ல விரும்புபவர்கள் உடன் இருக்கும் அறவோர்களிடம் எவ்விதமான வெறுப்பு உணர்வும் கொள்ளாமல், அவர்களிடம் நல்லுணர்வோடு, தக்க மரியாதையும் காட்டுதல் என்பதையே “அளவளாவல்’ என்கிறது சமணம்.

“ஏற்ற வகையின் அறத்துள்ளார்க் கண்டுவத்தல்
சாற்றிய வச்சனம் மாண்பு’’[16]

சமண அறநெறிகளைக் கடைபிடிப்பாரிடத்தில் மதிப்புடனும் மகிழ்வுடனும் மரியாதையுடனும் இருத்தல் வேண்டும் என்கிறது அருங்கலச் செப்பு.

**அறம் விளக்கல்**

இருண்மை நெறிக்குள் நம் மனதையும் உடலையும் செல்ல விடாமல் அறநெறியின்கண் அதனை நிலைநிறுத்தி அறநெறியை உரைத்தலும் உணர்தலுமே அறம் விளக்கல் எனப்படுகிறது.

“அறத்தின் பெருமையை யார்க்கும் உரைத்தல்
அறத்தை விளக்குதல் நற்கு’’[17]

அறியாமை நெறியில் உள்ளவர்களுக்கு, அவ்வறியாமையை நீக்கி அறநெறியை விளக்குதலே அறம் விளக்கல் என்பதாக அமைகிறது.

ஐயமின்மை முதல் அறம் விளக்கல் வரை உள்ள எண்வகை உறுப்புகளைக் கொண்டதாக நற்காடசியானது அமைகிறது. சமண நெறியை கடைபிடிக்க விரும்புவோர் முதலில் நற்காட்சியின் உறுப்புகளைக் கடைபிடித்தல் அவசியமாகும்.

**நல்ஞானம்**

நல்ஞானம் என்பது சம்யக் ஞானம் என்பதன் தமிழாக்கம் ஆகும். இது நல்லறிவு எனவும் பொருள் கொள்ளப்படுகிறது. நற்காட்சியின் அடுத்த நிலையில் உருவாவதே நல்ஞானம் எனப்படுகிறது. இதனை,

“எந்தப் பொருளை குறைதலும் கூடுதலும் இல்லாமல் அதன் நிலையிலேயே (எப்படி உள்ளதோ அப்படியே) மாறுபாடு இல்லாமல் ஐயமின்றி அறியப்படுகிறதோ அந்த அறிவை ஆகம அறிவுடைய மகா புருஷர்கள் ‘ஸம்யக் ஞானம்’ எனக் குறிப்பிடுவர்’’[18] என்று சு.மாதவன் அவர்கள் கூறுகிறார். ஒருவனுக்கு மன உறுதிப்பாட்டை அளிப்பதே நல்ஞானம் எனப்படுகிறது. நல்ஞானம் அடையப் பொற்றவன் எந்த ஒரு கருப்பொருளையும் (நுண்பொருள்) பருப்பொருளையும் நன்கு புரிந்து கொள்வான். இதனை அருங்கலச் செப்பானது,

“பொருள்நின்ற பெற்றியைப் பொய்யின்று உணர்தல்
மருளறு நன்ஞான மாண்பு’’[19]

என்கிறது. அதாவது, உலகில் உள்ள உயிர் முதலான பொருள்களின் இயல்பை உள்ளது உள்ளபடி உணர்தலே நல்ஞானம் என்றாகிறது. இந்த நல்ஞானத்தை அடைவதற்கான நான்கு நெறிகளைச் சமணம் வகுத்துள்ளது. அவை ‘நான்கு அநுயோகங்கள்’ என அழைக்கப்படுகின்றன. அவை,

1. பிரதம அநுயோகம்
2. கரண அநுயோகம்
3. சரண அநுயோகம்
4. திரவிய அநுயோகம்

என்பனவாம்.

**பிரதம அநுயோகம்**

நல்ஞானத்தை அடைவதற்கான முதன்மையான படிநிலை பிரதம அநுயோகம் என்பதாகும். காணுகின்ற காட்சியின் மீது எவ்வித ஐயப்பாடும் இல்லாமல் தெளிந்த நிலையில் காணும் ஞானமாக பிரதம அநுயோகம் அமைகிறது. இதனை,

“நல்ஞானம் பெற உலகியல், உயிரியல் ஆகியவற்றின் இயல்பியல் அறிவது அவசியமாகிறது. உயிர் முதலாய மெய்ப்பொருள்கள் ஆறு ஆகும். இவை மித்யா திருஷ்டி (பொய்க்காட்சி) ஜீவன்களுக்கு மயக்கம் தீர்க்கும் முதன் மருந்தாக அமைந்துள்ளமையால் ‘பிரதம அநுயோகம்’ எனப் பெயர் பெற்றது”[20] என்கிறார் சு.மாதவன். முழுதும் உணர்ந்த ஞானத்தால் கிடைக்கப்பெறும் காட்சிகளின் தன்மையை அறிதலும், உணர்தலுமே ‘பிரதம அநுயோகம்’ எனப்படுகிறது.

**கரண அநுயோகம்**

கணிதம், பரிணாமம், உறுப்பு என்ற பொருள்களைத் தருவதாக ‘கரணம்’ என்ற சொல் அமைகிறது. உலக அமைப்பையும் காலத்தையும் அணுக்களையும் பற்றிய துல்லியமான அளவுகளைத் தரும் காரணத்தால் இது ‘கரண அநுயோகம்’ எனப்படுகிறது. இதனை,

"உலகின் கிடக்கையும் ஊழிநிலையும்
மலைவு இன்றி உரைப்பது நூல்''[21]

என்கிறது அருங்கலச் செப்பு.

**சரண அநுயோகம்**

மனதில் எழுகின்ற எண்ணங்களை தூய்மையடையச் செய்வதற்கான பயிற்சியாக 'சரண அநுயோகம்' அமைகிறது. இந்நிலையை அடைவதற்கு இல்லறத்தை விட துறவறமே சிறந்ததாகும். இதனை,

"இல்லறம் ஏனைத் துறவறம் என்றிவற்றைப்
புல்லவை உரைப்பது நூல்''[22]

என்பதன் வழி அறியலாம். ஆசையைத் துறப்பதற்கு இல்லறத்தை விட துறவறமே சிறந்தது என்பதை விவரிப்பதாக 'சரண அநுயோகம்' அமைகிறது.

**திரவிய அநுயோகம்**

மக்கள் தூய்மையான எண்ணத்தினால் உண்மையான விரதத்தையும், ஒழுக்கத்தையும் கடைபிடித்து ஆன்ம நிலைக்குத் தன்னை நெறிப்படுத்திக் கொள்ள வேண்டியதன் அவசியத்தைக் கூறுவதாக இந்த அநுயோகம் அமைகிறது.

"கட்டொடு வீடும் உயிரும் பிறபொருளும்
முட்டின்றிச் சொல்வது நூல்''[23]

உயிர், புற்கலம், தன்மம், அதன்மம், ஆகாயம், காலம் ஆகிய ஆறு பொருள்களை யாரும் ஆக்கவும் இல்லை; அழிப்பதும் இல்லை. இவை

காலங்காலமாக தானாகவே இயங்கி வருகின்றன. இவற்றை உணர்த்துவதே 'திரவிய அநுயோகம்' எனப்படுகிறது.

மேற்கண்ட நான்கு அநுயோகங்களைக் கடைபிடித்தால் சமணர்களின் நல்ஞான நெறியைப் பெற்று நல்லொழுக்க நிலையை அடையலாம்.

**நல்லொழுக்கம்**

நல்லொழுக்கம் என்பது சம்யக் சாரித்திரம் என்பதன் தமிழாக்கத் தொடர் ஆகும். நற்காட்சியின் வழி நல் ஞானம் உண்டாகி நல்ஞானத்தின் வழி நல்லொழுக்கம் நிலைபெறும் என்பதே சமண அறமாகும். இதுபற்றி சு.மாதவன் அவர்கள் "நற்காட்சி தந்த கருத்துநிலை முடிவுகளை நல்ஞானம் செயல் நிலைக்கு ஏற்றவை என உறுதிப்படுத்த, அச்செயல் நிலையின் உயிர்நிலையாக நின்று இயங்குவது நல்லொழுக்கமாகும். எனவே நற்காட்சி தோற்ற நிலையாகவும், நல்ஞானம் வளர்நிலையாகவும், நல்லொழுக்கம் முழுமை நிலையாகவும் அமைகின்றன''[24] என்கிறார்.

நற்காட்சிகளால் கிடைக்கப்பெற்ற நல்ஞானம் காட்டுகின்ற நெறியின்படி வாழ்வதே நல்லொழுக்கம் எனப்படுகிறது. இதனை,

"காட்சியுடையார் வினைவரும் வாயிலின்
மீட்சியா நல்லொழுக்கு நன்று''[25]

என்ற அடிகள் விரிவாக விளக்கும்.

பற்று, வெறுப்பு என்ற இரண்டுமே மானுட இயல்பை அழிக்கும் தன்மை உடையதாகும். ஒன்றன் மீதான பற்று நிறைவேறாத போது அதன் மீது வெறுப்பு வருகிறது. பற்று நிறைவேறினாலும் அதனால் ஏற்படும் மயக்கத்தின்

காரணமாகவும் வெறுப்பு ஏற்படும். எனவே பற்றானது வெறுப்பைத் தூண்டும் விளைநிலமாகும். இதனை நீக்கும் நல்லொழுக்க நெறியாக நல்லொழுக்கம் அமைகிறது. நல்லொழுக்க வகைகளாவன,

1. அணுவிரதம், 2. குணவிரதம், 3. சிக்கா விரதம் என்ற மூவகையாகப் பகுக்கப்படுகின்றன.

அணுவிரதத்தில் கொல்லாமை, பொய்யாமை, திருடாமை, பிரமச்சரியம் முதலியவை அமைகின்றன. குண விரதத்தில் மாவிரதம், அனர்த்த தண்ட விரதம், பரிமாண விரதம் என்ற மூன்று வகைகள் காணப்படுகின்றன. இவற்றில் மாவிரதமானது அணுவிரத வகைகள் நான்கினோடு அவா அறுத்தலையும் சேர்த்து ஐந்தாகக் கொள்ளப்படுகிறது. அனர்த்த தண்ட விரதமானது,

1. விருப்பு, வெறுப்பிலிருந்து நீங்குதல்
2. தீமையான நினைப்புகளை நீக்குதல்
3. விலங்குகளை வேலைக்குப் பயன்படுத்துவதைத் தவிர்த்தல்
4. பயனின்றி மரம் முதலியவற்றை வெட்டுவதைத் தவிர்த்தல்
5. மண்ணைத் தோண்டாமை
6. இம்சை தரும் பொருட்களைப் பிறர்க்குக் கொடுக்காமை
7. பாவ உரைகளைக் கேளாமை

என்ற ஏழு கூறுகளை உள்ளடக்கியதாக அமைகிறது. பரிமான விரதமானது,

1. கள்ளுண்ணாமை
2. தேனுண்ணாமை
3. வேப்பம்பூ, இஞ்சி, வெண்ணெய், அத்திப்பழம் போன்ற உண்ணத் தகாதவற்றை நீக்குதல்.
4. நியமங்களைப் பின்பற்றுதல்

என்ற நான்கு நிலைகளை உள்ளடக்கியதாக அமைகின்றன. சிக்கா விரதமானது,

1. பஞ்ச பாபங்களிலிருந்து நீங்குதல்
2. தூய தியானநிலை நிற்றல்
3. நன்றின்பால் உய்த்தல்
4. நிலையாமை உணர்தல்
5. ஆசையை நீக்குதல்
6. ஆகமம் கேட்டல், சிந்தித்தல், பிறர்க்கு உரைத்தல்
7. எல்லை சுருக்கி வாழ்தல்
8. உணவு, மருந்து, ஆவாசம், உபகரணம் ஆகியவற்றைத் தானமாகக் கொடுத்தல்

என்ற எட்டு நிலைகளில் கடைபிடிக்கப்படுகிறது. இவ்வாறாக அணுவிரதம், குணவிரதம், சிக்கா விரதம் என்ற முப்பெரும் கூறுகளை உள்ளடக்கியதாகச் சமணர்களின் நல்லொழுக்கமானது அமைகிறது. சமண நெறியைக் கடைபிடிப்பவர்கள் இந்நல்லொழுக்க நெறியைப் பற்றுதல் மிகவும் அவசியமானதாகும். இவைமட்டுமல்லாது,

ஆன்ற பொறுமை, அன்ற மென்மை, ஆன்ற இன்மை, ஆன்ற ஒப்புகை, ஆன்றவாய்மை, ஆன்ற அடக்கம், ஆன்ற ஒருமைநிலை, ஆன்ற பற்றின்மை, ஆன்ற ஒன்றின்மை, ஆன்ற துறவு என்ற பத்து வகைப்படும் தச தர்மங்களையும் சமணர்கள் கடைபிடித்தல் அவசியமானதாகும்.

சமண சமயத்தில் வீடுபேறு அடைவதற்குக் கடுமையான ஒழுக்க முறைகளை மேற்கொள்ளுதல் அவசியமாகும். சமணர்களின் மும்மணிகளான

நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் ஆகியவற்றின் செயன்மை நெறிகள் அனைத்தும் சேர்த்து இருபத்தெட்டாக வகைப்படுத்துவர். இதனை, “பிறவியை நீக்கி, வீடுவேறு பெறுவதை நோக்கமாகக் கொண்டு உலகத்தைத் துறக்கும் சமண முனிவர் தமது துறவற வாழ்க்கையில் மேற்கொண்டொழுக வேண்டிய ஒழுக்கங்கள் இருபத்தெட்டாகும். இவ்விருபத்தெட்டினையும் மூலகுணங்கள் என்பர். அவையாவன :- மாவிரதங்கள் ஐந்து; சமிதி ஐந்து; ஐம்பொறி அடக்கம் ஐந்து; ஆவஸ்யகம் ஆறு; லோசம், திகம்பரம், நீராடாமை, பல் தேய்க்காமை, தரையிற் படுத்தல், நின்று உண்ணல், ஒருவேளை உண்ணல், ஆக இருபத்தெட்டாம்’’[26] என்ற மேற்கோளின் வழி மயிலை சீனி.வேங்கடசாமி தெளிவாக்குவர். இவ்விருபத்தெட்டு நெறிமுறைகளும் சமணர்கள் கடைபிடிக்க வேண்டிய நெறிகள் ஆகும். சமணர்களின் நெறிகளில் முக்கியமானது மாவிரதங்கள் என்பதாகும். இம்மாவிரதங்களை இல்லறத்தார் துறவறத்தார் என அனைவரும் கடைபிடித்தல் அவசியம் என்கிறது சமணம்.

“விரதங்கள் என்பவை புறநிலை விரதங்கள், அகநிலை விரதங்கள் என இருவகைப்படும். புறநிலை விரதங்கள் எனப்படுபவை நீராடல் ஒரு வேளை உண்ணல் போல்வன. அகநிலை விரதங்கள் எனப்படுபவை வாழ்வியல் நடைமுறை விழுமியங்களைக் கடைபிடிப்பதாகும். இத்தகைய அகநிலை விரதங்களைக் கடைபிடிப்பதில் மிதமான போக்கும் தீவிரமான போக்கும் காணப்படுகின்றன. சமணம் தீவிரமான போக்கைக் கடைபிடிக்கும் சமயமாகும். எனவேதான் கேவலஞானம் எய்த முயலும் சமண முனிவர் கடைபிடிக்கும் விரதங்களை மாவிரதங்கள் என்கின்றனர். சாவக தர்மத்தைப் பின்பற்றும் இல்லற நெறியினரும் பின்பற்ற வேண்டியனவாக வலியுறுத்தப்படும் இம்மாவிரதங்களை அதன் இலகுவான தரப்படிநிலையில் இல்லற

நெறியினரும், கடுமையான தரப்படிநிலையில் துறவு நெறியினரும் பின்பற்ற வேண்டுமென சமயம் வரையறுத்துள்ளது.’’[27]

சமண சமயத்தாரால் இல்லறம் துறவறம் என்ற இருநிலையிலும் மாவிரதங்கள் கடைபிடிக்கப்படுகின்றன. சமண சமயத்தின் தொடக்கப் படிநிலையாக இம்மாவிரதங்கள் அமைகின்றன. கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிரம்மச்சரியம், அவா அறுத்தல் ஆகிய ஐந்து மாவிரதங்களும் சங்கம் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் கொல்லாமை**

சமண நெறிகளில் மிக முக்கியமானது கொல்லாமையாகும். பிறசமயங்களை விட சமணம் கொல்லாமை அறத்தை மிகத் தீவிரமாக வலியுறுத்துகிறது. ஓரறிவு முதல் ஆறறிவு வரை எந்த உயிரையும் கொல்லுதலும், கொல்லச் சொல்லுதலும், கொல்ல நினைப்பதும் தவறு என்கிறது சமணம். ‘அகிம்சா பரமோ தர்ம’ எனப்படும் கொல்லாமையானது இன்னா செய்யாமை, புலால் உண்ணாமை, அருளுடைமை என பல கூறுகளை உள்ளடக்கியதாகும். கொல்லாமை அறத்தை கடைபிடிக்க ஐந்து சமிதிகளைச் சமணம் கூறுகின்றது. தரையில் நடக்கும் போது ஈ, எறும்பு, புழு, பூச்சிகளுக்கு தீங்கு நேராத வண்ணம் மயிற்பீலி குஞ்சத்தை வைத்து கூட்டிச் செல்லுதலை ‘ஈர்யா சமிதி’ என்கின்றனர்.

குற்றமில்லாத உணவுகளை யாசித்து உண்ணலை ‘ஏஷணா சமிதி’ என்கின்றனர். சமண முனிவருக்குரிய நூல், குஞ்சம், கமண்டலம் முதலியவற்றை எடுக்கும் போதும் வைக்கும் போதும் எந்த சிற்றுயிர்களுக்கும் தீங்கு நேராதபடி செயல்படுவதை ‘ஆதனா நிஷேபனா சமிதி’ என்கின்றனர்.

நாவடக்கம் அல்லது வாக்கடக்கம் முதலியவற்றை வலியுறுத்துவதை 'பாஷா சமிதி' என்கின்றனர். ஆள் நடமாட்டம் இல்லாத, உயிர்களைக் கொல்லாத வழியில் மலமூத்திரம் கழிப்பதை 'உத்சர்க்க சமிதி' என்கின்றனர். மேலும் அருங்கலச் செப்பானது கொல்லாமை பற்றி,

"இயங்குயிர் கொல்லாமை ஏவாமை ஆகும்

பெருங்கொலையின் மீட்சி எனல்''[28]

என்று உரைக்கின்றது.

பிற உயிர்களைக் கொல்லுதலையோ துன்புறுத்தலையோ, தாமே செய்தல், பிறரைக் கொண்டு செய்தல் அல்லது பிறர் செய்வதற்கு உடன்படுதல் என்ற மூன்று நிலைகளிலும் கொல்லாமை அறத்தைப் பேண வேண்டும்.

**திருக்குறளில் கொல்லாமை**

அற இலக்கியங்களில் முதன்மையாகப் போற்றப்படுவது திருக்குறள் ஆகும். திருக்குறள் எல்லா சமயத்தாராலும் மதித்துப் போற்றப்படக் கூடிய நூலாக விளங்குகின்றது. திருக்குறளில் சமணர்களின் கொல்லாமை அறம் சார்ந்த குறள்கள் தனித்தனி அதிகாரங்களாக வைத்து வலியுறுத்தப்படுகின்றன. புலால் மறுத்தல், கொல்லாமை, இன்னாசெய்யாமை, அருளுடைமை முதலிய அதிகாரங்கள் கொல்லாமை பற்றியே பேசுகின்றன. புலால் மறுத்தல் அதிகாரத்தில்,

"தன்னூன் பெருக்கற்குத் தான்பிறி தூனுண்பான்

எங்கனம் ஆளும் அருள்''[29]

என்ற குறள் தொடங்கி,

“கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி
எல்லா உயிரும் தொழும்’’[30]

என்ற குறள் முடிய உள்ள பத்து குறள்களும் புலால் உண்பதையும், பிற உயிர்களைக் கொள்வதையும் கண்டிப்பதாகவே அமைந்துள்ளன.

‘தன் உயிரைப் பருக்க வைப்பதற்காக, மற்றோர் உயிரைக் கொன்று, அதன் உடலை உண்பது தவறு, ஒரு உடலைச் சுவைத்து உண்பவர் மனம் நன்மை நினைக்காது, புலால் என்பது பிரிதோர் உடலின் புண் என்பதை அறிந்து அதைத் தவிர்க்க வேண்டும், அறிவுடையோர் புலால் உண்ண மாட்டார்கள், கொலை புரியாமலும் புலால் உண்ணாமலும் இருந்தால் உலக உயிர்கள் எல்லாம் கை கூப்பி வணங்கும்’ என்று கொல்லாமை அறம் புலால் மறுத்தல் அதிகாரத்தில் காணப்படுகின்றன.

சமணர்களின் கொல்லாமை அறத்தைக் ‘கொல்லாமை’ அதிகாரமாகவே வைத்துள்ளார் திருவள்ளுவர். இதில்,

“அறவினை யாதெனின் கொல்லாமை; கோறல்
பிறவினை எல்லாம் தரும்’’[31]

என்ற குறள் முதல்,

“உயிர் உடம்பின் நீக்கியார் என்ப செயிர் உடம்பின்
செல்லாத்தீ வாழ்க்கை யவர்’’[32]

என்ற குறள் வரையிலான கொல்லாமை அதிகாரம் முழுமையும் சமண அறம் சார்ந்ததாகவே காணப்படுகின்றது. புலால் உண்ணாமை, கொல்லாமை அதிகாரங்கள் மட்டுமல்லாது இன்னும் பல அதிகாரங்களில் உள்ள குறள்களும் கொல்லாமை அறத்தை வலியுறுத்துவதாகவே அமைகின்றன.

“மன்னுயிர் ஓம்பி அருளாள்வாற் கில்லென்ப
தன்னுயிர் அஞ்சும் வினை’’[33]

என்ற குறள் ‘உலகத்து உயிர்களையெல்லாம் பேணும் குணம் கொண்டவனுக்குத் தன் உயிர் பற்றி அஞ்சுவதற்குரிய தீய செயல்கள் ஏதும் உண்டாகாது’ என்கிறது. தவம் அதிகாரத்தில்,

“உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை
அற்றே தவத்திற் குரு’’[34]

என்ற குறளானது, ‘தமக்கு உண்டாகும் துன்பங்களைப் பொறுத்தலும் மற்றை உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலுமே தவம்’ என்று கூறுகிறது. மேற்கண்ட இரு குறள்களும் பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாதிருத்தலையே வலியுறுத்துவதன் மூலம் சமணர்களின் கொல்லாமை அறம் வெளிப்படுவதைக் காணலாம்.

**நாலடியாரில் கொல்லாமை**

சமண சமயத்தின் சாரங்களை முழுமையும் அறிய நாலடியாரே துணை புரிகின்றது. சமணர்கள் இயற்றிய நூல்களில் முதன்மை பெறுவதும் இந்நூலே ஆகும். இந்நூலில் உள்ள நானூறு பாடல்களும் சமணர்களின் கொள்கைகளையும், வாழ்வியல் முறைகளையும் தாங்கி நிற்பனவாகவே உள்ளன. சமணர்களின் கொல்லாமை சார்ந்த பாடல்களும் இந்நூலில் காணப்படுகின்றன.

“துக்கத்துள் தூங்கித் துறவின்கட் சேர்கலா
மக்கள் பிணத்த சுடுகாடு – தொக்க

விலங்கிற்கும் புள்ளிற்கும் காடே புலன்கெட்ட

புல்லறி வாளர் வயிறு''[35]

என்ற பாடல், 'பிற உயிர்களைக் கொன்று தின்னும் நம் வயிறு இடுகாட்டிற்கு ஒப்பானது என்கிறது. சிற்றின்ப சுகத்தை விரும்புபவர்களின் பிணங்களைக் கொண்டதாகவே சுடுகாடுகள் விளங்குகின்றன. அதே போல புல்லறிவாளர்களின் வயிறானது விலங்குகளுக்கும் பறவைகளுக்கும் சுடுகாடுகளாக அமைகின்றன என்பதன் வழி, பிற உயிர்களைக் கொன்று உண்ணுதல் அறியாமை என்பதை அறியமுடிகிறது.

'நாலடியாரில் உள்ள மற்றொரு பாடல் விலங்குகளைத் துன்புறுத்துவதை கண்டிப்பதாக அமைகிறது.

"இரும்பார்க்குங் காலரார் எதிலார்க் காளாய்க்

கரும்பார் கழனியும் சேர்வர் – சுரும்பார்க்கும்

காட்டுளாய் வாழுஞ் சிவலும் குறும்பூழும்

கூட்டுளாய்க் கொண்டுவைப் பார்''[36]

என்ற பாடல், "காட்டில் வாழும் கவுதாரியையும், காடையையும் கூட்டில் அடைத்து துன்புறத்துபவர்கள் பின்னொரு காலத்தில் இரும்பு விலங்குகளால் பூட்டப்பட்ட கால்களை உடையவர்களாகவும் அயலார்க்கு அடிமைப்பட்டவர்களாகவும் வாழ்வர்' என்கிறது. இதைப் போலவே,

"அக்கேபோல் அங்கை யொழிய விரலழுகித்

துக்கத் தொழுநோய் எழுபவே – அக்கால்

அலவனைக் காதலித்துக் காண்முரித்துத் தின்ற

பழவினை வந்தடைந்த கால்''[37]

என்ற பாடலும் ஊன் உண்ணாமையையும் கொல்லாமையையும் வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. 'முற்பிறவியில் நண்டின் ஊனை விரும்பி உண்டவரின் பழவினை இப்போது வந்தால், அவனது உள்ளங்கை விரல்கள் எல்லாம் அழுகித் தொழுநோய்க்கு ஆட்பட்டுத் துன்பப்படுவர்' என்கிறது. நாலடியாரில் காணப்படும் மேற்கண்ட பாடல்கள் மூன்றும் கொல்லாமை அறத்தைக் கடைபிடிக்க வேண்டும் எனவும், அவ்வாறில்லாவிடின் நமது வயிறு இடுகாடாகவும், அயலாருக்கு நாம் அடிமைப்பட்டவராகவும், தொழுநோய்க்கு ஆட்பட்டவராகவும் இருந்து துன்புறுவர் என்கிறது. இம்மூன்று பாடல்களிலும் சமணர்களின் கொல்லாமை அறம் பேணப்படுகிறது.

**பழமொழி நானூற்றில் கொல்லாமை**

'பழமொழி' என்பது பலவாண்டு காலம் மக்கள் வாழ்வில் இருந்துவரும் ஒன்றாகும். பழமொழி நானூறும் சமண சமயம் சார்ந்ததாகவே காணப்படுகிறது. இந்நூலில் உள்ள சில பாடல்கள் கொல்லாமை அறம் சார்ந்தது. பிற உயிர்களைக் கொன்று புலால் உண்ணுதல் என்பது பிற எல்லா தீய ஆசைகளைக் காட்டிலும் கொடியது ஆகும். இவற்றை விட்டவர்களே சான்றோர்களாகக் கருதப்படுவர் என்கிறது பழமொழி நானூறு. இதனை,

> "விடலரிய துப்புடைய வேட்கையை நீக்கிப்
> படர்வரிய நன்னெறிக்கண் நின்றார் – இடருடைத்தாய்ப்
> பெற்ற விடக்கு நுகர்தல் கடல்நீந்திக்
> கற்றடியுள் ஆழ்ந்து விடல்''[38]

என்ற பாடலடிகள் விளக்கும். 'தமக்குத் துன்பம் வந்த காலத்தில் உணவு கிடைக்காமல் புலாலினை உண்டால் கடலினின்றும் நீந்திக் கரை சேர்ந்த

ஒருவன், கன்றின் குளம்படி அளவான நீரிலே வீழ்ந்து அமிழ்ந்து விட்டது போலாகும்' என்பதன் வழி கொல்லாமை நெறியினை அறியமுடிகிறது.

"செறலிற் கொலையுரிந்து சேணுவுவப்பர் ஆகி
அறிவின் அருள்புரிந்து செல்லார் – பிறிதன்
உயிர்செகுத்து ஊன்றுய்த் தொழுகுதல்; ஓம்பார்
தயிர் சிதைந்து மற்றொண் றடல்''[39]

பிற உயிர்களின் பால் அருளுடையவர்களாக இருப்பவர்கள் தாம் மறுமையிலும் இன்பமுடையவர்களாக இருப்பர். மறுமை இன்பம் விரும்பி பலி கொடுப்பவர்கள் துன்பமே அடைவர் என்கிறது மேற்கண்ட பாடல்.

பழமொழியிலுள்ள இவ்விரு பாடல்களும் சமணர்களின் கொல்லாமை அறம் சார்ந்ததாகவே காணப்படுகின்றன. பிற உயிரைக் கொன்று உண்டால் இதுகாறும் செய்த புண்ணியங்கள் அனைத்தும் அழிந்துவிடும் என்பதிலும், பலியிடுவதால் மறுமையிலும் துன்பமே நிகழும் என்பதிலும் கொல்லாமை நெறி உணர்த்தப்படுகின்றது.

**நான்மணிக்கடிகையில் கொல்லாமை**

நான்கு கருத்துக்களை மணி போலத் தொடுத்து மனதில் பதிய வைக்கும் படியாக அமைந்த நூல் நான்மணிக்கடிகை ஆகும். இந்நூல் வைணவ சமயம் சார்ந்ததாக இருந்தாலும், சமணம் பற்றிய செய்திகளும் இந்நூலில் காணப்படுகின்றன. சமணர்களின் கொல்லாமை அறம் சார்ந்த பாடல்கள் சிலவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

"அலைப்பான் பிறவுயிரை யாக்கலுங் குற்றம்
விலைப்பாலிற் கொண்டூன் மிசைதலுங் குற்றம்

சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்

கொலைப்பாலும் குற்றமே யாம்''[40]

என்ற பாடல் கொல்லாமை அறத்தை முழுமையும் வெளிப்படுத்தி உள்ளது. 'பிற உயிர்களை வருத்துவதற்காகவும், கொல்வதற்காகவும் அதனைப் பிடித்து வளர்த்தலும்; பிறவற்றின் ஊனை விலைக்கு வாங்கி உண்ணலும்; வேறு எவ்விதமான கொலை வகைகளும் குற்றம்' எனக் கொல்லாமை அறம் சார்ந்ததாக அமைந்துள்ளது.

"இனிதுண்பா னென்பான் உயிர்க்கொல்லா துண்பான்''[41]

"எல்லா விடத்துங் கொலை தீது''[42]

என்ற இப்பாடல் வரிகளும் கொல்லாமையை வலியுறுத்துவதாகவே அமைந்துள்ளன. ஓர் உயிரையும் கொல்லாது உண்பவனே இனிது உண்பவனாகக் கருதப்படுவான் என்றும், எந்த வகையிலும் பிற உயிர்க்கு தீங்கு செய்தல் கூடாது என்றும் நான்மணிக்கடிகை கூறுகிறது. இதைப்போலவே,

"................................ ஊனுண்டல்

செய்யாமை செல்சா ருயிர்க்கு''[43]

என்ற பாடல், 'ஊனுணவு கொள்ளாமல் அருளொழுக்கத்தோடு இருத்தலே உயிர்களுக்குப் பற்றுக் கோடான நிலை'' என்கிறது.

இவ்வாறாக நான்மணிக்கடிகையின் பாடல்கள் 'பிற உயிர்களைக் கொள்ளாமல் காய்கறி உணவை உண்ணுதலே சிறந்தது என்றும்; எந்த நிலையிலும் பிற உயிர்களைக் கொல்லுதல் கூடாது என்றும்; ஊனை விலைக்கு

வாங்கி உண்ணலும் கூடாது என்றுமான பாடல்கள் சமணர்களின் கொல்லாமை அறம் சார்ந்தே காணப்படுகின்றன.

**திரிகடுகத்தில் கொல்லாமை**

சுக்கு, மிளகு, திப்பிலி என்ற திரிகடுகங்கள் உடல் நோயைப் போக்குவது போல, இந்நூலில் உள்ள ஒவ்வொரு பாடலும் மன நோயைப் போக்கும் விதமாக அமைந்துள்ளன. இந்நூலும் வைணவ சமயம் சார்ந்ததாகும். இருப்பினும் சமணர்களின் கொல்லாமை அறம் சார்ந்த பாடல்களும் இந்நூலில் உண்டு.

“........................ ஆருயிரைக்
கொல்வ திடைநீக்கி வாழ்வானும்’’[44]

“ஊனுண் டுயிர்கட் கருளுடையே மென்பானும்
தானுடன் பாடின்றி வினையார்க்கு மென்பானுங்
காமுறு வேள்வியிற் கொல்வானும் இம்மூவர்
தாமரிவர் தாங்கண்ட வாறு’’[45]

“கொலைநின்று தின்றொழுகு வானும்’’[46]

என்ற திரிகடுகப் பாடல்கள் கொல்லாமையை வலியுறுத்துகின்றன.

‘கொலையை நீக்கி வாழ்பவன் உயர்ந்தோனாகக் கொள்ளப்படுவான்’ என முதல் பாடல் கூறுகிறது. ‘தன் உடலைப் பெருக்கும் விருப்புடன் பிற உயிரைக் கொன்று திண்பவனும், இம்மைப் பயனுக்காக சில சடங்குகளைச் செய்து பிற உயிர்களைக் கொல்பவனும் அறிவில்லாதவனாகவே கருதப்படுவான்’ என இரண்டாவது பாடல் கூறுகிறது. ‘கொலைத் தன்மையை நீக்குதல் வேண்டும்’ என மூன்றாவது பாடலும் கூறுகின்றது. இவ்விதம்

திரிகடுகத்தில் உள்ள பாடல்கள் சில சமணர்களின் கொல்லாமை அறத்தைக் கூறுகின்றன.

**சிறுபஞ்சமூலத்தில் கொல்லாமை**

சமண அறங்கள் மிகுதியும் உள்ள நூலாக சிறுபஞ்ச மூலம் அமைகிறது. மாவிரதங்கள் பற்றியும் அவற்றைக் கடைபிடிக்கும் நெறிமுறைகள் பற்றியுமான பாடல்கள் பல இந்நூலில் உள்ளன. இந்நூலில்,

"கோறலும் நஞ்சூனைத் துய்த்தல் கொடுநஞ்சு''[47]

"கொன்று ண்பான் நாச்சாம்''[48]

"........................ நன் குணர்ந்தோர்
என்பெறினுங் கொல்லார் இயைந்து''[49]

"கொல்லாமை நன்று கொலைதீது''[50]
"கொன்றான் கொலையை உடன்பட்டான் கோடாது
கொன்றதனைக் கொண்டான் கொழிக்குங்கால் – கொன்றதனை
அட்டான் இடவுண்டான் ஐவரினும் ஆகுமெனக்
கட்டெறிந்த பாவங் கருது''[51]

என்ற பாடல்கள் கொல்லாமை பற்றியதாக உள்ளன. 'ஒரு உயிரை அருளின்றிக் கொல்லுதலும், பிறிதொன்றினுடைய ஊனைத் திண்றலும் நஞ்சு போன்றது, ஓர் உயிரைக் கொன்று திண்பவனுடைய நான்கு அறுந்து விடும், எதைப் பெறுவதாக இருந்தாலும் பிரிதோர் உயிரைக் கொல்லக் கூடாது, கொலை செய்தல் தீது, கொல்லாமையே நன்று' என்ற கருத்துக்கள் கொல்லாமையை வெளிப்படுத்துகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களின் பொய்யாமை**

சமணர்களின் கொல்லாமை அறத்திலிருந்து சற்றே மாறுபட்டிருப்பது 'பொய்யாமை' எனப்படும் 'வாய்மை' அறமாகும். உலகில் வாழ்கின்ற எந்த உயிர்களுக்கும் தீங்கு செய்யாதிருத்தலே கொல்லாமை அறத்தின் இயல்பாகும். அதைப்போலவே, உலகில் வாழும் எந்தஒரு உயிருக்கும் தீங்கு நினையாதிருத்தலும், தீங்கான சொற்கள் சொல்லாதிருத்தலுமே பொய்யாமை என்கிறது சமணம். இதனை,

"பாவம் பொருந்துவன சொல்லாமை ஏவாமை
ஆகும் இரண்டாம் வதம்''[52]

என்ற அருங்கலச் செப்பின் அடிகள் 'பொய் சொல்லாமை, பொய் சொல்ல ஏவாமை இரண்டும் வாய்மையின் கூறுகளாகும்' என்கிறது. இதனை மயிலை சீனி.வேங்கடசாமி அவர்கள் "வாய்மை : அஃதாவது பொய்யாமை, பொய்யாமையாவது, தீமை பயக்கும் சொற்களைக் கூறாமை என்றாக சமணராகிய இளம்பூரண அடிகள், சமண சமயக் கொள்கைப்படி, வாய்மை என்பது மேற்கூறிய அஹிம்சையை அடிப்படையாகக் கொண்டது. ஒருவன் ஓர் உயிரைக் கொல்லத் துணிவானாயின் அவ்வமையம் பொய் சொல்லியாகிலும் கொலையினின்றும் அவ்வுயிரைக் காப்பாற்ற வேண்டியது சமணத் துறவியின் கடமையாகும். ஓர் உயிரைக் காப்பாற்றப் பொய் சொல்லுவது வாய்மையினுள் அடங்கும் என்பது சமணரின் ஒத்து''[53] என்கிறார்.

இவ்வாறு சமணமானது பிற உயிர்கட்குத் தீங்கு நினையாதிருத்தல், தீங்கான சொல்லைச் சொல்லாதிருத்தல் என்பதோடு நில்லாமல், ஓர் உயிரைக் காப்பாற்ற வேண்டுமாயின் பொய் சொல்லியாகினும் அதைக் காப்பாற்ற

வேண்டுமென்கிறது. இவ்வாறாக சமணர்களின் வாய்மை அறம் வரையறுக்கப்படுகிறது.

**திருக்குறளில் பொய்யாமை**

திருக்குறளில் பொய்யாமை சார்ந்த பல குறள்கள் உள்ளன. பொய்யாமையை வலியுறுத்தும் விதமாக 'வாய்மை' என்ற தனி அதிகாரமே வைத்துள்ளார் வள்ளுவர்.

"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்
தீமை யிலாத சொலல்''[54]

என்ற குறள் சமணர்களின் 'வாய்மை' அறத்தை முழுமையும் வெளிப்படுத்தும் நிலையில் அமைந்துள்ளது. 'வாய்மை என்று கூறப்படுவது யாது என்றால், அது மற்றவர்களுக்குச் சிறிதேனும் தீங்கு இல்லாத சொற்களைக் கூறுவதேயாகும்' என்கிறது. இதைப் போலவே,

"பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்''[55]

என்ற குறள், "குற்றமற்ற நன்மையை விளைவிக்கக் கூடுமானால் பொய்யான சொல்லும் கூட வாய்மை என்று கூறத்தக்க இடத்தைப் பெற்றுவிடும்' என்கிறது. இவ்வதிகாரத்தில் உள்ள பிற குறள்களும் வாய்மையை வலியுறுத்துவதாகவே இடம்பெற்றுள்ளன.

'ஒருவன் தன் உள்ளம் அறிய பொய் இல்லாமல் நடப்பானேயானால், அவன் உலகத்தாரின் உள்ளங்களில் எல்லாம் நிறைந்திருப்பான்' (குறள்.294), 'உள்ளம் அறிய உண்மை பேசுபவன் தானமும் தவமும் காட்டியவரைக் காட்டிலும் உயர்ந்தவன் ஆவான்' (குறள்.295), 'பொய் சொல்லாமல் இருப்பதைப்

போல புகழ் ஏதுமில்லை, அது அவனை அறியாமலே அவனுக்கு எல்லாப் புண்ணியங்களையும் தரும்' (குறள்.296), 'புறத்தூய்மை நீரினாலும், அகத்தூய்மை வாய்மையாலும் அமையும்' (குறள்.298), 'உலக இருளைப் போக்கும் விளக்குகள் எல்லாம் விளக்குகள் ஆகா. பொய் சொல்லாமையே சான்றோர்க்கு விளக்கு' (குறள்.299), 'சிறந்தவைகளாகச் சொல்லப்பட்ட நூல்களுள் உண்மையைத் தவிர சிறந்த அறம் வேறில்லை' (குறள்.300) போன்ற குறள்கருத்துக்கள் சமணர்களின் வாய்மை அறத்தின் முழுமைத் தன்மையை உணர்த்துகின்றன.

**நான்மணிக்கடிகையில் பொய்யாமை**

நான்மணிக்கடிகையில் இடம் பெற்றுள்ள பொய்யாமை சார்ந்த பாடல்கள் இன்சொல் பேசுவதையே மிகுதியும் வலியுறுத்துகின்றது. எவ்விடத்திலும் யார் மனதையும் புண்படுத்தும் படியான வன்சொற்களைக் கூறக்கூடாது என்றும், நம்மைச் சுற்றியிருப்பவர்கள் மகிழும் படியான இனிமையான சொற்களையே கூற வேண்டும் என்றும் கூறுவதை,

"வளப்பாத்தி யுள்வளரும் வண்மை கிளைக்குழாம்
இன்சொற் குழியுள் இனிதொழூஉம்''[56]

என்ற பாடலின் வழி அறியலாம்.

"மொய்சிதைக்கும் ஒற்றுமை யின்மை ஒருவனைப்
பொய்சிதைக்கும் பொன்போலும் மேனியை''[57]
"சொலற்பால அல்லாத சொல்லுதலுங் குற்றம்''[58]
"புகழ் செய்யும் பொய்யா விளக்கம்''[59]

என்ற பாடல் வரிகளும் பொய்யாமை அறத்தை வலியுறுத்துகின்றன.

‘பொய் பேசுவோமேயானால் நம் உடம்பு அழிந்து விடும்’, ‘சொல்லத்தகாத சொற்களைச் சொல்லுதலும் குற்றம்’, ‘பொய்யாமையை கடைபிடிப்போருக்கு புகழே கிட்டும்’, என்ற நான்மணிக்கடிகையின் பாடல் கருத்துக்கள் சமணக் கருத்தை அடியொற்றியதாகவே காணப்படுகிறது.

**திரிகடுகத்தில் பொய்யாமை**

நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்ற சமணர்களின் மும்மணிகளைப் போலவே, திரிகடுகத்தில் உள்ள ஒவ்வொரு பாடல்களிலும் மூன்று கருத்துக்கள் காணப்படுகின்றன. மாவிரதங்களில் ஒன்றான பொய்யாமை சார்ந்த பாடல்களும் இந்நூலில் காணப்படுகின்றன.

‘‘நுண்மொழி நோக்கிப் பொருள்கொளலும் நூற்கேலா
வெண்மொழி வேண்டினுஞ் சொல்லாமை – நன்மொழியைச்
சிற்றின மல்லார்கட் சொல்லலும் இம்மூன்றும்
கற்றறிந்தார் பூண்ட கடன்’’[60]

என்ற பாடலில் ‘சொற்களின் தன்மைக்கு ஏற்பப் பொருள் கொள்ள வேண்டும், பயனற்ற சொல்லினைக் கூறக் கூடாது, நல்ல நூற்கருத்துக்களை அதை விரும்புபவர்க்குக் கூற வேண்டும்’ என்று பொருளைத் தரும் ‘பொய்யாமை’ அறம் வெளிப்பட்டுள்ளமையை அறியமுடிகிறது. மற்றொரு திரிகடுகப் பாடல் ‘பொய்ச் சொல் கூறுகிறவன் ஊரில் மழை பொழியாது’ என்கிறது. இதனை,

‘‘உள் பொருள் சொல்லாச் சலமொழி மாந்தரும்
இல்லிருந் தெல்லை கடப்பாளும் இம்மூன்றும்
வல்லே மழையருக்குங் கோள்’’[61]

என்ற பாடலடிகள் தெளிவாக்கும்.

“தூய்மை யுடைமை துணிவாம் தொழிலகற்றும்
வாய்மை யுடைமை வனப்பாகும் – தீமை
மனத்தினும் வாயினுஞ் சொல்லாமை மூன்றும்
தவத்தில் தருக்கினார் கோள்’’[62]

என்ற பாடல், ‘ஒருவன் மனத்தூய்மை உள்ளவனாய் இருத்தல் வேண்டும், மெய்நூல்களில் கூறப்பட்டுள்ளபடி நற்செய்கையுடன் உண்மையுடையவனாய் இருக்க வேண்டும், தீமை தருவதினை மனதாலும் நினைக்கக் கூடாது, வாயாலும் சொல்லக் கூடாது’ என்று பொய்யாமை அறத்தைக் கொண்டுள்ளதாய் அமைந்துள்ளது.

திரிகடுகம் பொய் பேசுபவனை மிகக் கடுமையாகவும் சாடுகிறது.

“இறந்தின்னா சொல்கிற பானுமிம் மூவர்
பிறந்தும் பிறந்திலா தார்’’[63]

என்ற பாடல், ‘பிறரின் மனம் வருந்தும்படி பேசுகிறவன் மக்கட் பிறப்பைச் சார்ந்தவராகக் கருதமாட்டார்’ என்றுரைக்கின்றது.

சங்கம் மருவிய இலக்கியங்களில் மேற்கண்ட நூல்கள் மட்டுமல்லாது, இன்னபிற நூல்களிலும் பொய்யாமை சார்ந்த செய்திகள் இடம் பெற்றுள்ளன. சிறுபஞ்ச மூலத்தில் உள்ள சமணர்களின் வாய்மை நெறியினைக் கொண்ட பாடல் அடிகள்,

“ஒத்த ஒழுக்கம் கொலைபொய் புலால் களவொடு’’[64]
“கொன்றுண்பான் நச்சாம் கொடுங்கரிபோ வானாச்சாம்’’[65]
“பொய்யாமை பொன் பெறினும்’’[66]
“நள்ளான் உயிரிரங்க நாவாடான்’’[67]

“பொய்யாமை நன்று பொருள் நன்று’’[68]

என்பனவாகும்.

சிறுபஞ்ச மூலத்தின் இப்பாடல் அடிகள் ‘பொய்யாமை’ நெறியினைக் கூறுவதாகவே அமைந்துள்ளன. ‘ஒழுக்கத்தில் சிறந்தது பொய் பேசாமல் இருப்பதே ஆகும். பொய் பேசுவது நச்சுத் தன்மையையே ஏற்படுத்தும், பொன்னையே பெறுவதாயினும் பொய்யாமை நிலையில் இருந்து வழுவக் கூடாது. பிறர் உயிர் வருந்தும்படி பொய் பேசுதல் கூடாது’ என சிறுபஞ்ச மூலம் பொய்யாமையை வலியுறுத்துகிறது.

பழமொழி நானூறில் உள்ள பாடல்கள் சிலவும் ‘பொய்யாமை’ நெறி சார்ந்ததாகக் காணப்படுகின்றன. நாம் கூறும் கடுமையான சொற்களால் தான் பிறர் துன்பம் படுவார்களே தவிர, இனிமையான சொற்களால் யாரும் துன்பப்படுவதில்லை என்கிறது பழமொழி நானூறு. இதனை,

“புன்சொல்லும் நன்சொல்லும் பொய்ப்பின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலும் உண்டாமோ **?**
புன்சொல் இடர்ப்படுப்ப தல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்ப தில்’’[69]

என்ற பாடல் இன்சொல் பேசுவதையே வலியுறுத்துவதாக உள்ளது. மற்றொரு பாடல்,

“உடுக்கை மருந்து உரையுள் உண்டியோடு
இன்ன கொடுத்துக் குறை தீர்த்தல் ஆற்று – விடுத்தின் சொல்
ஈயாமை என்ப, எருமை எறிந்தொருவர்
காயக்கு லோபிக்கும் ஆறு’’[70]

என்று பொய்யாமை நெறியினை வெளிப்படுத்துகின்றது.

‘உடுக்க உணவு, நோய்க்கு மருந்து, இருக்க இடம், உண்ண உணவு இவற்றையெல்லாம் கொடுத்து, பிறரின் குறைகளைத் தீர்த்த பின், அவர்களிடம் இனிமையான சொற்கள் மட்டும் கூறாமல் இருப்பது தவறான செயலாகும்’. எனவே கொடைகள் பல கொடுத்தலையும் விட இன்சொல் கூறுவதே சிறந்ததாக பழமொழி நானூறு கூறுகிறது.

சிறந்த அறிவுடையவராக இருந்தாலும் ஒன்றைச் சொல்லும் முன் நன்கு ஆராய்ந்து கூறுதலே இனிமையானது என்றும், பிறர் வருந்தும் படியான சொற்களைக் கூறக் கூடாது என்றும் இனியவை நாற்பது கூறுகிறது. இதனை,

“சிறந்தமைந்த கேள்விய ராயினு மாராய்ந்
தறிந்துரைத்த லாற்ற லினிது”[71]

என்ற அடிகளின் மூலம் அறியலாம். இவ்விதம் சங்கம் மருவிய இலக்கியங்களில் பல நூல்கள் பொய்யாமை எனப்படும் வாய்மை அறங்களைப் போதிப்பதான பாடல்களைக் கொண்டுள்ளதாக விளங்குகின்றன.

**சங்கம் மிருவிய இலக்கியங்களில் கள்ளாமை**

சமணர்களின் மாவிரதங்களில் மூன்றாவதாக அமைந்துள்ளது. கள்ளாமை நெறியாகும். கொல்லாமை, பொய்யாமை போன்றே சமண அறத்தைக் கடைபிடிப்போர் அனைவரும் இக்கள்ளாமை அறத்தையும் கடைபிடிக்க வேண்டுமென்கிறது சமணம். இதுபற்றி மயிலை சீனி.வேங்கடசாமி “எவ்வளவு அற்பமான பொருளாயிருந்தாலும் அதனை அதற்குரியவர் கொடுத்தாலன்றி, எடுத்துக்கொள்ள மனதினாலும் நினையாதிருத்தல், ‘நாட்டிலாயினும் காட்டிலாயினும் கிராமத்திலாயினும் நகரத்திலாயினும் பிறர்க்குரிய பொருளை அஃது அற்பமானதாக இருந்தாலும்

விலை மதிக்கத்தக்கதாக இருந்தாலும் உயிருள்ளதாயிருந்தாலும் உயிரற்றதாயிருந்தாலும் அதற்குரியவர் கொடுத்தாலின்றி அதனை எடுத்துக்கொள்ள மாட்டேன். மனம் மொழி மெய்களால் கள்ளாமையை மேற்கொள்கிறேன்' என்று உறுதி கூறி சமண முனிவர் இந்த மூன்றாவது விரதத்தை மேற்கொள்கிறார்''[72] என்கிறார்.

பிறருடைய பொருளை அடைய நினைப்பதும் அவ்வாறு அடைவதும் தவறான செயல் என்பதை உணர்த்தவும், அவ்வாறான செயலைத் தவிர்க்கவும் சமணர்களால் உருவாக்கப்பட்டதே கள்ளாமை என்னும் அறமாகும். இதனை,

> ''கொடாதது கள்ளாமை ஏவாமை ஆகும்
> கொடாதது கொள்ளா மதம்''[73]

என்கிறது அருங்கலச் செப்பு. கள்ளாமை சார்ந்த பல பாடல்கள் சங்கம் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன.

**திருக்குறளில் கள்ளாமை**

கொல்லாமை, பொய்யாமை போலவே கள்ளாமை எனவும் தனி அதிகாரம் வகுத்துள்ளார் வள்ளுவர். இவ்வதிகாரம் மட்டுமல்லாது இன்னும் பல குறள்களும் கள்ளாமை சார்ந்ததாகக் காணப்படுகின்றன.

> ''உள்ளத்தால் உள்ளலும் தீதே; பிறன் பொருளைக்
> கள்ளத்தால் கள்வேம் எனல்''[74]

என்ற குறள், 'பிறர் பொருளை வஞ்சத்தால் பறித்துக் கொள்வோம் என்று எண்ணாதே; ஏனெனில் அதனை மனத்தால் நினைத்தலும் குற்றமேயாம்' என்கிறது. இக்குறள் சமணர்களின் கள்ளாமை நெறியை முழுமையும் வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

மேற்கண்ட குறளைப் போலவே திருக்குறளில் சில குறள்கள் கள்ளாமை அறத்தைக் கூறுவதாக அமைந்துள்ளன. 'பிறர் தம்மை இகழக்கூடாது என்று எண்ணுபவன், பிறருடைய எந்தப்பொருளையும் கவர்ந்து கொள்ளாமல் தன் மனதைக் கார்த்துக் கொள்ள வேண்டும் (குறள்.281); திருடினால் உண்டாகும் செல்வம் வளர்வது போலத் தோன்றினாலும் அது விரைவில் அழிந்து போகும் (குறள்:283) திருட்டின் மீதான ஆர்வம் நீங்காத துன்பத்தைத் தந்துவிடும் (குறள்:284) களவினை மட்டுமே தொழிலாகக் கொண்டு, மற்ற நற்செயல்களைச் செய்யாதவர் அப்பொழுதே அழிவார் (குறள்:289), களவு செய்வோர்க்கு உயிரோடு வாழும் நிலையும் விரைவில் நீங்கிப் போகும்' (குறள்:290) என்ற குறள்களின் கருத்துக்கள் அனைத்தும் கள்ளாமையை உணர்த்துகின்றன. கள்ளாமை அதிகாரம் மட்டுமன்றி வெஃகாமை அதிகாரத்திலும் 'கள்ளாமை' அறம் சார்ந்த குறள்கள் காணப்படுகின்றன. வெஃகாமை அதிகாரத்தில்,

"நடுவின்றி நன்பொருள் வெஃகின் குடிபொன்றிக்
குற்றமும் ஆங்கே தரும்"[75]

என்ற குறளானது, 'நடுவுநிலை இல்லாமல் பிறருடைய நல்வழிப் பொருளை ஒருவன் விரும்பினால், அது அவன் குடியைக் கெடுத்துப் பழியையும் அப்போதே தரும்' என்கிறது.

திருக்குறள் மட்டுமல்லாது இன்னபிற அற இலக்கியங்களிலும் கள்ளாமை சார்ந்த கருத்துக்கள் இடம் பெற்றுள்ளன. மிகுதியும் இல்லாமல் ஒரு சில பாடல்களில் மட்டும் காணப்படுகின்றன. கள்ளாமை பற்றித் திரிகடுகம் கூறும்போது, 'பிறர் பொருளின் மீது ஆசைப்படுவதும் கவர நினைப்பதும் இன்பம் தராமல், துன்பமே தரும்' என்கிறது. இதனை,

“ஆசை பிறன்கட் படுதலும் பாசம்’’[76]

“............................. முன்னிய

பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும்’’[77]

என்ற பாடல் அடிகளின் மூலம் அறியலாம். ‘பிறருடைய பொருட்களின் மீது விருப்பம் கொண்டால், தான் சேர்த்து வைத்திருந்த செல்வமும் அழிந்து போகும்’ எனத் திரிகடுகம் கள்ளாமை அறத்தை வலியுறுத்துகிறது. நான்மணிக்கடிகையில்,

“ஈத்துண்பா னென்பான் இசைநடுவான் மற்றவன்
கைத்துன்பான் காங்கி யெனப்படுவான்’’[78]

“கள்ளாமை வேண்டும் கடிய வருதலால்’’[79]

என்ற பாடல்களின் அடிகளும் கள்ளாமை அறத்தை வலியுறுத்தும். ‘பிறருக்குக் கொடுக்காமல், பிறர் பொருளைப் பறிக்க நினைப்பவன் பொறாமை குணம் உள்ளவனாகக் கருதப்படுவான் என்றும்; பிறர் பொருளைக் களவாடுவதினால் பின்னர் கொடுந்துன்பங்கள் உண்டாகும் என்றும் கள்ளாமை அறம் சார்ந்த பாடல்கள் நான்மணிக்கடிகையிலும் காணப்படுகின்றன.

சிறுபஞ்ச மூலத்தின் பாடல்கள் சிலவும் கள்ளாமை நெறியை விளக்குகின்றன.

“ஒத்தஒழுக்கம் கொலைபொய் புலால் களவொடு’’[80]
“பொய்யாமை பொன்பெறினும் கள்ளாமை’’[81]
“கள்ளான்சூ தென்றும் கழுமான் கரியாரை’’[82]

நல்லொழுக்கமும் திருடாமையுமே இனிமை தருவன, பொன் பெருவதாக இருந்தாலும் கள்ளாமை கூடாது. கள்ளாமலும் பிற தீய செயல்களைச்

செய்யாமலும் இருப்பவனின் வாழ்க்கை இனிமையாக அமையும் என்பதாக சிறுபஞ்சமூலம் கூறுகிறது. இவ்விதம் பதினெண் கீழ்க்கணக்கில் உள்ள பல நூல்களில் கள்ளாமை அறம் வலியுறுத்தப்பட்டுள்ளது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பிரம்மச்சரியம் (துறவறம்)**

சமணர்களின் மாவிரதங்களில் நான்காவதாக அமைவது பிரம்மச்சரியம் என்றும் துறவறமாகும். பிரம்மச்சரியம் 'துறவறம்' என்றும் 'காமமின்மை' என்றும் அழைக்கப்படுகின்றன. சமண சமயத்தில் துறவறத்தைக் கடைபிடிக்க விரும்புவோர் ஒழுகும் நெறியாக இந்நெறி உள்ளது.

"பிரமசரியம் : அஃதாவது புணர்ச்சி விழையாமை, சிற்றின்பத்தை மனம் வாக்குக் காயங்களால் செய்யாதிருத்தல்.

'தெய்வங்களுடனாவது மனிதர்களுடனாவது விலங்குகளுடனாவது இணை விழைச்சாகிய சிற்றின்பத்தைத் துய்க்கமாட்டேன்; இதனை மனம் மொழி மெய்களால் முக்காலத்திலும் செய்யாதிருக்க உறுதிகூறுகிறேன்' என்று கூறிச் சமணத் துறவி நான்காவது மாவிரதத்தை மேற்கொள்கிறார்''[83]

என பிரமச்சரியம் பற்றி மயிலை சீனி.வேங்கடசாமி கூறுகிறார். 'தான் மணம் புரிந்த மகளீரோடு அல்லாது ஏனை மகளீரோடு காமநுகர்வு கொள்ளாதிருத்தல் இவ்வறத்தின் முதல் நிலையாகும். பரத்தையர் தொடர்பு, பிறன்மனை நோக்கல் ஆகியவற்றை நீக்க வேண்டும் என்ற கருத்தை இவ்வறம் குறிப்பிடுகின்றது.

"விதித்த வழியின்றிக் காமம் நுகர்தல்
மதிப்பின்மை நான்காம் வதம்''[84]

என்ற அருங்கலச் செப்பின் நூற்பா பிரம்மச்சரிய அறத்தை தெளிவாக வரையறுக்கிறது.

**திருக்குறளில் பிரம்மச்சரியம்**

திருக்குறளில் சமணர்களின் பிரம்மச்சரியம் சார்ந்த குறள்கள் மிகுதியும் காணப்படுகின்றன. பிறனில் விழையாமை, வரைவின் மகளீர் முதலிய அதிகாரங்கள் பிரம்மச்சரிய அறத்தை மறைமுகமாக வலியுறுத்தும் விதமாக அமைந்துள்ளன. மாற்றான் மனைவியை விரும்பாதவனே அறநெறிப்படி இல்வாழ்வு வாழ்பவன் என்கிறார் வள்ளுவர். இதனை,

“அறனியலான் இல்வாழ்வான் என்பான் பிறனியலாள்
பெண்மை நயவா தவன்”[85]

என்ற குறளின் மூலம் அறியலாம். ‘அறமும் பொருளும் முறையாக ஆய்ந்து கண்டவர் பிறர்க்கு உரிமையான மனைவியை விரும்பிச் சேரமாட்டார் (குறள்:141) தனக்கு எளிதாகக் கிடைக்கும் என்று பிறன் மனைவியை விரும்புவன் எக்காலத்தும் அழியாப் பழியை அடைவான் (குறள்:145) பிறன் மனைவியை விரும்பிச் செல்பவனிடத்துப் பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கு தீமைகளும் நீங்காமல் நிலைபெறும் (குறள்:146), அறம் இல்லாத எதைச் செய்தாலும் செய்யலாம், பிறன் மனைவியை மட்டும் விரும்பாமை நன்று’ (குறள்:150) என்ற குறள்கள் பிரம்மச்சரியமாகிய காமமின்மை அறத்தின் வெளிப்பாடாகவே அமைந்துள்ளன.

“மனைவிழைவார் மாண்பயன் எய்தார் வினைவிழைவார்
வேண்டாப் பொருளும் அது”[86]

‘வரம்பற்ற காமத்தால் அடிமையாகித் தம் மனைவியை விரும்புபவர் பெருமைக்குரிய பயனை அடைய மாட்டார். எடுத்த செயலைச் செய்து முடிக்க விரும்புகிறவர் விரும்பாத பொருளும் அதுவேயாகும்’ என்ற குறளின் வழி சமணர்களின் பிரம்மசரிய அறத்தை முழுமையும் வெளிப்பட்டுள்ளதைக் காணலாம். வரைவின் மகளீர் அதிகாரத்தில் உள்ள இன்னும் சில குறள்களும் பிரம்மச்சரிய அறத்தை வெளிப்படுத்துகிறது.

“பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம் இருட்டறையில்
ஏதில் பிணம்தழீஇ யற்று’’[87]

என்ற குறள், ‘பொருளையே குறியாகக் கொண்ட மகளீரைப் போலியாகத் தழுவுதலானது இருண்டதோர் அறையுள் கிடக்கும் அயலார் பிணத்தைத் தழுவுவது போன்றது’ என்கிறது. இவை மட்டும் அல்லாது ‘மகளிரைத் தழுவுதல் ஆராயும் அறிவுடையோர்க்கு உயிர்க் கொல்லியாகும்’ (குறள்:918) எனப் பிரம்மச்சரிய அறத்தை கடுமையாக வலியுறுத்துகிறது திருக்குறள்.

**நாலடியாரில் பிரம்மச்சரியம்**

திருக்குறளைப் போலவே நாலடியாரிலும் சமணர்களின் பிரம்மச்சரியம் சார்ந்த பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இந்நூலிலும் பிறன்மனை நயவாமை, பொது மகளிர் என்ற அதிகாரங்கள் பிரம்மச்சரிய அறத்தினை வலியுறுத்துவதாக உள்ளன.

“அச்சம் பெரிதால் அதற்கின்பம் சிற்றளவால்
நிச்சம் நினையுங்காற் கோக்கொலையார் –நிச்சலும்
கும்பிக்கே கூர்ந்த வினையால் பிறன்தாரம்
நம்பற்க நானுடை யார்’’[88]

என்ற பாடலில் பிறன் மனைவியை விரும்பி ஒழுகுபவர்க்கு இன்பம் குறைவாகவே கிடைக்கும். அச்ச உணர்வே மிகுதியாகக் கிடைக்கும், எந்நாளும் துன்பமே நிலையாக இருக்கும் என்று நாலடியார் விளக்குகின்றது. இப்பாடல் சமண அறத்தின் பாற்பட்டதாகவே காணப்படுகிறது.

'பிறன் மனைவியை இரும்புவார்க்கு புண்ணியமும் புகழும் தக்கார் கூட்டுறவும் இல்லை (பாடல் – 82), பிறன்மனை நயத்தலில் இன்னலைத் தவிர இன்பம் ஏதுமில்லை (பாடல்–84), முற்பிறப்பில் பிறன் மனைவியரைக் கூடியவரே இப்பிறப்பில் கூத்தாடி இரந்து உண்பர் (பாடல்–85), காமம் என்பது உள்ளத்தை வெதுப்புங் கொடுமையுடையது. தீயினும் கொடியது' என்ற பிறன்மனை நயவாமை அதிகாரத்தில் உள்ள பாடல்கள் அனைத்தும் பெண்ணினம் சேராமையையும் பிரம்மச்சரிய அறத்தை வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளன.

நாலடியாரில் உள்ள பொது மகளீர் அதிகாரத்திலும் பிரம்மச்சரிய அறம் வலியுறுத்தப்படுகிறது.

"ஏமாந்த போழ்தின் இனியார்போன் றின்னாராய்த்
தாமார்ந்த போதே தகர்க்கோடாம் – மானோக்கின்
தந்நெறிப் பெண்டிர் தடமுலை சேராரே
செந்நெறிச் சேர்துமென் பார்''[89]

என்ற பாடல், 'விலைமாதரது சேர்க்கையால் அறநெறி ஒழுக்கம் கெடும்' என்கிறது. நாலடியாரில் உள்ள பிறன் மனை நயவாமை, பொதுவின் மகளீர் ஆகிய அதிகாரங்கள் பிரம்மச்சரிய அறத்தின் உட்கூறான காமமின்மையை வெளிப்படுத்துகின்றது.

திருக்குறள் நாலடியார் மட்டுமல்லாது பிற அறஇலக்கியங்களிலும் சமணர்களின் பிரம்மச்சரிய அறம் வலியுறுத்தும் பாடல்கள் காணப்படுகின்றன. திரிகடுகமானது 'அயலான் மனைவியை விரும்பித் தீயொழுக்கம் புரியவன் விரைவில் கெட்டழிவான் என்கிறது. இதனை,

"............ குணமிலியு மெல்லிற்

பிறன்கடை நின்றொழுகு வானும்''[90]

என்ற பாடலின் வழி அறியலாம். திரிகடுகத்தில் உள்ள மற்றொரு பாடல் 'முறை பிறழ்ந்து தன்னைச் சேர விரும்பும் பெண்ணைச் சேராமல் விலக்கி விட வேண்டும். அதுவே அறிவுடையார் செயல்' என்று கூறுகிறது. இதனை,

"பெண் விழைந்து பின்செலினுந் தன்செலவிற் குன்றாமை'[91]

என்ற பாடல் வரியின் மூலம் அறியலாம். இவை மட்டுமல்லாது, 'வேசியரைச் சேர்வதாகிய நீசத்தன்மை அறவழி நில்லாதோர் தொழில்கள் என்றும், பெண் வயப்படாமல் இருக்க வேண்டும் என்றும் திரிகடுகம் வலியுறுத்துகின்றன.

நான்மணிக்கடிகையில் உள்ள பாடல்கள் சிலவும் பிரம்மச்சரிய அறத்தை வலியுறுத்துகின்றன.

"..................... அழித்து

செறிவழி நிற்பது காமந் தனக்கொன்று

உறுவழி நிற்பது அறிவு''[92]

என்ற பாடல் அடியானது, 'காமமானது தவ ஒழுக்கமில்லாதவனிடமே நிற்கும் என்றும், தவ ஒழுக்கமுடையவனிடம் காம உணர்வு நில்லாது' என்றும் கூறுகிறது. இது சமண அறத்தின் முழுப் பொருளையும் வெளிப்படுத்தும் விதமாகவே அமைந்துள்ளது.

இனியவை நாற்பதில் உள்ள,

“பிறன்மனை பின்னோக்காப் பீடினிது''[93]

“தடமென் பணைத்தோட் டளிரிய லாரை
விடமென் றுணர்த லினிது''[94]

என்ற இவ்விரு பாடல் அடிகளும் பிரம்மச்சரிய அறம் சார்ந்து காணப்படுகின்றன. பிறருடைய மனைவியைத் திரும்பிப் பாராத பெருமையே மிக இனிதான பெருமையாகும். பெண்களை நஞ்சென்று நினைத்து விலகுதல் மிக இனியதாகும் என்று இனியவை நாற்பது கூறுகிறது.

தனக்கு உரிமையில்லாத மகளீரோடு ஆட்டமும், பாட்டும் காண வேண்டாமெனவும், அவ்வாறிருப்பின் பகையும் கடுஞ்சொல்லும் சாவும் விளையும் என்றும் ஏலாதி கூறுகிறது. இதனை,

“பாடகஞ் சாராமை பாத்திலார் தாம்விழையும்
நாடகஞ் சாராமை நாடுங்கால் – நாடகம்
சேர்ந்தாற் பகைபழி தீச்சொல்லே சாக்காடே
தீர்ந்தாற்போற் றீரா வரும்''[95]

என்ற பாடலின் வழி அறியலாம். ஆசாரக்கோவை, முதுமொழிக் காஞ்சி நூல்களிலும் பிரம்மச்சரிய அறக்கருத்துக்கள் சிலபாடல்களில் காணப்படுகின்றன.

“பிறன்மனை கட்களவு சூது கொலையொடு''[96]

என ஆசாரக் கோவையானது, பிறன் மனைவியை விரும்புவனுக்கு நரகமே விளையும் என்கிறது. பெண்களை விரும்புபவர்க்கு பழியே மிஞ்சும் என முதுமொழிக் காஞ்சி கூறுகிறது.

"பெண்டிர் வெய் யோர்க்குப் படுபழி யெளிது''[97]

இவ்விதம் சங்கம் மருவிய இலக்கியப் பாடல்கள் பலவும் சமணர்களின் பிரம்மச்சரிய அறங்களை வெளிப்படையாகவோ மறைமுகமாகவோ வலியுறுத்தும் படியாக அமைந்துள்ளன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் அவா அறுத்தல்**

சமண மாவிரதங்களில் இறுதியாக அமைவது அவாவறுத்தல் ஆகும். தன்னுடையது என்று கருதப்படும் அனைத்தின் மீதும் பற்றின்றி முற்றத் துறத்தலே அவாவறுத்தல் எனப்படுகிறது. "உயிருள்ள பொருளாயிருந்தாலும் உயிரற்ற பொருளாயிருந்தாலும் சிறியதாயினும் பெரியதாயினும் எல்லாப் பொருட்களையும் துறந்து அவற்றின் தொடர்பை நீக்கிக் கொள்கிறேன்; இதனை மனம் மொழி மெய்களால் முக்காலத்திலும் செய்ய உறுதிகூறுகிறேன்.''[98] என்ற உறுதிப்பாட்டுடன் சமணர்கள் இம்மாவிரதத்தை கடைபிடிப்பார்கள் என்கிறார் மயிலை சீனி.வேங்கடசாமி. இங்குள்ள எதுவும் என்னுடையது அல்ல என்று என்னுவதே அவாவறுத்தலின் தொடக்கமாக அமைகிறது.

"பிறவியினரைத் துன்புறுத்தி அதன்மூலம் இன்பமோ, பயனோ அடைய நினைக்கும் அவாவை அறுப்பது அஹிம்சையாகும். பொய் பேசுவதால் கிடைக்கும் பயன் கருதி பொய்மீது கொள்ளும் அவாவை அறுத்து வாய்மையின் பால் செலுத்துவது வாய்மையாகும். பிறன்பொருள் கவர்ந்து அதன்வழி சுகம் காண விழையும் அவாவை அறுத்து நன்னெறிக்கு உய்ப்பதுக் கள்ளாமையாகும். மனிதன் புனிதனாகும் ஞானநிலையை நோக்கிச் செல்லப் பெரிதும் தடையாக அமையும் வரையறையற்ற காமநுகர்ச்சி எனும் அவாவை

அறுப்பதால் விளைவது துறவாகும். இவ்வாறு அனைத்து நெறிகளும் அவா அறுப்பதில் தொடங்கி அவா அறுப்பதிலேயே முழுமையடைகிறது''[99]

என்கிறார் சு.மாதவன். முதல் நான்கு மாவிரதங்களும் ஐந்தாவது மாவிரதமாகிய அவா அறுத்தல் மூலமே முழுமையடைகிறது. அவாஅறுத்தல் பற்றி அருங்கலச் செப்பு கூறும்போது,

"பொருள்வரைந்து ஆசைச் சுருக்கியே ஏவாமை
இருள் தீர்ந்தார்க்கு ஐந்தாம் வதம்''[100]

என்கிறது. சங்கம் மருவிய இலக்கியங்களில் பலநூல்கள் சமணர்களின் அவாவறுத்தல் அறம் பற்றி கூறுகின்றன. திருக்குறள் நாலடியாரில் இவ்வறம் சார்ந்த பாடல்கள் மிகுதியும் காணப்படுகின்றன.

**திருக்குறளில் அவாவறுத்தல்**

திருக்குறளில் அவாவறுத்தல் சார்ந்த குறள்கள் மிகுதியும் இடம்பெற்றுள்ளன. அவாவறுத்தலின் முக்கியத்துவத்தை உணர்ந்தே வள்ளுவர் அவாவறுத்தல் என்ற தனி அதிகாரத்தையே அமைத்துள்ளார். சமணர்களின் இக்கோட்பாடு இவ்வதிகாரம் முழுமையும் விரவிக் கிடக்கின்றன.

"அவாயென்ப எல்லா உயிர்க்குமெஞ் ஞான்றும்
தவாஅப் பிறப்பீனும் வித்து''[101]

என்ற குறள். 'எல்லா உயிர்களுக்கும், எல்லாக் காலத்தும், நீங்கா அறியாமைத் துயரைத் தருவது பேராசையே ஆகும்' என்கிறது. இதைப்போலவே மற்ற குறள்களும் அவாவறுத்தல் அறத்தை வலியுறுத்துகின்றன.

‘விருப்பம் உண்டாகும் போதிலும் விரும்பாமை வேண்டும் (குறள்:363); துன்பம் அற்றுப் போனவர் எனச் சொல்லப்படுபவர் ஆசை அற்றவரே ஆவார்’ (குறள்:265); என்பதான அவாவறுத்தல் சார்ந்த அறக்கருத்துகள் இவ்வதிகாரத்தில் காணப்படுகின்றன. மெய்யுணர்தல் அதிகாரத்தில் உள்ள குறள்களும் இவ்வற நெறியையே வலியுறுத்துகின்றன.

“பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு”[102]

‘மெய்ப்பொருள் அல்லாதவற்றை மெய்ப்பொருள் என்று கொள்ளும் தெளிவில்லா அறிவினன், இழிந்த பிறப்பினன் ஆவான்’ என்கிறது. ‘துறவு’ அதிகாரத்திலும் அவாவறுத்தல் சார்ந்த அறங்கள் கூறப்பட்டுள்ளன.

“யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்”[103]

“பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றை
பற்றுக பற்று விடற்கு”[104]

போன்ற குறள்கள் அவாவறுத்தல் அறத்தை வெளிப்படுத்துவனவாகவே அமைந்துள்ளன.

**நாலடியாரில் அவாவறுத்தல்**

நாலடியாரில் அவாவறுத்தல் என்பது தனி அதிகாரமாகக் கொள்ளப்படாத போதிலும், இந்நூலில் உள்ள பெரும்பாலான பாடல்கள் இவ்வறத்தையே வலியுறுத்துகின்றன. யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, துறவு என இன்னும் பல அதிகாரங்களில் அவாவறுத்தல் அறம் சொல்லப்பட்டுள்ளன.

“நின்றன நின்றன நில்லா எனவுணர்ந்
தொன்றின ஒன்றின வல்லே செயின்செய்க”[105]

“உண்ணான் ஒளிநிறான் ஓங்கு புகழ்செய்யான்
துன்னருங் கேளீர் துயர்களையான் – கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல், அஆ
இழந்தான்என் றெண்ணப் படும்”[106]

போன்ற நாலடியாரின் பாடல்கள், ‘நிலையாயுள்ளவை என்று நாம் கருதும் பொருள்கள் நிலையில்லாது போய்விடும். எனவே, பொருள்களின் மீது பற்று வைக்காமல் அவற்றைத் தானம் செய்ய வேண்டும்’ எனவும்; ‘தன்னிடம் இருக்கும் செல்வங்களை அறவழியில் செலவு செய்துவிட வேண்டும்’ எனவுமான பாடல்கள் அவாவறுத்தல் அறம் சார்ந்தே அமைந்துள்ளன.

திருக்குறள் நாலடியார் மட்டுமல்லாது பிற சங்கம் மருவிய இலக்கியங்களிலும் அவாவறுத்தல் சார்ந்த அறக்கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

“ஐவாய வேட்கை யாவடக்கண் முன்னினிதே”[107]

‘ஐம்பொறிகளால் உண்டாகும் வேட்கையினையும் அவாவினையும் அடக்கல் மிக இனிதாகும்’ என இனியவை நாற்பது கூறுகிறது. ஒருவனுக்கு அவாவே வறுமையைத் தரும் என்றும்; பொருள் பற்றுடையவன் நடுவு நின்று முறை செய்தலில்லை என்றும் முதுமொழிக் காஞ்சி கூறுகிறது. இதனை,

“நசையிற் பெரியதோர் நல்குரவில்லை”[108]

"பொருணசை வேட்கையோன் முறைசெயல் பொய்''[109]

என்ற அடிகள் மூலம் அறியலாம். ஏலாதியில் சில பாடல்கள் அவாவறுத்தல் அறம் சார்ந்து காணப்படுகின்றன.

"அவாவறுக்க லுற்றான் றளரானவ் வைந்தின்
அவாவறுப்பி னாற்ற வமையும் – அவாவறான்
ஆகும வனாயி னைங்களிற்றி னாட்டுண்டு
போகும் புழையுட் புலந்து''[110]

"ஐம்பொறிகளால் உண்டாகும் அவாவினை அடக்காமல் அதன்வழி செல்பவன் நரக வாயில் சென்று துன்புறுவான்' என்கிறது ஏலாதி. மேலும், அவாவானது தீமையையே தரும் எனவும் ஏலாதி வலியுறுத்துகின்றது.''[111] நான்மணிக்கடிகையானது 'விடவேண்டுமெனின் பற்றினை விடுக' என்கிறது. இதனை,

"................................... விடுப்பின்
உயிரீட்டை விடுக்க''[112]

என்ற பாடல் அடிகள் உணர்த்துகின்றன. திரிகடுகத்தில் உள்ள பாடல் ஒன்றும் அவாவறுத்தல் அறத்தைக் கூறுவதாக உள்ளன.

"பற்றென்னும் பாசத் தளையும் பலவழியும்
பற்றறா தோடும் அவாத்தேருந் – தெற்றெனப்
பொய்த்துரை யென்னும் பகையிருளும் இம்மூன்றும்
வித்தற வீடும் சிறப்பு''[113]

பிறவற்றின் மேல் உள்ள பற்றினையும் அவாவையும் நீக்கினால் வீடுபேறு அடையலாம் எனத் திரிகடுகம் கூறுகிறது. பழமொழி நானூறில் உள்ள பாடல்கள் சிலவும் அவாவறுத்தல் பற்றிக் கூறுகின்றன.

“காப்பியகந்து ஓடிக் கழிபெருஞ் செல்வத்தைக்
கோப்பெரியான் கொள்ளக் கொடுத்திரா தென்செய்வர்
தீர்த்த பெரியார்க்கே யாயினும் மிக்கவை
மேவிற் பரிகாரம் இல்’’[114]

என்றபாடல், ‘செல்வத்தைச் சேர்த்து வைப்பதனால் இன்பத்தை விட துன்பமே மிகுதியாக இருக்கும். எனவே, செல்வத்தின் மீதான பற்றினை விடுக’ என்கிறது. இவ்வாறாக, அனைத்தையும் துறந்து துறவற நெறியினை வலியுறுத்தும் படியான அவாவறுத்தல் சார்ந்த பாடல்கள் பல சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பிற சமண அறங்கள்**

சமண அறங்கள் மாவிரதங்களோடு மட்டும் நில்லாது இன்னும் பல நெறிகளாக விரிகின்றன. அவை சமிதிகள் எனவும், மூலகுணங்கள் எனவும் இன்னும் பலவாக வகைப்படுத்தப்படுகின்றன. அவற்றில் சில மருவிய இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. சமணர்களின் எட்டுவகையான மூல குணங்களில் ‘கள்ளுண்ணாமை’ முக்கியமானதாகும். இவ்வெட்டு மூலகுணங்கள் பற்றி அருங்கலச் செப்பானது,

“கள்ளொடு தேன்புலைகள் உண்ணாமை ஐவதமும்
தெள்ளுங்கால் மூல குணம்’’[115]

என்கிறது. கள்ளுண்ணாமை பற்றி பழமொழி நானூறு கூறும் போது,

“கொடித்தின் தேர்மன்னரால் கூட்டுண்டு வாழ்வார்
எடுத்து மேற்கொண்டவர் ஏய வினையை

மடித்து ஒழிதல், ஏன்உண்டாம் ? மாணிழாய் ! கள்ளைக்
குடித்துக் குழைவரோ இல்''[116]

என்று சுட்டுகின்றது. குடித்தவன் தான் குடித்ததற்காக வருந்தாமல் இருக்கலாம். ஆனால் அதன் விளைவுகளில் இருந்து தப்ப முடியாது என சமணர்களின் கள்ளுண்ணாமை அறம் பழமொழி நானூறில் வெளிப்படுத்தப்படுகிறது. கள்ளுண்ணாமை பற்றி வள்ளுவம் தனி அதிகாரமாகவே வைத்து வலியுறுத்துகிறது. 'கள்குடிப்பது நஞ்சைப் போல தீங்கு விளைவிக்கும்' என்கிறார் வள்ளுவர்.

"துஞ்சினார் செத்தாரின் வேறல்லர்; எஞ்ஞான்றும்
நஞ்சுண்டார் கள்ளுண் பவர்''[117]

என்ற குறளின் மூலம் கள்ளுண்ணாமை அறநெறியை அறியலாம். சமணர்களின் மும்மணிகளான நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் ஆகிய இம்மூன்றையும்,

"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்பொருள் காண்பது அறிவு''[118]

"இருள் நீங்கி இன்பம்பயக்கும் மருள்நீங்கி
மாசறு காட்சி யவர்க்கு''[119]

"அறிவினுள் எல்லாம் தலைஎன்ப தீய
செறுவார்க்கும் செய்யா விடல்''[120]

முதலிய குறள்கள் மிகத்தெளிவாக வெளிப்படுத்துகின்றன. சமணர்களின் வேதமறுப்பையும், வேள்வி மறுப்பையும்

“யாருள் அடங்கும் குளமுள; வீறுசால்
மன்னர் விழையுங் குடியுள; தொல்மரபின்
வேதம் உறுவன பாட்டுள; வேளாண்மை
வேள்வியொடு ஒப்ப உள’’[118]

என்று நான்மணிக்கடிகை விளம்புகின்றது.

வேள்வி செய்தலை விட வேளாண்மையே சிறந்தது என நான்மணிக்கடிகை கூறுகிறது. இது மட்டுமல்லாது, சமண அறநெறிகள் பலவும் சங்கம் மருவிய இலக்கியங்களில் மிகுந்து கிடக்கின்றன. அகநூல்களை விட அறநூல்களில் சமணக் கருத்துக்கள் மிகுதியும் காணப்படுகின்றன.

## தொகுப்புரை

அவைதீக சமயங்களில் சமண சமயம் மிக முக்கியமானது ஆகும். சங்ககாலத்தில் இருந்தே சமண சமயத்தின் தாக்கம் இருந்துள்ள போதிலும், சங்கம் மருவிய காலத்தில் தான் சமணம் மாபெரும் வளர்ச்சியடைந்தது. அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்களில் சமண சமயத் தாக்கமே மிகுதியும் உள்ளது. மகாவீரரால் வளர்க்கப்பட்ட சமணம், இல்லறம் துறவறம் என அனைத்து மக்களுக்காகவும் பல்வேறு நெறிமுறைகளை வகுத்துள்ளது. அவை சமிதிகள் எனவும், மூலகுணங்கள் எனவும், மாவிரதங்கள் எனவும் பலவாறாக நெறிப்படுத்தப்படுகின்றன.

சமண சமய நெறிகள் அனைத்தும் நற்காட்சி, நல்ஞானம், நல்லொழுக்கம் என்ற முப்பெரும் பிரிவுகளுக்குள் அடங்குகின்றன. இவை மும்மணிகள் என சமணர்களால் அழைக்கப்படுகின்றன. மும்மணிகள், மூலகுணங்கள், மாவிரதங்கள் போன்ற சமண நெறிகள் சில இவ்வியலில் தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

சமணர்களின் மாவிரதங்களான கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, பிரம்மச்சரியம், அவாவறுத்தல் போன்ற நெறிகள் சங்கம் மருவிய இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளன. கொல்லாமை பற்றி திருக்குறள் நாலடியார் போன்ற நூல்கள் தனி அதிகாரங்களாகவே வைத்து இந்நெறியை வலியுறுத்துகின்றன. இன்னபிற நூல்களிலும் கொல்லாமை பற்றிய அறம் சார்ந்த பாடல்கள் காணப்படுகின்றன. தன்னுடைய ஊனினைப் பெருக்குதற்காக பிறவற்றின் ஊனை உண்ணுதல் பெரும் பாவம் என்பதான கொல்லாமை சார்ந்த கருத்துக்கள் கூறப்பட்டுள்ளன.

கொல்லாமை அறம் போலவே மற்ற அறங்களைப் பற்றிய பாடல்களும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன. 'வாய்மை என்று சொல்லப்படுவது யாது என்றால் அது யாவர்க்கும் தீமை பயக்காத சொல்லைக் கூறுவதே' என பொய்யாமை அறத்தையும்; 'பிறருடைய பொருட்களின் மீது விருப்பம் கொண்டால், தான் சேர்த்து வைத்த செல்வமும் அழிந்து போகும்' என கள்ளாமை அறத்தையும்; 'தவ ஒழுக்கமுடையவர்கள் காம ஒழுக்கம் மேற்கொள்ளல் கூடாது' என பிரம்மச்சரிய அறத்தையும்; 'பற்றினையும் அவாவையும் விட்டால் வீடுபேறு அடையலாம்' என அவாவறுத்தல் அறத்தையும் சங்கம் மருவிய இலக்கியங்களின் வழி அறியமுடிகின்றது.

## அடிக்குறிப்புகள்

1. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக்.11–12.
2. ஆர். பார்த்தசாரதி, சமணம், ப.8.
3. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், பக்.14–15.
4. ஆர். பார்த்தசாரதி, சமணம், பக்.9–10.
5. நா.சுப்பிரமணியன், இந்தியச் சிந்தனை மரபு, ப.20.
6. அருங்கலம், நூ.எண்: 3.
7. மேலது, நூ.எண்: 13.
8. மேலது, நூ.எண்: 14.
9. மேலது, நூ.எண்: 15.
10. மேலது, நூ.எண்: 17.
11. மேலது, நூ.எண்: 18.
12. மேலது, நூ.எண்: 19.
13. மேலது, நூ.எண்: 20.
14. மேலது, நூ.எண்: 21.
15. மேலது, நூ.எண்: 22.
16. மேலது, நூ.எண்: 23.
17. மேலது, நூ.எண்: 24.
18. சு.மாதவன், தமிழ் அறஇலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.139.
19. அருங்கலம், நூ.எண்: 57.
20. சு.மாதவன், தமிழ் அறஇலக்கியங்களும் பௌத்தசமண அறங்களும், ப.141.

21. அருங்கலம், நூ.எண்:59.

22. மேலது, நூ.எண்: 60.

23. மேலது, நூ.எண்: 61.

24. சு. மாதவன், தமிழ் அறஇலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.149.

25. அருங்கலம், நூ.எண்:62.

26. மயிலை சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.28.

27. சு.மாதவன், தமிழ் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.237.

28. அருங்கலம், நூ.எண்: 67.

29. குறள்.251.

30. மேலது, 260.

31. மேலது, 321.

32. மேலது, 330.

33. மேலது, 244.

34. மேலது, 261.

35. நாலடி., பா.எண், 121

36. மேலது, பா.எண், 122.

37. மேலது, பா.எண், 123.

38. பழமொழி, பா.எண், 123.

39. மேலது, பா.எண், 216.

40. நான்மணி., பா.எண், 28.

41. மேலது, பா.எண், 61.

42. மேலது, பா.எண், 95.

43. மேலது, பா.எண், 40.

44. கடுகம். பா.எண், 26.

45. மேலது, 36.

46. மேலது, 74.

47. சி.மூலம், பா.எண், 13.

48. மேலது, பா.எண், 10.

49. மேலது, பா.எண், 48.

50. மேலது, பா.எண், 51.

51. மேலது, பா.எண், 70.

52. அருங்கலம், நூ.எண்: 69.

53. மயலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.29.

54. குறள், 291.

55. மேலது, 291.

56. நான்மணி.,16.

57. மேலது, பா.எண், 23.

58. மேலது, பா.எண், 28.

59. மேலது, பா.எண், 24.

60. கடுகம். பா.எண், 32.

61. மேலது, பா.எண், 50.

62. மேலது, பா.எண், 78.

63. மேலது, பா.எண், 89.

64. சி.மூலம்., பா.எண், 1.

65. மேலது, பா.எண், 10.

66. மேலது, பா.எண், 19.

67. மேலது, பா.எண், 21.

68. மேலது, பா.எண், 39.

69. பழமொழி, பா.எண், 66.

70. மேலது, பா.எண், 98.

71. இனியவை, பா.எண், 32.

72. மயிலை. சீனி. வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.30.

73. அருங்கலம், நூ.எண்: 71.

74. குறள்.282.

75. மேலது, 171.

76. கடுகம், பா.எண், 20.

77. மேலது, பா.எண், 38.

78. நான்மணி., பா.எண், 62.

79. மேலது, பா.எண், 88.

80. சி.மூலம்.,பா.எண், 1

81. மேலது, பா.எண், 19.

82. மேலது, பா.எண், 21.

83. மயிலை சீனி.வேங்கடசாமி சமணமும் தமிழும், பக்.30–31.

84. அருங்கலம், நூ.எண்: 74.

85. குறள்.147.

86. மேலது, 901.

87. மேலது, 913.

88. நாலடி. பா.எண், 81.

89. மேலது, பா.எண், 378.

90. கடுகம், பா.எண், 19.

91. மேலது, பா.எண், 29.

92. நான்மணி., பா.எண், 31.

93. இனியவை. பா.எண், 16.

94. மேலது, பா.எண், 38.

95. ஏலாதி, பா.எண், 25.

96. ஆசாரம்., பா.எண், 37.

97. முதுமொழி., பா.எண், 8.

98. மயிலை சீனி.வேங்கடசாமி, சமணமும் தமிழும், ப.31.

99. சு.மாதவன், தமிழ் அற இலக்கியங்களும் பௌத்த சமண அறங்களும், ப.244.

100. அருங்கலம், நூ.எண்: 7.

101. குறள்.361.

102. மேலது, 351.

103. மேலது, 341.

104. மேலது, 350.

105. நாலடி. பா.எண், 4.

106. மேலது, பா.எண், 9.

107. இனியவை, பா.எண், 26.

108. முதுமொழி. பா.எண், 7.

109. மேலது, பா.எண், 9.

110. ஏலாதி, பா.எண், 11.

111. மேலது, பா.எண், 61.

112. நான்மணி., பா.எண், 82.

113. கடுகம், பா.எண், 22.

114. பழமொழி, பா.எண், 352.

115. அருங்கலம், நூ.எண்: 82.

116. பழமொழி, பா.எண், 140.

117. குறள், 926.

118. மேலது, 423.

119. மேலது, 352.

120. மேலது, 203.

121. நான்மணி., பா.எண்,53.

# சங்கம் மருவிய இலக்கியங்களில் பௌத்தம்

## முன்னுரை

மக்கள் தங்கள் வாழ்வின் மீது வைத்துள்ள ஆசைகளையும் பற்றுகளையும், வரையறுத்துக் கட்டுப்படுத்தியதில் பௌத்த சமயத்திற்கு பெரும்பங்கு உண்டு. பௌத்த சமயத்தின் வடிகாலனது ஆசையை அடக்குவதில் இருந்துதான் தொடங்குகிறது. வடஇந்தியாவில் தொடங்கிய பௌத்தம், தமிழகத்தில் சங்கம் மருவிய காலகட்டத்தில் தான் முழுமையாகக் காலூன்றியது. சங்கம் மருவிய கால இலக்கியங்கள் பலவற்றிலும் பௌத்த சமயத்தின் அறநெறிகள் கிடைக்கின்றன. சங்கம் மருவிய அகஇலக்கியங்களை விட அறஇலக்கியங்களில் பௌத்த அறங்கள் மிகுதியும் காணப்படுகின்றன. இவ்வகையில் பௌத்த சமயக் கருத்துக்கள் சங்கம் மருவிய இலக்கியங்களில் வெளிப்பட்டுள்ள முறை பற்றி ஆராய்வது இவ்வியலின் நோக்கமாகும்.

## பௌத்தம் அறிமுகம்

உலகமக்கள் நெறி பிறழ்ந்து நடக்கும் காலங்களிலும், மக்கள் துன்பப்படும் காலங்களிலும் புத்தர்கள் இவ்வுலகில் பிறந்து மக்களுக்கு உண்டான துயரைத் தீர்த்து அவர்கள் வாழ்வினைச் செம்மையுறச் செய்வார்கள் என்பது பௌத்த சமயத்தின் நம்பிக்கை. இதுபற்றி மயிலை.சீனி.வேங்கடசாமி, “உலகத்திலே அறம் குன்றி மறம் வளர்ந்து மக்கள் அல்லலுறுங் காலங்களிலெல்லாம் புத்தர்கள் தோன்றி அறவழியைப் புகட்டி மக்களை நல்வழிப்படுத்துகிறார்கள் என்பதும், பற்பல கற்ப காலங்களில் கணக்கற்ற புத்தர்கள் தோன்றி அறநெறியை நாட்டிச் சென்றார்கள் என்பதும், இப்போது

நடைபெறுகிற இந்தக் கற்ப காலத்திலே இருபத்தைந்து புத்தர்கள் தோன்றினார்கள் என்பதும், அவர்களுள் கடைசியாக வந்தவர் கௌதமபுத்தர் என்பதும் பௌத்த சமயக் கொள்கைகள். இனிவரப் போகிற புத்தரது பெயர் மயித்ரேய புத்தர் என்பதும், அவர் இப்போது துடிதலோகம் என்னும் தெய்வலோகத்திலே நாததேவர் என்னும் பெயருடன் இருக்கிறார் என்பதும் அந்த மதக் கொள்கையாம்''[1] என்று விளக்குகின்றார்.

இவ்வாறு புத்தர்கள் காலங்காலமாக பூமியில் தோன்றி மக்களை நல்வழிப்படுத்துகிறார்கள் என்பது பௌத்த சமயத்தின் கருத்தாகும். பல புத்தர்கள் பூமியில் வாழ்ந்தார்கள் என பௌத்த சமயத்தாரால் கூறப்பட்டுள்ள போதிலும், கௌதம புத்தரின் வரலாறும் கொள்கைகளும் தான் இன்றளவில் பௌத்தர்களால் கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. புத்தர் தாம் வாழ்வில் கண்டறிந்த உண்மைகளை நாடெங்கும் சென்று போதித்து வந்த போதிலும், அவற்றை நூல் வடிவில் எழுதி வைக்கவில்லை. இலங்கையில் ஆட்சி செய்த அரசனால் தான் புத்தரின் கருத்துக்கள் முதலில் நூல் வடிவம் பெற்றன. இதனை, "இலங்கைத் தீவிலே, கி.மு. மூன்றாம் நூற்றாண்டு முதல் நாளது வரையில், பழைய தேரவாத பௌத்தம் நிலைபெற்று உள்ளது. இத்தீவிலேயும் கி.மு.முதல் நூற்றாண்டிலே புதிய கொள்கைகள் புத்த மதத்தில் புகத் தொடங்கின. ஆகவே, தேரவாத பௌத்த பிக்குகள் ஒருங்குகூடி, ஆதிக் கொள்கைக்குப் புறம்பான புதிய கொள்கைகள் திரிபீடகத்தில் நுழையாதபடி போற்ற வேண்டும் என்னும் கருத்தோடு, அதுவரையும் எழுதா மறையாக இருந்த திரிபீடகத்தை நூல்வடிவமாக எழுதினார்கள். இலங்கைத் தீவை கி.மு.29 முதல் 17 வரையில் அரசாண்ட வட்ட காமினி அபயன் என்னும் அரசன்

காலத்தில் திரிபிடகம் முதல் முதல் நூல்வடிவமாக எழுதப்பட்டது''[2] என்ற மேற்கோளின் வழி அறியலாம்.

புத்தர் மறைந்த பிறகு அவரது போதனைகளை திரிபீடங்களாக அவரது சீடர்கள் வகைப்படுத்துகின்றனர். “புத்தர்பெருமான் நிர்வாணமோட்சம் அடைந்த சில திங்களுக்குப் பின்னர், மகதநாட்டுத் தலைநகரமான ராஜகிருஹ நகரத்திற்கு அண்மையில் இருந்த சத்தபணி என்னும் மலைக் குகையிலே கார்காலத்தைக் கழிக்கும் பொருட்டு ஐந்நூறு தேரர்கள் (வயது முதிர்ந்த பிக்குகள்) ஒருங்கு கூடினார்கள். இதுவே பிக்கு சங்கத்தார் கூடிய முதல் மாநாடு ஆகும். புத்தருடைய முக்கிய சீடர்களில் ஒருவராகிய மகாகாசிபர் இந்த மாநாட்டிற்குத் தலைமை தாங்கினார். புத்தர்பெருமான் அருளிய விநய போதனைகளை அவருடைய மற்றொரு முக்கிய சீடராகிய உபாலி என்பவர் ஓதினார். இன்னொரு முக்கிய சீடராகிய ஆநந்தர், புத்தர் அருளிய தம்ம போதனைகளை ஓதினார். இவ்வாறு, இந்த முதல் சங்கத்திலே விநயபிடகம், தம்ம (அபிதம்ம) பிடகம் என்னும் இரண்டு பிடகங்கள் மட்டும் தொகுக்கப்பட்டன. (சூத்திரபிடகம் என்னும் மூன்றாவது பிடகம், அபிதம்ம பிடகத்திலிருந்து பிற்காலத்தில் பிரித்துத் தொகுக்கப்பட்டது)''[3] என்று திரிபிடகங்களை எடுத்துரைப்பர் மயலை சீனி.வேங்கடசாமி.

### பௌத்தத் தத்துவம்

பௌத்த அறங்கள் ‘தம்மா’ என்ற பாலி மொழிச் சொல்லினால் குறிக்கப்படுகின்றன. இச்சொல் பௌத்த அறத்தையும், மெய்யியல் சிந்தனைகளையும் கூறுவதாக அமைகிறது. புத்தரின் அறக்கோட்பாடுகள் அர்த்த ஜாலம், தரும ஜாலம், பிரம்ம ஜாலம், திருஷ்டி ஜாலம், சங்கிராம அனுத்தா விஜயம் என்ற சொற்களால் குறிக்கப்படுகின்றன. ‘தம்மா’ என்பதற்கு,

“தம்மா (பாலி); தர்மா (சம்ஸ்கிருதம்) – பௌத்தம். பௌத்தத்தில் அடிக்கடி வருவதாகவும் பௌத்த மெய்யியலின் பல்வேறு இடங்களில், தொடர்புடையதாகவும் இச்சொல் விளங்குகிறது இச்சொல்லுக்குப் பொதுப்படையான ஒரு பொருள் இல்லை. ஆங்கிலத்தில் இதற்குச் சமயம், உண்மை, கொள்கை, நேர்மை, நற்குணம், அணு, தன்மை, இயற்கை, சட்டம், முறைமை, சொத்து, பிரத்தியட்சப் பொருள் எனப் பல பொருள்கள் உண்டு. இவற்றில் சிலபொருள்கள் பொதுவாக இந்திய சமயங்கள் சார்ந்தனவாகும். மற்றவற்றைப் பௌத்தத்தில் காணலாம். சமஸ்கிருத வேர்ச் சொல்லான ‘த்ர்’ என்பதற்கு, ‘சுமந்திருத்தல்’, ‘ஓர் அடித்தளம் அமைத்தல்’, ‘உயர்த்திப் பிடித்தல்’, ‘ஆதரவுதரல்’ போன்ற பல பொருள்கள் உண்டு. புத்த கோஷர் தம் பொழிப்புரையில் ‘தம்மா’விற்கு நான்கு வகையான பொருள்களைக் கூறுகிறார். **1)** நன்னடத்தையுடன் தொடர்புடையது, **2)** அறநெறி சார்ந்த கருத்துரை, **3)** புனித நூல்களிலுள்ள புத்தர் சொன்ன கொள்கை, **4)** பிரபஞ்சச் சட்டம். தம் தம்மசங்கணி பொழிப்புரையில் வேறுவித நான்கு பொருள்களைத் தருகிறார். **1)** கொள்கை, **2)** நிலை, **3)** அறத்தன்மை, **4)** அதிசய நிகழ்வு’’[4] என்று பொருள் விளக்கம் தருவர் சு.மாதவன்.

இதனடிப்படையில் நோக்கும் போது, ‘தம்மா’ என்பதற்கு அடிப்படைப் பொருள்களாக கொள்கை, நன்னடத்தை, அதிசய நிகழ்வு ஆகியவற்றைக் கொள்ளலாம். புத்தர் கூறிய அறக்கோட்பாட்டின் முழுமையையும் உணர்த்துவதே ‘தம்மா’ எனப்படுகிறது. “தம்மம் எனப்படும் அறம் (தருமம்) என்ற சொல் வெறும் சட்டவடிவத்தைச் சுட்டவில்லை. மாறாக வேறு எம்மொழியிலும் மொழிபெயர்க்க முடியாத உண்மை–நேர்மை ஆகிய உயர் அறங்களைச் சுட்டி நிற்பதாகும். சுருங்கக் கூறின், தம்மம் என்பது புத்தரின்

கோட்பாட்டை முழுமையாக உணர்த்தி நிற்கின்றது''[5] என தீக நிகாயத்தில் உள்ள 'தம்ம சக்கப் பவத்தன சூக்தம்' என்ற பகுதிக்கு 'ரைசு டேவிட்சு' விளக்கம் தருவதாக நெடுஞ்செழியன் கூறுகிறார். 'தம்மம்' என்பது இலட்சியம், நம்பிக்கை என்ற இரண்டு நெறிகளைத் தனது வேர்களாகக் கொண்டு விளங்குகின்றது. மனித குலத்தில் தோன்றும் அனைத்து வகையான துன்பங்களுக்கும், பிரச்சனைகளுக்கும், நோய்களுக்கும் ஒரு தீர்க்கமான முடிவினை எட்டுவதற்கான வழிமுறைகளை தன்னகத்தே கொண்டுள்ளதாக 'தம்மம்' விளங்குகிறது. துன்பத்தின் தோற்றுவாய்களையும் துன்பத்திற்கான மூலவேர்களாக இருக்கும் அறியாமையையும் நீக்குவதாக தம்மம் அமைகிறது.

தம்மம் பற்றி பி.ஆர்.அம்பேத்கர், "என் தம்மம் தன்னில் நம்பிக்கை, இலட்சியம் இரண்டையுமே கொண்டதாயுள்ளது. அதன் இலட்சியம் அவிஜ்ஜாவை நீக்குவதாகும். அவிஜ்ஜா என்பதற்குத் துன்பத்தின் இருப்பை அறியாமை என்று நான் பொருள் கொள்ளுகிறேன். அதில் நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில் அது மனித குலத் துன்பத்திற்கு முடிவு கட்டுவதற்கான வழியையும் காட்டுகிறது''[6] என்கிறார்.

அறியாமை என்பதே பௌத்த சமயத்தாரால் அவிஜ்ஜா எனப்படுகிறது. துன்பத்திற்கான மூலக்காரணங்களையும், அத்துன்பத்தினை நீக்குவதற்கான துன்பநீக்க வழிகளையும் நெறிப்படுத்துவதாகவே 'பௌத்த தம்மம்' விளங்குகின்றது.

பௌத்த தம்மம் அறியாமை நீக்கலையே மிகுதியும் பேசுகிறது. அறியாமையே அனைத்துத் துன்பத்திற்கும் காரணம் என்ற கருதுகோளை முன்வைக்கிறது. அறிவின்மையும், அறியாமையுமே முதன்மைப் பாவங்கள் எனப் பௌத்த அறநூல்கள் கூறுகின்றன. புத்தர் தன் வாழ்வின் எல்லா

நிலையிலும் அறியாமைத் துன்பத்தை நீக்குவதையே முதன்மையாகக் கொண்டிருந்தார்.

"மலங்களில் எல்லாம் பெரியதோர் மலம் உண்டு;

அறியாமையே முதன்மையான மலம் பிக்குகளே!

அந்த மலத்தையும் ஒழித்துவிட்டு, மாசற்றவராக விளங்குவீர்"[7] என்றும் "இந்த உலகிலோ அல்லது அடுத்த உலகிலோ எந்தத் துன்பங்கள் இருந்தாலும், அவைகள் அனைத்திற்கும் வேராக உள்ளது பேதமை. அவை (அத்துன்பங்கள்) விருப்பம் அல்லது ஆசை காரணமாக எழுபவை"[8] என்றும் விளக்குகின்றார்.

அறியாமையானது பன்னிரு சார்புகளின் அடிப்படையில் அமைகிறது. இப்பன்னிரு சார்புகளையும் நீக்கினால் அறியாமை என்னும் இருளை நீக்கி விடலாம் என்பதே பௌத்த சமயம் வலியுறுத்தும் அறமாகும்.

**பன்னிரு சார்புகள்**

பௌத்த சமயம் கூறும் பன்னிரு சார்புகளை, பௌத்த இலக்கியமான மணிமேகலையின் வழி அறியமுடிகிறது. சீத்தலை சாத்தனார் இப்பன்னிரு சார்புகள் பற்றி மணிமேகலையில் 30ஆம் காதையில் குறிப்பிட்டுள்ளார். இதனை,

"பேதமை செய்கை உணர்வே அருவுரு
வாயில் ஊறே நுகர்வே வேட்கை
பற்றே பவமே தோற்றம் வினைப்பயன்
இற்றென வகுத்த இயல்பீ ராறும்

பிறந்தோர் அறியில் பெரும்பேறு அறிகுவர்

அறியார் ஆயின் ஆழ்நர கறிகுவர்''[9]

என்ற அடிகளால் அறியலாம்.

1. பேதமை (அவிஜ்ஜை), 2. செய்கை (ஸ்ங்க்காரம்), 3. உணர்வு (விஞ்ஞானம்), 4. அருவுரு (நாமரூபம்), 5. வாயில் (ஸளாயதனா), 6. ஊறு (பஸ்ஸ), 7. நுகர்வு (வேதனா), 8. வேட்கை (துண்ஹா), 9. பற்று (உபநானம்), 10. பவம், 11. தோற்றம் (ஜாதி), 12. வினைப்பயன் (ஜராமரணம்) என்ற இப்பன்னிரு சார்புகளே அறியாமையின் வடிகால்களாக அமைகின்றன. இப்பன்னிரு சார்புகளையும் களைந்து வீடுபேறு அடைவதே பௌத்த சமயத்தின் நெறியாகக் கொள்ளப்படுகிறது.

**நான்கு வாய்மைகள்**

பௌத்தம் அறியாமை ஏற்படுவதற்கான பன்னிரு சார்புகளை முன் வைக்கிறது. இச்சார்புகளைக் களைந்தால் மட்டுமே வீடுபேறு எனப்படும் நிர்வாண மோட்சம் அடையமுடியும் என்கிறது. அறியாமையை நீக்குவதற்காக புத்தரால் மொழியப்பட்டவைகளே நான்கு வாய்மைகள் எனப்படுகின்றன. பௌத்த சமயத்தின் அடித்தளமாக இந்நான்கு வாய்மைகள் விளங்குகின்றன. அவை,

1. துக்கம் (துன்பம்)
2. துக்கோற்பதி (துன்பத் தோற்றுவாய்)
3. துக்க நிவாரணம் (துன்ப நீக்கம்)
4. துக்க நிவாரண மார்க்கம் (துன்ப நீக்க வழி)

என்பனவாகும்.

**துன்பம்**

பிறப்பு, முதுமை, மரணம், சோகம், அழுகை, மனச்சஞ்சலம் என அனைத்துமே துன்பங்கள் தான். நாம் விரும்பியதைத் துறப்பதும், விரும்பாததை அடைவதும் கூட துன்பங்களாகவே கொள்ளப்படும் என்பது புத்தர் வாக்கு. இத்துன்பமானது ஐந்து காரணங்களால் உண்டாகிறது. ராகுல் சாங்கிருத்யாயன்,

"(அ) உருவம் : நான்கு பூதங்களான நிலமும், நீரும் காற்றும் நெருப்பும் இதில் அடங்கும்.

(ஆ) வேதனை : நாம் பொருட்களைத் தொடும் போதும் அல்லது அவற்றைப் பற்றி எண்ணும் போதும் தோன்றும் சுக துக்கங்களின் அனுபவங்களை வேதனை என்று குறிப்பிடுகிறோம்.

(இ) பெயர் : வேதனைக்குப் பின்னர் நமது மூளையில் ஏற்கனவே பதிந்துள்ள பண்பாட்டை அடிப்படையாகக் கொண்டு 'இவன் அதே தேவதத்தன்தான்!' என்று நாம் அடையாளம் கண்டு கொள்வதுதான் பெயராகும்.

(ஈ) பண்பாடு : உருவ வேதனைகளின் முத்திரையும் பெயர்களின் பண்பாட்டு முத்திரையும் நமது மூளையில் பதிந்திருக்கும். அதன் உதவியால் 'இவன் அதே தேவதத்தன் தான்' என்று நாம் அடையாளம் கண்டு கொள்வதையே பண்பாடு என்கிறோம்.

(உ) விஞ்ஞானம் : உணர்ச்சி அல்லது மனம் விஞ்ஞானம் என்று குறிப்பிடப்படுகிறது''[10]

என்று துன்பமானது ஐந்து காரணங்களால் உருவானதை விளக்குவர். இவ்வைந்தும் தான் மனிதர்களுக்குத் துன்பத் தூண்டுகோலாக அமைந்து, வேதனைகளை உண்டாக்குகின்றன எனப் பௌத்தம் கூறுகிறது.

**துன்பத் தோற்றுவாய்**

உருவம், வேதனை, பெயர், பண்பாடு, விஞ்ஞானம் என்று இவ்வைந்தின் வழிதான் துன்பம் பிறக்கின்றன. இத்துன்பம் பிறப்பதற்கான காரணத்தையும் பௌத்தம் கூறுகிறது. இதனை, "துக்கத்தின் காரணம் : துக்கத்திற்குக் காரணம் என்ன ? கோரிக்கை அது காமத்தை அனுபவிக்க வேண்டுமென்ற கோரிக்கையாக இருக்கலாம். உலகத்தின் மீது ஆழமான பற்றாக இருக்கலாம் செல்வத்தை அடைய வேண்டுமென்ற கோரிக்கையாக இருக்கலாம். புலன்களுக்கு விருப்பமான விஷயங்களும், காரியங்களும், அவற்றின் தொடர்பும், எண்ணமும் கோரிக்கையைத் தோற்றுவிக்கின்றன. காமத்தை (விருப்பமானதை அனுபவிப்பது) அடைவதற்காகத்தான் அரசர்கள் ஒருவரோடு ஒருவர் போரிட்டுக் கொள்கின்றனர். க்ஷத்ரியர்கள் க்ஷத்ரியர்களுடன், பிராமணர்கள் பிராமணர்களுடன், வைசியர்கள் வைசியர்களுடன், தாய் மகனுடன், மகனும் தாயுடன், சகோதரன் சகோதரனுடன், தந்தை மகனுடன், மகன் தந்தையுடன், சகோதரி சகோதரனுடன், சகோதரன் சகோதரியுடன், நண்பன் நண்பனுடன் சண்டையிட்டுக் கொள்கின்றனர். அவர்கள் தமக்குள் வாதம் செய்து கலகம் செய்து வழக்காடி ஒருவரையொருவர் கைகளாலும் தடிகளாலும், ஆயுதங்களாலும் பயங்கரமாகத் தாக்கிக் கொள்கின்றனர்.

அவர்கள் மரணமும் அடைகின்றனர். மரணத்திற்கு ஈடான துக்கமும் பெறுகின்றனர்''[11] என்ற கருத்துத் தெளிவாக்கும்.

துன்பமானது நம் மனதிற்குள் தோன்றும் அவாவினால் தான் தோன்றுகிறது. ஏதோவெரு இச்சையின் கண்ணும், ஈர்ப்பின் கண்ணும் அவா உண்டாகிறது. அந்த அவாவே துன்பத்திற்கான காரணமாக அமைவதாக பௌத்தம் கூறுகிறது. துன்பத்தின் தோற்றுவாய் இவ்வாறிருக்க, இத்துன்ப நீக்கம் பற்றியும் பௌத்தத்தின் வழி நாம் அறியமுடிகிறது.

**துன்ப நீக்கம்**

துன்பத்தையும், துன்பத்திற்குக் காரணமாக இருப்பவைகளையும் நன்கு கண்டறிந்த பின், இவையனைத்திற்கும் காரணமாக இருப்பது அவா (ஆசை) தான் என்றறிந்து அதனிலிருந்து விடுதலையாகும் நெறியைக் காட்டுவதாக துன்ப நீக்கம் அமைகிறது. “துக்கத்தின் அழிவு: அந்தக் கோரிக்கையின் அழிவு துக்கத்தின் தடுப்பென்று குறிப்பிடப்படுகிறது. விரும்பிய விஷயங்களின் கோரிக்கை மறையும் போது கோரிக்கையின் தடுப்பு நிகழ்கிறது. கோரிக்கையின் அழிவில் விருப்பங்கள் தடுக்கப்படுகின்றன. விருப்பமான விஷயங்கள் தடுக்கப்படுவதால் உலகம் தடுக்கப்படுகிறது. உலகம் தடுக்கப்படுவதால் மறுபிறவி தடுக்கப்படுகிறது. பிறப்பின் தடுப்பால் முதுமை, மரணம், சோகம், அழுகை, வேதனை, மனச்சஞ்சலம் முதலியவை அழிந்துவிடுகின்றன. இவ்விதமாக துக்கங்கள் தடுக்கப்படுகின்றன''[12] எனத் துன்ப நீக்கத்திற்கான விளக்கத்தை பௌத்தத் தத்துவ இயல் கூறுகிறது.

எண்ணங்களால் உண்டாகும் தூண்டுகோலினால் தான் அனைத்துத் துன்பங்களும் உண்டாகின்றன. அவ்வெண்ணங்களைக் கட்டுப்படுத்தினால் துன்பத்தை நீக்கலாம் என்பதே பௌத்தத்தின் துன்ப நீக்க அறமாகும்.

**துன்ப நீக்க வழி**

நீக்க வழி பற்றியும், அதன்மூலம் கிடைக்கப்பெறும் வீடுபேறாகிய நிர்வாண மோட்சம் பற்றியும் பௌத்தம் விவரிக்கிறது. இதனை, “துன்பத்தைப் போக்கி வீடுபேறாகிய நிர்வான மோட்சத்தையடைவதற்குரிய வழியாது எனில், அட்டாங்க மார்க்கம் என்னும் எட்டுவித ஒழுக்கத்தை மேற்கொண்டு ஒழுகுவதாகும். அஷ்டாங்க மார்க்கமாவன: 1. நற்காட்சி, (ஸ்மயக் திருஷ்டி) 2. நல்லூற்றம் அஃதாவது நற்கருத்து (ஸமயக் சங்கல்பம்) 3. நல்வாய்மை (ஸம்யக் வாக்கு) 4. நற்செய்கை (ஸம்யக் கர்மம்) 5) நல்வாழ்க்கை (ஸம்யக் ஆஜிவம்) 6. நல்லூக்கம் அஃதாவது நன்முயற்சி (ஸம்யக் வியாயமம்) 7. நற்கடைப்பிடி (ஸமயக் ஸ்மிருதி) 8. நல்லமைதி (ஸம்யக் சமாதி)’’[13]

என மயிலை சீனி.வேங்கடசாமி கூறுகிறார். இவ்வெட்டு வகை மார்க்கத்தையும் கடைபிடித்தால் அறியாமை என்னும் இருளை அகற்றி வீடுபேறு அடையலாம். இந்த எண்வகை நெறிகளும் ஞானம் (பஞ்ஞா), ஒழுக்கம் (சீலம்), ஒருமை (சமாதி) என்ற மூன்று நிலைகளாக வகைப்படுத்தப்படுகின்றன.

1. நற்காட்சி
2. நல்லூற்றம் (நற்சிந்தை)
3. நல்வசனம் (நல்வாய்மை)
4. நல்செய்கை
5. நல்வாழ்க்கை
6. நல்லூக்கம் (நல்முயற்சி)
7. நற்கடைப்பிடி (நற்கருத்து)
8. நல்லமைதி (நற்சமாதி)

என்ற அமைப்பில் அட்டாங்க மார்க்கம் எனப்படும் எண்வகை மார்க்கங்கள் அமைகின்றன.

**நற்காட்சி**

சரியான காட்சி நிலையே நற்காட்சி என்பதாகும். அதாவது, கண்ணுக்கும் புலப்படுதல் இயல்பான காட்சி, கருத்துக்குப் புலப்படுத்தல் நற்காட்சியாகும். கண்ணுக்குப் புலப்படுதலை கருத்திற்குச் செலுத்தி ஆராய்ந்தறிவது இம்மார்க்கமாகும். இதனை, “நற்காட்சி அதாவது ஸம்யத் திருஷ்டி என்பது எல்லா விஷயங்களையும் பகுத்துணரும் அறிவாம். ஒவ்வொன்றினுடைய இயல்புகளையும் உள்ளது உள்ளபடியே ஆய்த்துணரும் அறிவியலே நற்காட்சி’’[14] என்கிறார் அப்பாத்துரையார்.

மேலும் நற்காட்சியானது கொல்லாமை, கள்ளாமை, சிற்றினம் சேராமை, வாய்மை, புறங்கூறாமை, இன்சொல், உளராமை, கருமித்தனம் இல்லாமை, நட்பு முதலியவற்றை உட்கூறுகளாய் கொண்டமைகின்றன.

**நற்சிந்தை**

எண்வகை மார்க்கத்திலும் ஞான நிலையிலும் இரண்டாவதாக காணப்படுவது நற்சிந்தை ஆகும். இதனை நல்லூற்றம் எனவும், நல்லுறுதி எனவும் பொருள் கொள்ளப்படுகின்றன. “உலகத்தைத் துறக்க வேணுமென்கிற எண்ணம், குற்றம் பாராட்டாதிருக்க வேணுமென்கிற எண்ணம், கொடூரச் செய்கைகளைச் செய்யாதிருக்க வேணுமென்கிற எண்ணம் இஃதே இல்லறத்திலேயே நற்சுகத்தையும், நற்பலனையும் கொடுக்கக் கூடிய நற்சித்தமாம்’’. யோசிக்கும் போதும், அவதானிக்கும் போதும், எண்ணும் போதும், நியாயங்கூறும் போதும், முயற்சிக்கும்

போதும் சித்தமானது பரிசுத்தத்துடனும் உலகப்பற்றை விட்டு சத்திய மார்க்கத்தில் நாடி சத்தியமார்க்கப் பிரகாரம் ஒழுகிவரும்படியான இச்சித்தத்தின் செயலே இல்லறத்தினின்று துறந்து சத்திய மார்க்கத்தில் பழகுவதினாலுண்டாகும் பரிசுத்த நற்சித்தமென்னப்படும்''[15] என்று நற்சிந்தனையைத் தெளிவாக்குவர்.

மனிதனின் ஒவ்வொரு செயலின் போதும் உண்டாகும் நற்காட்சி, அக்காட்சியின் வழிப்பட்டே நற்சிந்தையானது ஒழுகவேண்டும். நற்காட்சியுணர்வே நற்சிந்தைக்கான நடைமுறையை வகுத்துக் கொள்ள உதவுகிறது. நற்காட்சி, நற்சிந்தை என்ற இரண்டுமே ஞான நிலையின் அங்கமாகத் திகழ்கின்றது.

**நல்வசனம்**

ஒழுக்க (சீலம்) நிலையில் முதலாவதாகவும் அட்டாங்க மார்க்கத்தில் மூன்றாவதாகவும் அமைவது நல்வசனம் எனப்படும் நல்வாய்மை ஆகும். வாழ்க்கையின் அனைத்து நிகழ்வுகளிலும் நல்ல சொற்களைப் பேசுதலே நல்வசனம் அல்லது நல்வாய்மை எனப்படுகிறது. வாயிலிருந்து வரும் சொற்களில் எவையெவையை விலக்க வேண்டும் என்றும், எவ்வெவற்றைப் பேச வேண்டும் என்றும் பௌத்தம் வரையறுக்கிறது. அவ்வகையில், ‘‘பொய், புறங்கூறல், இன்னாச்சொல், வீண்பேச்சு முதலியவற்றை ஒழித்து வாய்மை, அடக்கம், இன்சொல், பயனுள்ள அற ஆராய்ச்சி முதலிய நற்பண்புகளை வளர்த்துக் கொள்ளுங்கள். உங்கள் உள்ளத்திலே அரசர் கொலுவீற்றிருக்கிறார். அந்தக் கொலு மண்டபத்தின் வாயில் உங்களுடைய வாய், வாயில் கண்டகண்ட வார்த்தைகள் நுழைந்துவிடாமல் காத்துக் கொள்ளுங்கள்; அமைதி, அழகு, கௌரவம் ஆகியவற்றில் ஊறிய

சொற்களையே வாய் பழகிக்கொள்ள வேண்டும். இது நல்வாய்மை''[16] என்று விளக்குவர் ப.ராமசாமி.

நாம் பேசும் எந்தப் பேச்சுக்களால் நன்மை விளையுமோ, அந்தப் பேச்சைப் பேசுவதையே நல்வாய்மை என்கிறோம். அதன்படி பொய்யாமை, புறங்கூறாமை, கொடுஞ்சொல் கூறாமை, பயனில சொல்லாமை என்ற பொருண்மைகள் நல்வாய்மையில் முக்கியமானதாக அமைகின்றன.

**நற்செய்கை**

மேற்கண்ட மார்க்கங்களின் படி நற்செய்கையானது அமைதல் வேண்டும். நல்வாழ்க்கைக்கு உரிய கட்டமைப்பை நற்செய்கையாதை உருவாக்க வேண்டும். பௌத்த அறங்களின் படி நற்செய்கையானது மூன்று பொருண்மைகளைக் கொண்டுள்ளதாக விளங்குகிறது. அவை,

1. கொல்லாமை
2. கள்ளாமை
3. காமமின்மை

இம்மூன்றும் பௌத்தர்களின் பஞ்சசீல ஒழுகலாறுகளிலும் இடம்பெறுகின்றன.

**நல்வாழ்க்கை**

பௌத்தம் வழியுறுத்தும் எண்வகை நெறிகளில் மையமாக இருப்பது நல்வாழ்க்கை என்னும் நெறியாகும். நல்வாழ்க்கை என்பது எண்ணம், சொல், செயல் என்ற மூன்று நிலைகளின் அடிப்படையில் அமைகிறது. ''நல்வாழ்க்கை அதாவது சம்யக் அஜீவா என்பது வாழ்க்கையின் இடையூறுகளை நீக்கி இனிது வாழ்தலாம். இது மார்க்கத்திற் செல்லுபவனுடைய வழியுணவாயிருக்க

வேண்டும். எவ்விதத் தொழிலைச் செய்தாலும் அதனால் எவருக்குந் துன்பத்தைத் தராததாகவும், பிறருக்கு நன்மை பயப்பதாகவும் இருத்தல் வேண்டும். மனிதர் பிறர் நலங்கருதாது தமக்கென்றே வாழ்வதாயிருந்தால் அது மிருக வாழ்க்கைக்கு ஒப்பாகுமேயல்லாமல் அறிவு நலங்கனிந்த மனித வாழ்க்கையாகாவாம்''[17]

இல்லறத்தில் வாழ்வோர் பிறருக்குத் தீங்கு விளைவிக்காத, நன்மை தரும்படியான தொழில்களையே செய்தல் வேண்டும். தங்கள் வாழ்வியல் தேவைகளைக் குறைத்துக் கொண்டு தியானத்திற்கு மிகுதியான காலத்தை ஒதுக்குதல் வேண்டும். இதுவே நல்வாழ்க்கைக்குரிய இயல்பு எனப் பௌத்தம் கூறுகிறது.

**நன்முயற்சி**

நன்முயற்சி என்பது புலன்களைத் தன் கட்டுக்குள் வைத்துக் கொள்ளுதல், தனது உணர்ச்சிகளை அடக்குதல், நல்ல உணர்ச்சிகளை உண்டாக்க முயலுதல், அவ்வாறான நல்லுணர்ச்சிகளை நிலைபெறச் செய்தல் என்பவையாக அமைகிறது. இதுபற்றி அயேத்திதாசப் பண்டிதர், ‘‘1. ஒவ்வொரு மனிதனும் தன்னிடமிருந்து நீக்க வேண்டிய முயற்சி, 2. தன்னை அணுகாமல் தடுக்க வேண்டிய முயற்சி, 3. தன்னிடத்தினினின்று மேலும் மேலும் உதிப்பிக்கச் செய்ய வேண்டிய முயற்சி, 4. தன்னிடத்துள்ளதைப் பாதுகாக்க வேண்டிய முயற்சி.

இத்தகைய நான்கு முயற்சிகளையுந் தெளிந்தவன் சுகமற்றத் தீங்குகளைத் தன் சித்தத்தில் எழவிடாமல் அதே முயற்சியிற் போராடி முழு தைரியத்துடன் தன் மனதைத் திடப்படுத்திக் கொள்வான்''[18] என்கிறார்.

இவ்வாறு தீய முயற்சிகளிலிருந்து மனிதனைப் பிரித்தெடுத்து நன்முயற்சிகளின் வழி உய்த்தல் வேண்டும் என்பதே பௌத்த அறநெறியின் நோக்கமாகும்.

**நற்சிந்தனை**

உடல், உணர்ச்சி, எண்ணம், சித்தம் ஆகியவற்றின் சரியான நிலைமைகளை அறிந்து, அவை வாடிப்போவதையும், வினாடிக்கு வினாடி அழிவதையும் நினைவில் வைத்துக் கொள்ளுதலே நற்சிந்தனை எனப்படுகிறது. இதனை, “1. தேகத்தை மலபாண்டமென்றும் அசுத்தமென்றும் சிந்தித்தல், 2. உணர்ச்சிகளிலிருந்து உண்டாகும் கேடுகளைச் சிந்தித்தல், 3. எண்ணங்களில் நிலையில்லா செய்கைகளைச் சிந்தித்தல், 4. அந்தரங்கத்தோர் விகாரங்களைச் சுத்த அறிவுடனும் புலன்கள் விழிப்பினின்றும், உலக அவாவினின்றும், துக்கத்தினின்றும், தரும சிந்தனையை சிந்தித்தல். இந்நான்கையே சக்தி பதானங்களென்றும் அல்லது முக்கிய தியானத்தின் நான்கு பாதைகளென்றுங் கூறப்படும்”[19] என்ற மேற்கோளின் வழி அறியலாம். மேற்கண்ட நான்கு சிந்தனைகளில் நிலைத்து நின்றால் பௌத்தம் கூறும் பிறவாப் பெருநெறி என்னும் வீடுபேறு கிடைக்கும்.

**நற்சமாதி**

அட்டாங்க மார்க்கத்தின் இறுதிப் படிநிலையே நற்சமாதி ஆகும். உலகியல் பற்று நீங்கி பிறப்பறுக்க முயலும் நிலையே நற்சமாதி எனப்படுகிறது. இதனை, “இதுவே அதீதப்பட்ட ஞானம், இதுவே துக்கம் நீங்கிய இடம்; இதுவே பிறப்பிறப்பற்ற நிலை; இதுவே சத்திய பீடம், இதுவே உள்ளத் துறவு, இதுவே பரமசாந்தி, இதுவே சுகவாரி, இதுவே பரமானந்தம், இதுவே சர்வ

உலகங்களையுந் தோற்ற வைக்கும் பளிங்கு, இதுவே சர்வ உள்ளங்களையும் அறியத்தக்க பளிங்கு, இதுவே சாந்தம் நிறைந்த பிரமம். இதுவே அன்பு நிறைந்த சிவம், இதுவே யீகை நிறைந்த வீசன், இதுவே சுகமுக்தி, இதுவே பரமோஷம், இதுவே நிருவாணமுமாம்''[20] எனப்புத்தரின் சிந்தனைகள் என்ற நூலில் அயோத்திதாசப் பண்டிதர் கூறுகிறார்.

மேற்சொன்ன ஏழு நெறிகளும் மன ஒருமை சார்ந்தே அமைகின்றன. இவ்வேழு நெறிகளையும் கடைபிடிப்போருக்கு பிறவாப் பெருநெறி என்னும் நற்சமாதி நிலை வாய்க்கின்றது. இவ்வாறாக பௌத்தமானது நான்கு வாய்மைகள், எண்வகை மார்க்கங்கள் என்பதோடு அல்லாமல் இன்னும் பல கூறுகளையும் தன்னத்தே கொண்டுள்ளது.

**திருக்குறளில் பௌத்தம்**

சங்கம் மருவிய இலக்கியங்களில் பௌத்தம் சார்ந்த கருத்துக்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றில் முதலாவதாக திருக்குறள் அமைகிறது. தமிழகத்தில் பௌத்த சமயமும் சமண சமயமும் கோலோச்சி இருந்த காலத்தில் தோன்றியதே திருக்குறள். இந்நூல் சமயப் பொதுமறையாகக் கருதப்பட்டாலும் பௌத்த சமண கருத்துகள் மிகுதியாகக் காணப்படுகின்றன. பௌத்த அறங்களை வெளிப்படுத்தும் தம்மபதம், தீகநிகாயம் போன்ற நூல்களில் காணப்படும் கருத்துகள் பலவும் திருக்குறளில் காணப்படுகின்றன.

பௌத்தம் பெரிதும் வலியுறுத்துவது ஆசை அறுத்தலையே ஆகும். இதனை 'இன்னா செய்யாமை' என்ற நிலையில் காணும்போது, 'பொருட்பயன் கருதியோ, மன மகிழ்வு கருதியோ எந்தவொரு உயிர்க்கும் இன்னா செய்யாமலிருத்தலே இன்னா செய்யாமை ஆகும். இதைப் போலவே

பொருட்பயன் கருதியோ மன மகிழ்வு கருதியோ தான் ஆசை எழுகிறது. இவ்வாசையேதான் துன்பம் செய்யத் தூண்டுகிறது. எனவேதான் இன்னா செய்யாமை என்பது ‘ஆசை அறுததல்’ என்பதன் முதல் படியாக விளங்குகிறது. “இன்னா கூறாமை, இன்னா செய்யாமை, ஒழுக்கத்திற்குப் பொருந்தக் கட்டுப்பாட்டுடை மையைப் பயிலுதல். இவையே புத்தரின் ஆலோசனை’’[21] என்கிறார் அம்பேத்கார். அவர் மேலும், “பிறர் தீங்கிழைப் போராயினும் நீங்கள் தீங்கிழைக்காதவராய் இருக்கத் தீர்மானிப்பதன் மூலம் அதைத் தீய்க்கலாம்’‘[22] என்பதான பௌத்தம் பற்றிய அம்பேத்கரின் கருத்துகள் திருக்குறளிலும் காணப்படுகின்றன.

திருக்குறளில் இன்னா செய்யாமை என்ற தனி அதிகாரத்தையே வகுத்துள்ளார் வள்ளுவர். இவ்வதிகாரத்தில் காணப்படும் குறள்கள் பலவும் பௌத்த அறநெறி சார்ந்ததாகக் காணப்படுகின்றன.

“இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால்
என்ன பயத்ததோ சால்பு’’[23]

“இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்ஞான
நன்னையம் செய்துவிடல்’’[24]

என்ற குறள்கள் மேற்சொன்ன பௌத்த அறநெறியுடன் ஒத்திருப்பதைக் காணலாம். தமக்குத் தீமைகளைச் செய்தவர்களுக்கும் நல்லவையே செய்ய வேண்டுமென்றும், அதுவே சால்புடைமை என்றும் இவ்விரு குறள்களும் வலியுறுத்துகின்றன. தனக்கு எது சுகம் என்று எண்ணுகிறானோ, அதே சுகத்தைத் தான் ஏனைய உயிரினங்களும் எண்ணும் என்பதை அறிந்து, அவற்றைத் தண்டிக்காமலும் கொலை புரியாமலும் இருக்க வேண்டும் என்கிறது பௌத்தம்.

“தன் சுகத்தைக் கோறும் ஒருவன் அதே சுகத்தைக் கோறும் ஏனைய ஜீவர்களைத் தண்டித்தும், கொலை புரிந்தும், வருவானேல் அவன் சுகத்தை அடையவே மாட்டான். தன் சுகத்தைக் கோரும் ஒருவன் அதே சுகத்தைக் கோரும் ஏனைய ஜீவர்களைத் தண்டியாதும், கொலை புரியாதும் வருவானேல் அவன் சுகத்தை அடைவான்’’[25] எனப் புத்தரின் ஆதிவேதம் என்ற நூலில் அயோத்திதாசப் பண்டிதர் கூறுகிறார். இக்கருத்தினை உட்கொண்டதாக இன்னா செய்யாமை அதிகாரத்தில் அமைந்துள்ள குறள்கள் காணப்படுகின்றன.

“தன்னுயிர்க்கு இன்னாமைதான் அறிவான் எவன்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்’’[26]

“இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்’’[27]

என்பதான குறள்கள் மேற்சொன்ன பௌத்தத்தின் கருத்தை வெளிப்படுத்துவனவாக உள்ளன. ‘தன்னுயிர்க்குத் துன்பம் தருவது இது என்று அறியும் ஒருவன், மற்றை உயிர்களுக்கு அத்துன்பத்தைச் செய்வது என்ன அறிவுடைமையாம்’ என முதல் குறளும்; தனக்குத் துன்பமானது என்று ஒருவன் தன் பட்டறிவினால் உணர்ந்தவற்றைப் பிறனிடத்துச் செய்வதற்கு மனதளவால் கூட நினையாதிருத்தல் வேண்டும் என இரண்டாவது குறளும் பொருள் தருகின்றன. இவ்விரு குறள்களும் பௌத்த சமயத்தின் ‘இன்னா செய்யாமை’ அறத்தை வெளிப்படையாகவே வலியுறுத்துகின்றன. இவ்வறத்தை மறைமுகமாக வலியுறுத்தும் குறள்களும் திருக்குறளில் காணப்படுகின்றன.

"அறிவினான் ஆகுவது உண்டோ பிறிதின் நோய்
தந்நோய்போல் போற்றாக் கடை''[28]

"ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்
செத்தாருள் வைக்கப் படும்''[29]

என்ற குறள்கள் பிற உயிர்களுக்கு இன்னா செய்தல் கூடாது என்பதை மறைமுகமாக உணர்த்துகின்றன. பௌத்தத்தின் அடிப்படை அறமே அறியாமை இருளை அகற்ற வேண்டும் என்பதுதான். நமக்கு நிகழும் அனைத்தத் துன்பங்களுக்கும் மூலமாக இருப்பது அறியாமையே ஆகும். இதுபற்றி ப.ராமசாமி, "இந்த உலகிலோ அல்லது அடுத்த உலகிலோ எந்தத் துன்பங்கள் இருந்தாலும் அவைகள் அனைத்திற்கும் வேராக உள்ளது பேதமை அவை (அத்துன்பங்கள்) விருப்பம் அல்லது ஆசை காரணமாக எழுபவை'' மலங்களில் எல்லாம் பெரியதோர் மலம் உண்டு. அறியாமையே முதன்மையான மலம் பிக்குகளே, அந்த மலத்தையும் ஒழித்துவிட்டு மாசற்றவராக விளங்குவீர்''[30] என்கிறார்.

அறியாமை காரணமாகவே பிறப்புமுதல் இறப்பு வரையிலான அனைத்துத் துன்பங்களும் நிகழ்கின்றன என பௌத்தம் கூறுகிறது. இதே கருத்தினையே வள்ளுவரும் சில குறள்களில் வெளிப்படுத்தியுள்ளார்.

"பொருளல்ல வற்றைப் பொருளென் றுணரும்
மருளானாம் மாணாப் பிறப்பு''[29]

"பிறப்பென்னும் பேதமை நீங்கச் சிறப்பென்னும்
செம்பொருள் காண்ப தறிவு''[30]

என்ற குறள்களோடு மட்டுமல்லாமல் மெய்யுணர்தல் அதிகாரத்தில் உள்ள குறள்கள் பலவும் அறியாமை நிலையை நீக்க வேண்டியதன் அவசியத்தை பௌத்தத்தின் வழிநின்று கூறுகின்றன.

**திருக்குறளில் பன்னிரு சார்புகள்**

பிறப்பிற்கான மூலங்களாக உள்ளவைகளையே பன்னிரு சார்புகள் எனப்பௌத்தம் வரையறுக்கிறது. இப்பன்னிரு சார்புகளிலிருந்து நீங்குதலே பிறப்பறுத்தலுக்கான நெறிமுறையாகும். பன்னிரு சார்புகளும் ஒன்றின் ஒன்று தொடர்புடைய தொடர் சங்கிலி போல் காணப்படுகின்றன. இப்பனிரு சார்புகள் பற்றித் திருக்குறள் பொதுவாகச் சுட்டுகிறது.

“யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்”[33]

‘ஒருவன் எந்தப் பொருள்களில் இருந்து ‘வேண்டா’ ‘வேண்டா’ என விடுதலை அடைவானோ அந்தப் பொருள்களால் அவனுக்குத் துன்பம் இல்லை’ என்கிறது திருக்குறள். இதனை தம்மபதம் “தம்முடைய (பிறப்பு இறப்பாகிய) பிரயாணத்தை முடித்துக் கொண்டு, எல்லாத் துக்கங்களினின்றும் விலகிக் கொண்டு, எல்லாவிதப் பற்றுக்களையும் விட்டுவிட்டு, எல்லா வழியிலும் தம்மை உயர்த்திக் கொண்டவருக்குக் கவலை என்பது இல்லை”[34] என்கிறது.

தம்மபதத்தின் இக்கூற்றும் திருக்குறளின் கருத்துக்களும் ஒருமித்த பொருளுடையதாகவே காணப்படுகின்றன. பௌத்தம் இல்லற வாழ்வை விட, துறவையே மிகுதியும் வலியுறுத்துகின்றது. பௌத்தத்தின் துறவு நெறியை

வள்ளுவமும் தன்னுள் கொண்டுள்ளது. “துறவின் இயல்புகளாக வள்ளுவம் வகுத்துரைப்பனவற்றை கீழ்க்காணுமாறு தொகுக்கலாம்.

1. எதன் பொருட்டும் பற்றின்றியிருத்தல்
2. ஐம்புலன்களின் இன்பநாட்டத்தை ஒடுக்குதல்
3. உடலைக் கூட சுமையாகக் கருதுதல்
4. நான் என்னும் அகந்தையைக் கைவிடல்
5. துறவுநெறி நிற்பார் பற்றப்படுவதற்கு ஒரு பொருளும் இல்லை என அறிதல்.
6. வீடுபேறு அல்லது பிறப்பறுத்தலை நோக்கி இட்டுச் செல்லல்.
7. இவை எல்லாவற்றுக்கும் அடிப்படையான நிலையாமைத் தன்மையை உணர்ந்து அறிந்து தெளிதல்.
8. தன்மையை உணர்ந்து அறிந்து தெளிதல்’’[35]

என்ற கருத்து இதனைக் குறிப்பிடும்.

இக்கருத்துக்களைத் தான் பௌத்தமும் எடுத்துரைக்கின்றது. துறவு என்பது உடல், உயிர், உணர்வு ஆகிய எவற்றின் தொடர்பாக கிடைக்கும் பயன்களை அனுபவிப்பதன்று. பிறப்பறுத்தலுக்குரிய நெறிகளைப் பின்பற்றுதலே துறவு என்கிறது பௌத்தம். இதனை,

“இயல்பாகும் நோன்பிற்கு ஒன்றின்மை உடைமை
மயிலாகும் மற்றப் பெயர்த்து’’[36]

என்ற குறள் வெளிப்படுத்துகின்றது. “ஒரு பற்றும் இல்லாதிருத்தலே துறவிற்கு இயல்பாகும். ஒன்றன் மேலேனும் பற்றுதல் உண்டாயின், அது மீண்டும் பற்றுகளைப் பற்ற வைக்க மயக்குவதாகும்’ என வள்ளுவமும் பௌத்தமும்

துறவு நெறியில் ஒன்றிய கருத்தினையே வெளிப்படுத்துகின்றன. துறவு என்பது அகத்தூய்மையே தவிர புறத்தூய்மை அல்ல. இதன் அடிப்படையில் துறவிக்குரிய புறத்தோற்ற வெளிப்பாட்டுக் கூறுகளான மழித்தலும் நீட்டலும் தேவையற்றது என்கிறது.

“புலனடக்கம் இல்லாமல் பொய்சொல்லித் திரியும் ஒருவன் தலையை முண்டிதம் செய்து கொள்வதால் முனிவனாகிவிட மாட்டான். இச்சைகளுக்கும் பேராசைகளுக்கும் அடிமைப்பட்டிருக்கும் ஒருவன் முனிவனாயிருப்பது எங்ஙனம்**?**’’[37] என்ற தம்மபதப் பாடலின் பொருளானது புற அடக்கத்தை விடவும், புறத்தே துறவு நிலையைக் காட்டுவதை விடவும், அக அடக்கமும் அகத்தே துறந்து இருப்பதையுமே சிறந்தது என்கிறது. இதே கருத்தை திருக்குறளும் பின்வரும் குறளின் மூலம் வெளிப்படுத்துகிறது.

“மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்’’[38]

என்ற குறள் ‘உயர்ந்தோர் பழிக்கின்ற தீய ஒழுக்கத்தை நீக்கி விட்டால், துறவோர் தம் முடியை மழித்துக் கொள்வதும் முடியை வளர்த்து நீட்டிக் கொள்வதும் ஆகிய வேடங்கள் வேண்டியன அல்ல’ என்கிறது. இக்குறளின் கருத்தும், தம்மபதம் பாடலில் உள்ள மேற்கண்ட கருத்தும் ஒத்து இருப்பதைக் காணமுடிகிறது.

மனிதன் தன்னைத்தானே மதிப்பிட்டுக் கொள்ள வேண்டும் என்கிறது பௌத்தம். தனது சிந்தனை, சொல், செயல்களைத் துல்லியமாக மதிப்பிட்டு அதற்குத் தக்கவாறு தன் வாழ்க்கையை அமைத்தல் வேண்டாம்.

“ஒருவர்தம் குற்றத்தை அறிவாரானால் அதனாலேயே அவர் அறிவாளியாகிறார். தான் அறிவாளி என்று நினைக்கிற ஒரு மூடன் உண்மையிலேயே மூடனாக இருக்கிறான்’’[39] என்றும், “பிறருடைய குற்றம் எளிதில் காணப்படுகிறது. ஆனால், தன்னுடைய குற்றத்தைக் காண்பது கடினமாக இருக்கிறது. பிறருடைய குற்றங்களை பதரைத் தூற்றுவது போல் தூற்றுகிறவர், தந்திரமுள்ள, சூதுக்காயை ஒளிப்பதுபோல், தன் சொந்தக் குற்றத்தை மறைக்கிறார்’’[40] என்றும் “எப்போதும் பிறர் குற்றங்களைக் கண்டு குறை கூறுகிறவர்கள், தம்முடைய குற்றங்களை வளரவிடுகிறார்கள். அவர்கள் தமது குற்றங்களை அழிக்க முடியாதவர்களாக இருக்கிறார்கள்.’’[41]

இவ்வாறான தம்மபதப் பாடல்களின் பொருள்கள், முதலில் தம்மிடம் உள்ள குறைகளையும் குற்றங்களையும் காணுதல் வேண்டும் என்கிறது. அவ்வாறு கண்ட குற்றங்குறைகளைக் களைவதை விடுத்து, பிறர் மேல் குறைகளைக் கூறுவதும் குற்றங்காண்பதும் தவறாகும் என்கிறது. இதே கருத்தினை,

“தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின்
என்குற்றம் ஆகும் இறைக்கு’’[42]

“ஏதிலார் குற்றம்போல் தம்குற்றம் காண்கிற்பின்
தீதுண்டோ மன்னும் உயிர்க்கு’’[43]

என்ற குறள்கள் ‘தன்னிடத்து உள்ள குற்றத்தைக் கண்டறிந்து, பின் அதை நீக்கியவன், பிறர் குற்றங்களைக் காண வல்லவன் என்றும்; பிறருடைய குற்றத்தைக் காண்பதுபோல், தன்னிடமுள்ள குற்றத்தையும் காண வேண்டும்

என்றும் பொருள் தருகின்றன. இது தம்மபதக் கருத்தினை வெளிப்படுத்தும் வகையில் உள்ளது.

இவைமட்டுமல்லாது திருக்குறளில் உள்ள 'அஞ்சுவது அஞ்சாமை' என்ற குறள்,

"அஞ்சவேண்டியவற்றில் அஞ்சாமையும் அஞ்ச வேண்டாதவற்றில் அச்சத்தையும் காண்கிறவர்கள். தவறான காட்சியைப் பெற்றிருப்பதனாலேயே, நரகத்திற்குச் செல்கிறார்''[44] என்ற தம்மபதக் கருத்துக்களை உள்வாங்கியதாகவே அமைந்துள்ளது. மேலும் 'அந்தணர் என்போர்' 'உடுக்கை இழந்தவன் கைபோல' என்ற குறள்களும் பௌத்த அறத்தை வெளிப்படுத்தும் விதமாகவே அமைந்துள்ளன.

திருக்குறளில் பௌத்த சமயக் கருத்துகள் பல இடங்களில் வெளிப்படையாகவும், பல இடங்களில் மறைமுகமாகவும் காணப்படுகின்றன. பௌத்த நெறியின் சாராம்சங்களான நான்கு வாய்மைகள், எண்வகை மார்க்கங்கள் முதலியவை திருக்குறளில் ஆங்காங்கே வலியுறுத்தப்பட்டுள்ளன.

**நாலடியாரில் பௌத்தம்**

நாலடியார் சமண சமயத்தாரால் இயற்றப்பட்டது. இருப்பினும் பௌத்தம் சமகால சமயமாக இருப்பதினால், இச்சமயத்தின் கருத்துக்கள் பலவும் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. அனைத்து சமயங்களும் தோன்றின இடமும், செல்லுகின்ற நெறிகள் வேறு வழியாக இருப்பினும் அவை சங்கமமாகும் இடம் ஒன்றுதான் என்கிறது நாலடியார்.

"ஆவேறு உருவின ஆயினும் ஆபயந்த
பால்வேறு உருவின அல்லவாம் – பால்போல்

ஒருதன்மைத் தாகும் அறநெறி, ஆபோல்
உருவு பலகொளல் ஈங்கு’’[45]

‘ஆக்கள் வேறுவேறு நிறத்தன வாயினும், அவ்வாக்களால் கிடைத்த பால்கள் வேறுவேறு நிறத்தன அல்ல. அதேபோல, இவ்வுலகில் அறத்தைக் கடைபிடிக்கும் முறைகள் ஆக்களைப் போல் பலவாக உருக்கொண்டிருந்தாலும், ஆக்களின் பாலைப் போல் அறம் ஒரே தன்மையுடையதாகும்’ என்பதன் வழி நாலடியாரின் சமயப் பொதுமையை அறியமுடிகிறது. பௌத்த சமயத்தின் பன்னிரு சார்புகளில் முதன்மைச் சார்பாகக் காணப்படுவது பேதமை ஆகும். இதுபற்றி நாலடியார் தனி அதிகாரமாகவே வகுத்துள்ளது.

“பெருங்கட லாடிய சென்றார் ஒருங்குடன்
ஓசை அவிந்தபின் ஆடுது மென்றற்றால்
இற்செய் குறைவினை நீக்கி அறவினை
மற்றவாம் என்றிருப்பார் மாண்பு’’[46]

என்ற பாடலில் குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய குறைகளைத் தீர்த்து, அதன் பின்பு அறச்செயல்களைச் செய்வோம் என்று கருதுவது இழிதகைமை என்னும் பேதமை ஆகும் என்கிறது நாலடியார். இதைப் போன்று பேதமையை வலியுறுத்தும் பாடல்கள் பல இவ்வதிகாரத்தில் காணப்படுகின்றன. இவை பௌத்த சமயத்தின் பேதமை அறத்தை முழுமையாக வெளிப்படுத்தா விட்டாலும் பௌத்த அறம் சார்ந்ததாகவே அமைந்துள்ளது.

**நாலடியாரில் ஐவகை நெறிகள்**

சமண சமயத்தைப் போலவே பௌத்தமும் ஐவகை நெறிகளைக் கொண்டுள்ளது. இதனை சமணம் மாவிரதங்கள் என்று கொள்கிறது. இவற்றில் ‘கள்ளுண்ணாமை’ மட்டுமே சமணர்களின் ‘அவாஅறுத்தலுக்குப்’ பதில் மாறி அமைந்துள்ளது. ஐவகை நெறிகளில் முதன்மையாக அமைந்துள்ளது காமமின்மை ஆகும். இது துறவு நெறியில் ஒழுகுபவர்களுக்கே மிகுதியும் வலியுறுத்தப்படுகிறது. காமமின்மையின் உட்பிரிவான பிறன்மனை நயவாமையானது இல்லறத்தார் கடைபிடிக்க வேண்டிய நெறியாகக் கொள்ளப்படுகிறது. இவைகள் நாலடியாரில் உள்ள பாடல்களிலும் காணப்படுகின்றன.

“சிற்றின்பத்தை – அடைய விரும்பியும், பஞ்சேந்திரியங்களை அடக்காமலும் மிதமிஞ்சிய உணவை உண்டு சோம்பல் கொண்டும், சுறுசுறுப்பில்லாமலும் இரக்கின்றவனை மாரன் (மன்மதன்) பலமற்ற மரத்தைச் சூறாவளிக் காற்று பெயர்த்து வீழ்த்துவதைப் போல, வென்று விடுவான், சிற்றின்பம் அசுகி (கெட்டது) என்று கண்டும், பஞ்சேந்திரியங்களை அடக்கியும், மித உணவு கொண்டும் பக்தியும் சுறுசுறுப்பும் அடைந்தும் உள்ள ஒருவனை கற்பனையிலான மலையைச் சூறாவளிக் காற்று அசைக்க முடியாதது போல மாரன் அசைக்க முடியாது’’[47] என்று தம்மபதம் கூறுகிறது.

சிற்றின்பத்தை விரும்புபவன் பலமற்ற மரத்தைப் போல காணப்படுவான் என்றும், சிற்றின்பத்தை அடக்கி வாழ்பவனை சூறவாளிக் காற்றினால் கூட அசைக்க முடியாத மலையைப் போன்று பலமாக இருப்பான் என்ற தம்மபத கருத்தினை நாலடியார்,

“மெய்வாய் கண்மூக்கு செவியெனப் பேர்பெற்ற
ஐவாய வேட்கை யவாவினை – கைவாய்
கலங்காது காத்து ய்க்கும் ஆற்ற லுடையான்
விலங்காது வீடுபெறும்’’[46]

என்ற பாடலில் விளக்குகின்றது. ஐம்பொறிகளையும் அடக்கி ஒழுக்க நெறியில் செல்லும் வல்லமை உடையவன் வீடுபேறு அடைவான் என்கிறது நாலடியார். தம்மபதத்தில் தன் ஐம்பொறிகளை அடக்காது சிற்றின்பத்தில் துய்ப்பவனை பலமற்ற மரம் என்று குறிப்பிடுகிறது. மேலும் அதை நீக்கியவனை மலைபோன்றவன் என்றும் குறிக்கிறது. நாலடியாரோ ஐம்புலன்களையும் கட்டுப்படுத்தாதவனை வலிமையற்றவன் எனக் கூறுகிறது. இவ்வாறாக மேற்கண்ட பாடலில் பௌத்த சமயக் கருத்து வெளிப்பட்டிருப்பதினைக் காணமுடிகிறது.

பிறன் மனை நயவாமை பற்றியும் பௌத்தம் வலியுறுத்துகின்றது. “பிறன் மனைவியிடத்துச் சோரம் போகிறவனுக்கு இந்நான்கு தீமைகள் விளைகின்றன. பாவம், அமைதியான தூக்கமின்மை, பழிச்சொல், நரகம்’’[49] என்று எம்.ஆர்.அப்பாதுரை கூறுவர். இக்கருத்தினை நாலடியாரும் வலியுறுத்துகிறது.

“அறம்புகழ் கேண்மை பெருமைஇந் நான்கும்
பிறன்தாரம் நச்சுவார்ச் சேரா – பிறன்தாரம்
நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென்று
அச்சத்தோ டிந்நாற் பொருள்’’[50]

என்ற பாடல்வழி பிறன் மனைவியை விரும்புவோனிடத்து பிறர் பகையும், பழியும், பாவமும், அச்சமும் என்ற இந்நான்கு பொருள்களும் சேரும்’ என்ற

நாலடியாரின் கருத்தும் தம்மபதக் கருத்தின் வெளிப்பாடாகவே அமைந்துள்ளதைக் காணலாம்.

சமணம் கொல்லாமையை வலியுறுத்தியதைப் போலவே பௌத்தமும் கொல்லாமையை வலியுறுத்துகிறது. பௌத்தர்கள் கொல்லாமை அறத்தைக் கடைபிடிக்க உறுதி கொள்ள வேண்டும் எனவும் பௌத்தம் கூறுகிறது. "ஒவ்வொரு பௌத்தரும், 'பானாதி பாதா வேரமணீ சிக்காபாதம் சமாதியாமி' எனச் சூளுரைத்தல் மரபு. அதாவது, கொல்லாமை என்னும் சீலத்தைக் கடைபிடிக்கிறேன்'' என்பதாகும். இதைச் சுத்த பீடகத்தின் பகுதிகளாகிய தீக நிகாயமும், சம்யுத்த நிகாயமும் வலியுறுத்தியுள்ளன''[51] என்கிறார் சோ.ந.கந்தசாமி.

நாலடியாரில் கொல்லாமை, புலால் உண்ணாமை போன்றவை தனித்தனி அதிகாரங்களாக வைத்து வலியுறுத்தாத போதிலும், சில பாடல்களில் கொல்லாமை சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன.

பௌத்தர்களின் ஐவகை நெறிகளில் அடுத்ததாகக் கருதப்படுகின்ற கள்ளாமை, கள்ளுண்ணாமை பற்றிய செய்திகளைப் பௌத்த சமயமானது கூறுகிறது.

"அதின்னா தான வேரமணீ சிக்காபாதம் சமாதியாமி' என்று கள்ளாமை அறம் சுட்டப்படுகிறது. அதாவது, தனக்கு வழங்கப்படாததைக் கவர்தல் குற்றமாகும் என்பது இதன் பொருளாகும்''.[52]

"சுரா – மெரய – மஜ்ஜா பமாதட்டாண வேரமணீ
சிக்காபாதம் சமாதியாமி''

என்று பௌத்தம் பகர்கிறது. அதாவது, 'மயக்கத்தையும் மடிமையையும் பயக்கும் குடிவகைகளைத் தவிர்த்தல் என்னும் அறத்தை மேற்கொள்கிறேன்''[53]

என்ற கள்ளாமை, கள்ளுண்ணாமை பற்றிய அறக்கருத்துக்களை விளக்குவர் க.மாதவன். இக்கருத்துக்கள் நாலடியாரின் பாடலிலும் வெளிப்படுத்துகின்றன.

"கள்ளார் கள்ளுண்ணார், கடிவ கடிந்தொரீஇ
எள்ளிப் பிறரை இகழ்ந்துரையார் – தள்ளியும்
வாயிற்பொய் கூறார் வடுவறு காட்சியார்
சாயிற் பரிவ திலர்''[54]

என்ற பாடல் கள்ளாமையும் கள்ளுண்ணாமையும் கடைபிடிப்பவர்கள் சிந்தனைத் தெளிவுள்ள சான்றோராகக் கொள்ளப்படுவர் என்கிறது. பௌத்த அறத்தை நாலடியார் இப்பாடலில் அழுத்தமாகப் பதிவு செய்துள்ளது.

பொய்யாமை அறம் பற்றியும் பௌத்தம் பேசுகிறது. பொய்யுரையினைத் தவிர்த்தல் என்று உறுதி கொண்டு வாழ்தல் வேண்டும் என்கிறது.

"நீதிமன்றங்களிலும், சான்றோர் அவையிலும் பொய் பேசுவதற்குக் காரணமாதலும், கடியத்தக்கன என்றும் பொய்யின் பலவகைகளையும் தவிர்த்தல் வேண்டும் என்றும் பௌத்தம் இயம்புகிறது.''[55] இதே கருத்தினை,

"வாயின் பொய் கூறார்; வடுவறு காட்சியார்''[56]

என்ற பாடலும் உணர்த்துகிறது. இன்னும் பல அறங்கள் நாலடியாரின் பல பாடல்களில் காணப்படுகின்றன. சமணமும் பௌத்தமும் தங்களுக்குள்

ஒருமித்த அறநெறிகளையே கொண்டிருக்கின்றன. நாலடியாரில் உள்ள பாடல்களும் பௌத்த சமண அறங்களைத் தழுவியதாகவே காணப்படுகின்றன.

**பழமொழி நானூறில் பௌத்தம்**

பழமொழி நானூறும் சமண சமயம் சார்ந்த நூல் ஆகும். இருப்பினும் இந்நூலிலும் பலசமய அறக்கருத்துக்கள் மிகுதியும் காணப்படுகின்றன. அக்கால மக்களிடையே புழக்கத்தில் இருந்த பழமொழிகளே பாடல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன.

பௌத்தர்களின் பன்னிரு சார்புகள் சிலவற்றைப் பற்றிய பாடல்கள் இந்நூலில் காணப்படுகின்றன. பன்னிரு சார்புகளின் முடிபான நிகழ்வாகக் கருதப்படும் சார்பு நீக்கமாகிய பிறப்பறத்தல் பற்றியும், சார்பு நீக்கத்தின் அவசியம் பற்றியும் பழமொழி நானூறு கூறுகிறது.

“திரியும் இடிஞ்சிலும் நெய்யும் சார்வாக
எரியும் சுடரேர் அனைத்தாய்த் – தெரியுங்கால்
சார்வற ஓடிப் பிறப்பறுக்கும், அஃதேபோல்
நீரற நீர்ச்சார்வு அறும்’’[57]

என்ற இப்பாடல் பிறப்பறுத்துப் பேரின்பம் பெற வேண்டுமானால் முதலிலே, பிறப்பிற்குக் காரணமான பந்தபாசங்களின் தொடர்புகளை எல்லாம் முற்றவும் அறுத்துவிடுக’ என்று பௌத்தர்களின் பிறப்பறுத்தலை முழுமையும் வெளிப்படுத்தும் விதமாக அமைந்துள்ளது.

பௌத்தம் பிறர் மீது கொண்டுள்ள வெறுப்புணர்வினைக் களைய வேண்டும் என்றும் பிறருடன் பகைமை கொள்ளக் கூடாது என்றும்

வலியுறுத்துகிறது. அவன் என்னை இகழ்ந்து பேசினான் என்றோ, அவன் என்னை அடித்தான் என்றோ மனதில் எண்ணி பிறர்மேல் பகைமை கொள்ளக் கூடாது என்கிறது. இதனை, ‘‘அவன் என்னை ஏசினான், என்னை அடித்தான், வென்றான், பொருளைக் கவர்ந்து கொண்டான் என்று எவன் ஒருவன் மனதில் கொள்ளாமல் இருக்கிறானோ அவனுடைய வைரம் (பகைமை) சாந்தப்படுகிறது. ஏனெனில் பகைமையைப் பகைமையினால் தணிக்க முடியாது. பகைமையை அன்பினாலேயே தணிக்க முடியும். இதுதான் தொன்று தொட்டு வருகிற தர்மம் ஆகும்’’[58] என்கிறது தம்மபதம். இதே பொருள் பழமொழி நானூறு பாடல்களிலும் காணப்படுகிறது.

‘‘கறுத்தாற்றித் தம்மைக் கடிய செய்தாரைப்
பெறுத்தாற்றிச் சேறல் புகழால் – ஒறுத்தாற்றின்
வானோங்கு மால்வரை வெற்ப! பயனின்றே
தானோன் றிடவரும் சால்பு’’[59]

என்ற பாடலும்

‘‘உற்றதெற் கெல்லாம் உரஞ்செய்ய வேண்டுமோ ?
கற்றறிந்தார் தம்மை வெகுளாமைக் காப்பமையும்
நெற்செய்யப் புற்றேந்தாற் போல நெடும்பகை
தற்செய்யத் தானே கெடும்’’[60]

என்ற இரு பாடல்களும் பிறர் மீதுள்ள வெறுப்புணர்வை நீக்கிப் பொறுமையையே கடைபிடிக்க வேண்டும் என்கிறது. தன்மேல் மிகுதியான கோபம் கொண்டவராகவும், தனக்கு மிகக் கொடுமையான துன்பத்தைச் செய்தவராகவும் இருந்தாலும் கூட, அவற்றைப் பொறுத்து அவருக்கு நன்மையே செய்தல் வேண்டும். அதுவே புகழ் தரும் நெறியாகும். சினம்

உண்டாகாதவாறு ஒழுக்கம் காப்பதே அறிவுடையோர் செயலாகும். பொறுமையே எல்லாவற்றையும் விட மிக்க வலிமையுடையதாகும் என்பதான பழமொழி நானூறு பாடல்கள் பௌத்த அறங்களைத் தன்னகத்தே கொண்டுள்ளமையாகவே அமைந்துள்ளன. சமணம் சார்ந்த பழமொழி நானூறு நூலிலும் பௌத்த சமயத் தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது.

**நான்மணிக்கடிகையில் பௌத்தம்**

நான்மணிக்கடிகையிலும் பௌத்த அறம் சார்ந்த பாடல்கள் காணப்படுகின்றன. பௌத்தர்களின் ஐவகை நெறிகள் எனப்படும் பஞ்சசீல – அறங்களான கொல்லாமை, காமமின்மை, பொய்யாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை இவை சார்ந்த பாடல்கள் நான்மணிக்கடிகையில் இடம்பெற்றுள்ளன. கொல்லாமை அறம் பௌத்த சமண சமயங்கள் இரண்டுமே வலியுறுத்துவன ஆகும். நான்மணிக்கடிகையில் காணப்படும் கொல்லாமை சார்ந்த பாடல்கள் இரு சமயத்திற்கும் பொதுவானதாகவே கருத இயலும்.

"இனிதுண்பான் என்பான் உயிர்கொல்லாது உண்பான்"[61]
"கொன்றான்மேல் நிற்கும் கொலை"[62]
"எல்லாவிடத்துங் கொலை தீது"[63]
"கொலைப்பாலுங் குற்றமே யாம்"[64]

என்ற பாடல்கள் அனைத்தும் கொல்லாமை அறத்தை வெளிப்படுத்துகின்றன. பௌத்த பஞ்சசீலங்களுள் மையமாக விளங்குவது காமமின்மையாகும். இதை இல்லறத்தார் துறவறத்தார் என்ற இருவகையினரும் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்க நெறியாகும்.

“கள்வமென்பார்க்குந் துயிலில்லை காதலிமாட்டு
உள்ளம்வைப் பார்க்குந் துயிலில்லை’’[65]

“கூற்றமுங் கூறுவ செய்துண்ணாது – ஆற்ற
மறைக்க மறையாதாங் காமம்’’[66]

“பெட்டாங் கொழுகும் பிணைபிலி – முட்டினும்
சென்றாங்கே சென்றொழுகும் காமம்’’[67]

“புள்ளினுள் ஓங்கல் அறியும் நிரப்பிடும்பை
பல்பெண்டிர் ஆள னறியும் கரப்பிடும்பை’’[68]

என்ற நான்மணிக்கடிகையின் பாடல்கள் யாவும் காமமின்மையை வலியுறுத்துகின்றன. கள்ளுண்ணாமை சார்ந்த பாடல் ஒன்றும் நான்மணிக்கடிகையில் உள்ளது.

“கள்ளின் இடும்பை களி யறியும்’’[69]

என்ற பாடல் கள்ளுண்ணாமையை விளக்குகின்றது. கள்ளாமை பற்றி,

“கள்வமென் பார்க்கும் துயிலில்லை’’[70]

என்றும்,

“கள்ளாமை வேண்டுங் கடிய வருதலான்’’[71]

என்றும்,

“.................. கரப்பிடும்பை
கள்வன் அறிந்து விடும்’’[72]

என்றும் நான்மணிக்கடிகை கூறுகின்றது. இதுமட்டுமல்லாது பஞ்சசீலங்களுள் ஒன்றான ‘பொய்யாமை’ பற்றி,

“பொய் சிதைக்கும் பொன்போலும் மேனியை’’[73]

என்றும்,

“தூர்ந்தொழியும் பொய் பிறந்த போழ்தே’’[74]

என்றும் நான்மணிக்கடிகை பொய்யாமை அறத்தை வெளிப்படுத்துகின்றது. இவ்வாறு பௌத்த சமயத்தின் பஞ்சசில அறங்கள் சார்ந்த பாடல்கள் நான்மணிக்கடிகையில் மிகுதியும் காணப்படுகின்றன.

பௌத்தர்களின் அறியாமை அறத்தை வலியுறுத்தும் பாடலும் உள்ளது.

“கற்பக் கழிமடம் அஃகும் மடம் அஃகப்
புற்கந்தீர்ந்து இவ்வுலகின் கோளுணருங் கோளுணர்ந்தால்
தத்துவ மான நெறிபடரும் அந்நெறி
இப்பா லுலகின் இசை நிறீஇ – உப்பால்
உயர்ந்த உலகம் புகும்’’[75]

‘ஒருவன் அறிவு நூல்களைக் கற்றால் அறியாமை குறையப் பெறுவான்; அறியாமை குறையப் புல்லறிவு நீங்கி உலக வியற்கையையறிவான்; அறிய, மெய்ந்நெறியாகிய வீட்டுநெறி செல்வான்; செல்ல, இவ்வுலகத்திற் புகழை நிறுத்தி மறுமையில் வீட்டுலகம் புகுவான்’ என்கிறது நான்மணிக்கடிகை. பேதமையை நீக்கி வீடுபேறடைவதையே பௌத்த சமயத்தின் சாரமாகும். இதனை, மேற்கண்ட நான்மணிக்கடிகையின் பாடலின் மூலமாக முழுமையும் வெளிப்படுவதைக் காணலாம். இவ்விதம் நான்மணிக்கடிகையில் உள்ள பல பாடல்கள் பௌத்த அறம் சார்ந்ததாக பாடப்பட்டுள்ளன.

**சிறுபஞ்சமூலத்தில் பௌத்தம்**

சிறுபஞ்சமூலத்தில் உள்ள ஒவ்வொரு பாடல்களும் ஐந்து கருத்துக்களைக் கொண்டதாக விளங்குகிறது. சமண, பௌத்த சமயங்கள் தங்களின் அறநெறிகளையும் மாவிரதங்கள் என்றும், பஞ்சசீலங்கள் என்றும் வரையறுக்கின்றன. சிறுபஞ்சமூலத்திலும் பஞ்சசீலம் பற்றிய பௌத்த அறங்கள் காணப்படுகின்றன. பஞ்சசீலங்களில் ஒன்றான கொல்லாமை பற்றி,

"உயிர்நோய் செய்யாமை உறுநோய் மறத்தல்
செயிர்நோய் பிறர்கட்செய் யாமை – செயிஞ்நோய்
விழைவு வெகுளி இவைவிடுவா னாயின்
இழவன் றினிது தவம்''[76]

என்ற பாடல் சுட்டுகின்றது.

இப்பாடலில் கொல்லாமை அறம் வலியுறுத்தப்படுகிறது. இதேபோல பொய்யாமை பற்றி,

"பொய்யாமை நன்று பொருள் நன்று''[77]

என்கிறது. இவையோடு அல்லாமல்,

"பொய்யாமை பொன்பெறினும் கள்ளாமை''[78]
"பொய்யான சுவர்க்கம்வா யானிர யம்பொருள்''[79]

என்பதான சிறுபஞ்சமூல பாடல்களும் பொய்யாமை அறத்தை வெளிப்படுத்துகின்றன. சிறுபஞ்சமூல பாடல்களில் காமமின்மை சார்ந்த பாடல்களும் இடம்பெற்றுள்ளது.

“பூவாதாள் பூப்புப் புறங்கொடுத் தாள்இலங்கி
ஓவாதாள் கோலம் ஒரு பொழுதுங் – காவாதான்
யார்யார் பிறர்மனையாள் உள்ளிட்டிவ் ஐவரையுஞ்
சாரார் பகைபோற் சலித்து’’[80]

பூப்பில்லாத கன்னியும், பூப்புத் தவிர்ந்தாளும், தவத்திற்புக்க இலிங்கியும், வேசியையும், பிறர் மனையாளையும் அறிஞர் சேரமாட்டார் என்கிறது சிறுபஞ்சமூலம். மேலும் காமத்தை நீக்குதலே பிறப்பறுத்தலுக்கான நெறி என்று சிறுபஞ்சமூலம் விளக்கிக் காட்டுகின்றது.

“வையாமை வார்குழார் நச்சினும் – நையாமை
ஓர்த்துடம்பு பேருமென்று ஊனவாய் உண்ணானேல்
பேர்த்துடம்பு கோட லரிது’’[81]

“உடம்பொழிய வேண்டின் உயர்தவம்’’[82]

என்ற பாடல்கள் பிறப்பறுத்து வீடுபேறு அடைய வேண்டுமென்றால் காமமின்மையும், பிறன்மனை நயவாமையும் விட வேண்டும் என்கிறது. மேலும் சகிப்புத்தன்மை பற்றி,

“வைதானெருவன் இனதீய வாழ்த்தியது
எய்தாவு ரையை அறிவானேல் நொய்தா
அறிவறியா ஆளாண்டு எனவுரைப்பார் வாயுள்
தறிநெறியார் தக்காரே தாம்’’[83]

ஒருவன் நம்மை வைதாலுங்கூட அதை இனிதான வாழ்த்தாகக் கொள்ள வேண்டும் என்கிறது சிறுபஞ்சமூலம். இவ்வாறாக சிறுபஞ்ச மூலத்தின் பாடல்கள் பலவும் பௌத்த அறத்தினைத் தழுவி நிற்கின்றன.

இதே போன்று ஏலாதியில் உள்ள பாடல்கள் சில பௌத்த சமயத்தின் பஞ்சசீலக் கூறுகளில் சிலவற்றை வலியுறுத்தும்.

“கொல்லான் உடன்படான் கொல்வார் இனம்சேரான்’’[84]

“கொலைகளவு காமத்தீ வாழ்க்கை’’[85]

“கொலைபுரியான் கொல்லான் புலால் மயங்கான்’’[86]

“பொய்யுரையான் வையான் புறங்கூறான்’’[87]

“பொய்யான் பொய் மேவான புலால் உண்ணான்’’[88]

முதலிய ஏலாதியின் பாடல்கள் பௌத்தர்களின் கொல்லாமை, காமமின்மை, கள்ளாமை, பொய்யாமை முதலிய அறங்களை வெளிப்படுத்துகின்றன.

திரிகடுகத்தில் காணப்படும் சில பாடல்ககள பௌத்தர்களின் சகிப்புத்தன்மையை வெளிப்படுத்தும்.

“தன்னை வியந்து தருக்கலுந் தாழ்வின்றிக்
கொன்னே வெகுளி பெருக்கலும் – முன்னிய
பல்பொருள் வெஃகுஞ் சிறுமையும் இம்மூன்றுஞ்
செல்வ முடைக்கும் ம்டை’’[89]

என்பவை தற்புகழ்ந்து செருக்குவதும், வீணாகச் சினங் கொள்வதும் பிறர் பொருளை விரும்புவதும் அழிவை உண்டாக்கும் என்கிறது. இதில் பௌத்தர்களின் சகிப்புத்தன்மையும், கள்ளாமை அறமும் வெளிப்பட்டுள்ளதை அறியமுடிகிறது.

இன்னபிற மருவிய இலக்கியங்களில் பௌத்த அறங்கள் மிகுதியாகச் சுட்டப்படவில்லை. அவை பொதுமை அறங்களாகவே அமைந்துள்ளன.

## தொகுப்புரை

புத்தரால் தோற்றுவிக்கப்பட்டு, உலகலாவி விரவிக் கிடந்து, இன்று ஒரு சில நாடுகளில் மட்டுமே கடைபிடிக்கப்பட்டு வருவதாக பௌத்த சமயம் விளங்குகிறது. பௌத்தம் தன்னகத்தே மிகக் கடுமையான ஒழுக்க நெறிகளைக் கொண்டு விளங்குகின்றது.

பௌத்த சமயம் காலங்காலமாகவே இருந்து வருகிறது என்றும், ஒவ்வொரு காலகட்டத்திலும் புத்தர்கள் தோன்றி பௌத்த சமயத்தை வளர்த்து வருகின்றனர் என்றும் பௌத்தம் கூறுகிறது. புத்தர் சொன்ன அறநெறிகள் பல்வேறு வகைகளாகப் பிரிக்கப்பட்டு, பல்வேறு நூல்களாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பௌத்தத்தின் பெரும்பாலான நெறிகள் தம்மபதம் என்ற நூலில் கிடைக்கின்றன. நான்கு வாய்மைகள், அட்டாங்க மார்க்கங்கள், பஞ்ச சீலம் முதலியவை பௌத்த அறங்களை வகைப்படுத்தியுள்ள பிரிவுகளாகும்.

சங்கம் மருவிய இலக்கியங்களில் பௌத்த அறங்கள் மிகுதியும் காணப்படுகின்றன. பௌத்தர்களின் அட்டாங்க மார்க்கங்கள், வாய்மைகள், பஞ்சசீலங்கள் முதலியவை திருக்குறளில் மிகுதியும் காணப்படுகின்றன. நாலடியார் சமணர்களால் இயற்றப்பட்ட நூலாக இருந்தாலும் கூட, இந்நூலிலும் பௌத்த சமயஅறங்கள் வெளிப்பட்டுள்ளன. இவைமட்டுமல்லாது இன்னபிற மருவிய இலக்கியங்களிலும் கொல்லாமை, கள்ளாமை, வீடுபேறடைதல், அறியாமை நீக்குதல் முதலிய அறங்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன.

## அடிக்குறிப்புகள்

1. மயிலை.சீனி.வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப.5.
2. மேலது, ப.11.
3. மேலது, ப.9.
4. சு.மாதவன், அறஇலக்கியங்களிலும் பௌத்தசமண அறங்களும், பக்.59–60.
5. க.நெடுஞ்செழியன், இந்தியப் பண்பாட்டில் தமிழும் தமிழகமும், ப.95.
6. பி.ஆர்.அம்பேத்கர், புத்தரும் அவர் தம்மமும், ப.112.
7. பி.ராமஸ்வாமி, போதி மாதவன், ப.25.
8. மேலது, ப.24.
9. மணி. 30.
10. ராகு. சாங்கிருதியாயன், பௌத்த தத்துவ இயல், பக்.28–29.
11. மேலது, பக்.29–30.
12. மேலது, ப.30.
13. மயிலை.சீனி.வேங்கடசாமி, பௌத்தமும் தமிழும், ப.20.
14. ஜி.அப்பாத்துரையார், புத்தர் அருள் அறம், ப.49.
15. அயோத்திதாசப் பண்டிதர், புத்தரது ஆதிவேதம், ப.189.
16. ப.ராமஸ்வாமி, போதி மாதவன், ப.248.
17. ஜி.அப்பாத்துரையார், புத்தர் அருள் அறம், பக்.50–51.
18. அயோத்திதாசப் பண்டிதர், சிந்தனைகள் தொகுதி ஒன்று, ப.80.
19. மேலது, ப.82.
20. மேலது, ப.93.
21. பி.ஆர்.அம்பேத்கர், புத்தரும் அவர் தம்மமும், ப.314.

22. மேலது, ப.350.

23. குறள். 987.

24. மேலது, 314.

25. அயோத்திதாசப் பண்டிதர், சிந்தனைகள் தொகுதி ஒன்று, ப.123.

26. குறள். 318.

27. மேலது, 316.

28. மேலது, 314.

29. மேலது, 214.

30. ப.ராமசாமி, புத்தர் போதனைகள், பக்.24–25.

31. குறள். 351.

32. மேலது, 358.

33. மேலது, 341.

34. சு.மாதவன், அறஇலக்கியங்களிலும் பௌத்தசமண அறங்களும், ப.185.

35. மேலது, ப.186.

36. குறள். 344.

37. ப.ராமசாமி, புத்தர் போதனைகள், ப.51.

38. குறுள். 280.

39. எம்.ஆர்.அப்பாதுரை, தம்மபதம், ப.63.

40. மேலது, ப.252.

41. மேலது, ப.253.

42. குறள். 436.

43. மேலது, 190.

44. எம்.ஆர்.அப்பாத்துரை, தம்மபதம், 317.

45. நாலடி., பா.எண். 118.

46. மேலது, பா.எண். 332.

47. பிக்கு சோமானந்தா, தம்பதம், ப.6.

48. நாலடி. பா.எண். 59.

49. எம்.ஆர்.அப்பாதுரை, தம்மபதம், ப.309.

50. நாலடி. பா.எண். 82.

51. சோ.ந.கந்தசாமி, பௌத்தம், ப.129.

52. சு.மாதவன், அறஇலக்கியங்களிலும் பௌத்தசமண அறங்களும், ப.208.

53. மேலது, ப.209.

54. நாலடி. பா.எண். 157.

55. சோ.ந.கந்தசாமி, பௌத்தம், ப.144.

56. நாலடி. பா.எண். 167.

57. பழமொழி, பா.எண். 271.

58. பிக்கு சோமானந்தா, தம்மபதம், ப.3,4.

59. பழமொழி, பா.எண். 227.

60. மேலது, பா.எண். 278.

61. நான்மணி. பா.எண். 61.

62. மேலது, பா.எண். 92.

63. மேலது, பா.எண். 95.

64. மேலது, பா.எண். 28.

65. மேலது, பா.எண். 9.

66. மேலது, பா.எண். 42.

67. மேலது, பா.எண். 92.

68. மேலது, பா.எண். 97.

69. மேலது, பா.எண். 96.

70. மேலது, பா.எண். 9.

71. மேலது, பா.எண். 88.

72. மேலது, பா.எண். 97.

73. மேலது, பா.எண். 23.

74. மேலது, பா.எண். 77.

75. மேலது, பா.எண். 30,

76. சி.மூலம், பா.எண். 32.

77. மேலது, பா.எண். 39.

78. மேலது, பா.எண். 19.

79. மேலது, பா.எண். 92.

80. மேலது, பா.எண். 42.

81. மேலது, பா.எண். 19.

82. மேலது, பா.எண். 6.

83. மேலது, பா.எண். 84.

84. ஏலாதி, பா.எண். 42.

85. மேலது, பா.எண். 29.

86. மேலது, பா.எண். 2.

87. மேலது, பா.எண். 33.

88. மேலது, பா.எண். 44.

89. கடுகம், பா.எண். 38.

# சங்கம் மருவிய இலக்கியங்களில் வைதீகம்

## முன்னுரை

வேள்வி புரிவதை முதன்மையாகக் கொண்ட வைதீக சமயங்கள் சமண பௌத்தர்களின் வருகையின் போதோ அல்லது சிலகாலம் முன்போ தான் தமிழகத்திற்குள் வருகின்றன. தமிழகத்தில் வைதீக சமயத்தின் வருகைக்கு முன்பிருந்தே சிவவழிபாடும் திருமால் வழிபாடும் இருந்துள்ளன. சமண பௌத்தர்களின் செல்வாக்கும் தாக்குதல்களும் வைதீக சமயத்தாருக்கு மிகுந்த அச்சத்தை ஏற்படுத்துகின்றன. சமண பௌத்த சமயத்தாரின் தாக்குதலில் இருந்து தற்காத்துக் கொள்ளும் பொருட்டும், மக்களிடையே செல்வாக்கைப் பெறவும் சிவ வழிபாடும் திருமால் வழிபாடும் வைதீக சமயத்துடன் இணைக்கப்படுகின்றன. சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நூல்கள் பெரும்பாலும் சமண பௌத்தம் சார்ந்ததாக இருந்தாலும், அந்நூல்களிலும் வைதீகம் சார்ந்த பாடல்கள் காணக்கிடைக்கின்றன. அவ்வகையில் வைதீக சமய அறிமுகத்தையும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்ற வைதீகம் சார்ந்த கருத்துக்களையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## வைதீகம் அறிமுகம்

வேள்விச் சடங்குகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சமயங்கள் வைதீகச் சமயங்கள் என்றும், கொல்லாமை, புலால் உண்ணாமை போன்ற அஹிம்சை நெறியையும் உண்மை நெறியையும் வலியுறுத்தும் சமயங்கள் அவைதீக சமயங்கள் என்றும் கொள்ளப்படுகின்றன. வைதீக அவைதீக சமயங்கள் இரண்டுமே வடஇந்தியாவில் தான் தோற்றம் பெறுகின்றன. இதனை, “வேள்விச் சடங்குகளுடன் வந்த வைதிகப் பார்ப்பனியமும்

அஹிம்சையையும் உண்மையையும் தெளிவையும் கொல்லாமையையும் வலியுறுத்திய சமணபௌத்தமும், இன்னொரு வகையில் சொன்னால், வைதிக மதமும் அவைதிக மதமும் ஆகிய எல்லாம் வடக்கிலிருந்து தமிழ்நாட்டிக்கு வந்தவைதாம்''[1] என்கிறார் பொ.வேல்சாமி.

வைதீக சமயம் அவைதீக சமயம் என்று பிரிப்பதற்கு அடிப்படைக் காரணமாக அமைபவை வேள்விகள் ஆகும். வேள்விகள் வைதீகத்தில் மிக முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இறைவனின் அருளைப் பெறவும் வீடுபேறு அடையவும் வேள்விகள் துணை புரிவதாக பண்டைக்கால மக்களும் மன்னர்களும் கருதினர். "வேள்வி செய்வது வைதீக சமய நெறியில் ஒரு முக்கியமான சடங்கைக் குறிப்பதாகும். வேள்வி என்பது தீ வளர்த்து, பலி கொடுத்து, நெய் சொரிந்து செய்யப்படும் யாகம் அல்லது யக்ஞம் ஆகும்''[2] என்பர்.

வேள்விகளைப் பெரும்பாலும் அரசர்களே செய்து வந்தனர் வேள்வி புரிவதால் இறைவன் குளிர்ச்சியடைகிறான் என்றும், தாம் செய்த பாவங்களுக்கான பரிகாரங்கள் என்றும் அரசர்கள் நம்பினர். எனவே வேள்வி செய்தலை அரசர்கள் முதன்மையாகக் கொண்டனர். வைதீகம் தொடக்கத்தில் பார்ப்பனியம் சார்ந்ததாகவே காணப்படுகிறது. வடஇந்தியாவில் நிலைபெற்ற வைதீச சமயம் தென்னிந்தியாவிற்கு வரும்பொழுது இங்கு சிவன், திருமால் வழிபாடுகளே மக்களிடம் மிகுதியும் காணப்பட்டன. வைதீக சமயம் தமிழகத்தில் நுழையும் போதுதான் சமண பௌத்த சமயங்களும் தமிழகத்தில் நுழைகின்றன.

"கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே ஜைன சமயமும் (சமண சமயம்) பௌத்த சமயமும் தலைகாட்டின. மௌரிய அரசன் காலத்தில் ஜைன சமயத்

துறவிகள் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். சந்திரகுப்தனின் பேரனான அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் பௌத்த மதத் துறவிகள் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். ஏறத்தாழ அக்காலத்திலேயே வைதிக சமயத்தாராகிய பிராமணர் (வடமொழி வேதமதத்தார்) தமிழ்நாட்டுக்கு வந்திருந்தார்கள். ஆனால், வைதிக பிராமணர் சிறு தொகையினராக இருந்தார்கள்''[3] என்று மயிலை சீனி.வேங்கடசாமி.

தொடக்கத்தில் சிறு குழுவினராக இருந்ததினால் வைதீக சமயத்தாரால் தமிழகத்தில் கோலோச்ச முடியவில்லை. தமிழகம் வந்த சமண முனிவர்களும் பௌத்த பிக்குகளும் தங்களின் கொள்கைகளை மக்களிடையே பரப்பி செல்வாக்கடைந்து வந்தனர். இதனால் வைதீக சமயம் மிகுந்த நெருக்கடிக்கு உள்ளானது. மிகவும் இக்கட்டான நிலையில் இருந்த வைதீக சமயத்தார் தங்களின் சமயத்தை நிலைநிறுத்தும் பொருட்டு தமிழர்களின் ஆதி சமயமாக இருந்த சைவ வைணவ சமயங்களை தங்கள் சமயத்துடன் இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனை, “வைதிகப் பிராமணர், தாங்கள் முன்பு பகைமை பாராட்டிய சைவ சமயத்தவரோடு சேர்ந்து கொண்டு, தங்களுக்கு பக்கபலத்தைத் தேடிக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆகவே, அவர்கள் தங்களைவிட பலமடங்கு பலமுடைய சைவ சமயத்துடன் கலந்து இசைந்து போகவேண்டியவர்கள் ஆனார்கள். அதனால் திராவிட ஆரிய சமயத்தொடர்பு ஏற்பட்டது''[4] என்ற கருத்துக்கள் புலப்படுத்தும்.

திராவிட ஆரியத் தொடர்பு ஏற்பட்டதன் பின்னர் திராவிடக் கடவுள்கள் ஆரியக் கடவுள்களாக உருமாற்றம் செய்யப்பட்டன. சிவனும், திருமாலும் வைதீகக் கடவுள்கள் என்ற நிலையை அடைந்தன. சிவன் திருமால் இருவரும் ஆரியர்கள் வணங்கும் உருத்திரன், விஷ்ணு என்ற கடவுள்களாகக்

கற்பிக்கப்பட்டனர். சிவன் விஷ்ணு ஆகிய இருவரையும் முதன்மைக் கடவுள்களாகக் கொண்டும் முருகன், உமையாள், திருமகள் முதலியோரை இவர்களின் உறவுகளாகக் கொண்டும் வைதீக சமயத்தார் தங்களின் சமயத்தை வடிவமைத்தார்கள்.

“சைவருடைய சிவபெருமான் வைதீகருடைய உருத்திரனுடன் பொருத்தி இணைத்துக் கூறப்பட்டார். சிவபெருமானுடைய அருட்சக்தியாகிய அம்மனுடன் (தேவியுடன்) மலையரசனாகிய இமயவானின் மகளாகிய உமையைப் பொருத்தினார்கள். பிறகு, சிவனுக்கும் உமைக்கும் பிறந்த பிள்ளை சண்முகன் (ஆறுமுகன்) என்று கற்பித்தார்கள். பின்னர், ஆறுமுகனும் தமிழருடைய முருகனும் ஒருவரே என்று கற்பித்தனர். முருகனுக்கு வள்ளி என்னும் தமிழ் மனைவி இருக்கவும், அதனோடு திருப்தியடையாமல், ஆரிய–திராவிட உறவைப் பலப்படுத்தும் பொருட்டு முருகனுக்குத் தேவயானி என்னும் ஆரியப் பெண்ணை மனைவியாகக் கற்பித்துக் கொண்டார்கள். அக்காலத்தில் பிள்ளையார் (கனபதி) வணக்கம் தமிழ்நாட்டில் ஏற்படவில்லை. பிற்காலத்தில் பிள்ளையார் வணக்கம் ஏற்பட்ட பிறகு, அவரையும் சிவபெருமானுடைய மகன் என்று இணைத்து விட்டார்கள். தமிழருடைய திருமால் என்னும் பெருமாளுடன் விஷ்ணு என்னும் வைதீக தெய்வத்தைப் பொருத்தி விட்டார்கள். விஷ்ணுவையும் திருமாலையும் ஒன்றாக்கிய பிறகு கிருஷ்ணன், பலராமன், இராமன் முதலியவர்களையும் விஷ்ணுவுடன் இணைத்து, இவர்கள் அவருடைய அவதாரங்கள் என்று கற்பித்து விட்டார்கள்’’[5]

வேதகாலம் அல்லது வைதீக காலம் என்பது, வைதீக மரபு அல்லது வைதீக சமயமரபின் உருவாக்கத்தைக் குறிப்பதாகவே அமைகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்து குடியமர்ந்த சூழ்நிலையில் உருவான மரபே வைதீக மரபாகும். தொன்மைத் திராவிட இனத்து மக்களிடம் சைவ வைணவ வழிபாட்டு மரபுகள் இருந்ததைப் போலவே, முருகவழிபாடும், சக்தி வழிபாடும், கணபதி வழிபாடும் தனித்தனி சமயங்களாகவே இருந்துள்ளன. இவைகள் பின்னர் சைவ வைணவ சமயங்களுடன் இணைக்கப்படுகின்றன.

"1. முருக வழிபாடு (கௌமாரம்), 2. சக்தி வழிபாடு (சாக்கதம்), 3. கனபதி வழிபாடு (காணாபத்யம்), 4. சூரிய வழிபாடு (சௌரம்), 5. சிவன் வழிபாடு (சைவம்), 6. விட்டுனு வழிபாடு (வைணவம்) என்பவையாகும். இவ்வழிபாட்டு முறைகளில் சூரிய, விட்டுனு வழிபாடு ஒருவகையாகவும், ஏனையவை சிவ வழிபாட்டு மரபைச் சார்ந்தவையாகவும் விளங்குகின்றன"[6] என்று உரைப்பர் நரசிம்மர்.

இன்றைய நிலையில் கௌமாரம், சாக்கதம், காணாபத்யம், சௌரம் ஆகிய சமயங்கள் முற்றிலும் அழிந்து சைவம் வைணவம் ஆகிய இருசமயங்களே வைதீக சமயங்கள் என்று கருதப்படுகின்றன.

தொடக்கத்தில் சமணம், பௌத்தம், வைதீகம் ஆகிய மூன்று சமயங்களுக்கு இடையேதான் பூசல்கள் இருந்து வந்தன. வைதீகத்தில் சைவம், வைணவம் என்ற இரு பிரிவுகள் இருந்தபோதிலும், அவை தங்களுக்குள்ளே எவ்வித காழ்ப்புணர்வையும் கொள்ளாமல் சமண பௌத்த சமயங்களை வீழ்த்துவதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டன. குறிப்பிட்ட காலகட்டம் வரை சைவ வைணவ சமயத்தாரிடையே எவ்வித பிரிவினையும் இல்லாமல் ஒன்றுபட்டே வந்துள்ளனர்.

“பழங்காலத்தில் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் திருக்கோவில்கள் ஒரே இடத்தில் அமைந்திருந்தன. பல இடங்களில் சிவனும் திருமாலும் ஒரே கோவிலில் வழிபடப்பட்டனர். பிற்காலத்திலேயே சைவ சமயமென்றும், வைணவ மதம் என்றும் தனித்தனி மதங்களாகப் பிரிக்கப்பட்டது போல, பழங்காலத்தில் பிரிக்கப்படாமல் இரண்டு தெய்வங்களும் ஒரே சமயக் கடவுளராக வழிபடப்பட்டனர். ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில் சைவ வைணவ மதப்பிரிவு ஏற்படாமல், சிவன் திருமால் வழிபாடு ஒன்றாகவே நிகழ்ந்து வந்தது. ஏறத்தாழ கி.பி.10ஆம் நூற்றாண்டு வரையில் இவ்விதமாக இருந்தது’’[7]

ஆழ்வார்கள் இயற்றிய பிரபந்தப் பாடல்களிலும் நாயன்மார்கள் இயற்றிய திருமுறைகளிலும் சிவன், திருமால் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. சைவ வைணவ இலக்கியங்களில் சமண பௌத்த எதிர்ப்பு நிலையே காணப்படுகின்றன. சைவ வைணவ சமயங்கள் பற்றி தொல்காப்பிய காலத்தில் இருந்தே நமக்குத் தரவுகள் கிடைக்கின்றன. தொல்காப்பியம் கூறும் ‘மாயோன்’ வழிபாடே வைணவமாகவும்; ‘சேயோன்’ வழிபாடே சைவ வழிபாடாகவும் பிற்காலத்தில் உருமாற்றம் பெறுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சைவம்**

சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளாகக் கருதப்படுபவன் சிவன். இந்துமதம் என்று சொல்லப்படும் வைதீக சமயத்தில் மும்மூர்த்திகளாகக் குறிப்பிடப்படுபவர்களில் சிவனும் ஒருவர். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களில் அழித்தல் தொழிலை சிவன் செய்வதாக வைதீகம் கூறுகின்றது. தொல்காப்பியர் சிவன் என்ற சொல்லை ‘சிவனும்’, ‘சிவணிய’, ‘சிவணல்’ என்பதாகப் பயன்படுத்துகிறார். சைவ சமயப் பற்றாளர்கள்

தொல்காப்பியர் பயன்படுத்திய சொல் சிவனையே குறிப்பிடுவதாகக் கருதுகின்றனர்.

“சிவன் என்ற சொல்லின் வேர் ‘சிவ’ என்பதாகும். தொல்காப்பியத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் ‘சிவனும்’ (15 இடங்கள்) ‘சிவணிய’ (13 இடங்கள்) ‘சிவணல்’ (ஓரிடம்) ‘சிவணா’ (ஓரிடம்) என்னும் சொற்களைக் கூறியுள்ளார். இச்சொற்களின் பொருள் முறையே ‘பொருந்தும்’ ‘பொருந்திய’ ‘பொருந்தா’ என்பதாகும். இங்குச் சிவணிய மெய்யியல் கூறும் சிவத்தின் மூன்று வேறுபட்ட நிலைகளை ஒப்பிடுக. அவை ‘உடனாய்’, ‘வேறாய்’, ‘ஒன்றாய்’ (தனியாய்) என்பது புலப்படும். உலகத் தோற்றம் பற்றிக் கூறவந்த அறிவியலார் பலகோடி ஆண்டுகட்கு முன்னர் அனைத்தும் ஒரு ஒருமையயக இருந்தது. அதனை நுண்ணோக்கியால் கூட காணமுடியாது. திடீரென தோன்றிய பெருவெடிப்பால் அனைத்தும் உடன் தோன்றின. அந்த மூல ஆற்றல் மட்டும் வேறாக நின்று தனது தனித்தன்மையைக் காத்தது. பின்னர் யாவும் ஒடுங்கி அதனுள் கலந்து காணாமல் போகும் என்பர்”[8] தொல்காப்பியம் கூறும் ‘பொருந்தும்’, ‘பொருந்திய’, ‘பொருந்தா’ என்பது சிவனின் தன்மையாகக் கருதப்படும். ‘உடனாய்’, ‘ஒன்றாய்’, ‘வேறாய்’ என்றே சைவர்கள் பொருள் கொள்ளுகின்றனர். தொல்காப்பியம் கூறும் சேயோன் வழிபாட்டில் இருந்துதான் சைவம் தோன்றியருக்க இடமுண்டு.

“தொல்காப்பியர் குறிஞ்சி நிலத்தில் சிவத்தைச் சேயோனாகக் கொண்டார்”[9] சைவ சமயத் தோற்றத்திற்கு அடிப்படையாக இருந்த சேயோன் வழிபாடு, தமிழர்கள் வணங்கும் சிறு தெய்வங்களுக்கெல்லாம் பெருந்தெய்வமாக சிவனை அடையாளப்படுத்தும் விதமாக அமைந்தது. “சிவபெருமான் தென்னாட்டுத் தமிழரின் பழம்பெருங்கடவுள், தமிழர் சிறுதெய்வங்களையும்

வணங்கினார்கள். ஆனால் அச்சிறுதெய்வங்களுக்கெல்லாம் ஒரு பெருந்தெய்வமாக, முழுமுதற் கடவுளாகச் சிவபெருமானை தமிழர் வணங்கிப் போற்றினார்கள்.''[10]

வடஇந்தியாவில் சிவ வழிபாடு லிங்க வழிபாடாகவே இருந்திருக்கிறது. ஆரிய திராவிட இணைப்பிற்குப் பின் அவ்வழிபாடு சிவலிங்க வழிபாடு என மாறுகிறது. "சிவலிங்க வழிபாடு இலிங்க வழிபாடு என்று சொல்லப்படுகிறது. அரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் அகழாய்வு செய்தபோது அங்கு அட்டபந்தனம் பூசப்பட்ட இலிங்கங்கள் கண்டு பிடிக்கப் பெற்றுள்ளன. இவற்றிலிருந்து இலிங்கத்திற்கும் வீரசைவம், சைவசமயம் ஆகியவற்றிற்கும் தொடர்பு உண்டு எனத் தெரிகிறது.''[11]

ஹராப்பா மொகஞ்சதாரோ காலங்களில் காணப்பட்ட சிவலிங்க வழிபாடு பற்றி வாழ்வியற் களஞ்சியம் மேற்கண்டவாறு குறிப்பிடுகிறது. ஹராப்பா நாகரீக காலத்தில் வணங்கப்பட்ட 'பசுபதி' என்ற தெய்வமே பின்னர் வட இந்தியாவில் 'உருத்திரனாகவும்' தென்னிந்தியாவில் 'சிவனாகவும்' மாற்றமடைகின்றன. சிவவழிபாடு என்பது வேத காலத்திலோ அல்லது அதற்கு முன்னரோ கூட தோன்றியிருக்கக் கூடும். "இந்தியாவில் சிவ வழிபாடு மிகத் தொன்மையானது அமரகோசம் என்னும் நூல் சிவனை 48 பெயர்களால் குறிப்பிடுகிறது. வேதகால உருத்திரனே சிவன் எனக் கொள்ளப்படுகிறது. உருத்திரன் மேலாடை அணிந்து மலையினை உறைவிடமாகக் கொண்டவன் என்று வேதங்கள் கூறுகின்றன. அவருடைய ஆயுதங்கள் வில்லும் அம்பும் ஆகும். இவர் மூன்று உலகத்தின் தந்தையாகக் கருதப்பட்டார். சிவனுடைய மனைவியின் பெயர் அம்பிகை. வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள உருத்திரன்

கொடூரமானவராகச் சித்தரிக்கப்படுகின்றார். மக்கள் தங்களைத் தண்டிக்க வேண்டாம் என்றும் தங்களைக் காக்கும் படியும் இவரை வேண்டினர். இவர் மக்களின் அருமருந்தாகவும் விலங்குகளைக் காப்பவராகவும் விளங்கினார். எனவே இவர் 'பசுபதி' எனக் கூறப்பட்டார். உருத்திரன் கி.மு.6 ஆம் நூற்றாண்டு வரை கொடூரமான கடவுளாகவே கருதப்பட்டார். உருத்திரனை ஆரியர்கள் கொடூரமான கடவுளாகவே கருதினர். புராண காலத்தில் உருத்திரன் என்னும் பெயர் சிவனாக மாற்றப்பட்டது. திராவிடர்களே உருத்திரனைச் சிவனாக வழிபடத் தொடங்கினர் என்று கூறுவர். சிவன் சாந்த கடவுளாக மாறினும் அவர் தோலாடை தரித்து உடல் முழுமையும் திருநீறு பூசி மண்டையோட்டு மாலையணிந்து கையிலே கபாலம் ஏந்திக் காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிபவராகச் சுட்டப்படுகிறார். ஆரியர்கள் சிவவழிபாட்டை ஏற்றுக் கொண்ட பின் இவர் முத்தொழில்களில் அழிக்கும் கடவுளாகக் கருதப்படுகிறார்.''[12]

சிந்து சமவெளி காலத்தில் பசுபதியாகக் குறிக்கப்பட்டு பின்னர் உருத்திரனாகவும் புராண காலங்களில் சிவனாகவும் குறிக்கப்படுகிறார். சிந்து சமவெளி காலத்திற்கு முன்பிருந்த வேதகாலத்தில் இருந்தே சிவ வழிபாடு இலிங்க வழிபாடாக இருந்துள்ளது. சிவலிங்கம் என்ற சொல்லாடல் சங்ககாலத்திலோ அல்லது அதற்கு முன்போ கூட தமிழகத்தில் இல்லை. சங்ககாலத்தில் சிவனை பல பெயர்களால் சங்க இலக்கியங்களில் குறிக்கின்றனர். "சிவலிங்கத்துக்குத் தமிழர் வழங்கிய பெயர் 'கந்தழி' என்பது. இலிங்கம் என்னும் பெயர் பிற்காலத்தில் வழங்கத் தொடங்கிய பிறகு, பழைய கந்தழி என்னும் பெயர் மறைந்து விட்டது. கந்தழியாகிய சிவலிங்க வழிபாடு மிகத்தொன்மையானது. சிவபெருமானுக்குப் பல பெயர்கள் உண்டு. ஆதிரை

முதல்வன், ஆதிரையான், ஆலமர் கடவுள், ஆனேற்றுக் கொடியான், ஈர்ஞ்சடை அந்தணன், எரிதிகழ் கணிச்சியான், ஏற்றூர்தியான், கறையிடற்றண்ணல், காரியுண்டிக் கடவுள், கடையன், செல்லிடைப் பாகன், தாழ்சடைக் கடவுள், நீர்சடைக் கரந்தோன், நீலமீன்றொருவன், புதுத்திங்கட் கண்ணியான், மணிமிடற்றண்ணல், மழுவாள் நெடியோன், முக்கட் செல்வன் முதலிய பெயர்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன''[13]

தொல்காப்பிய காலத்தில் சேயோனாக அழைக்கப்பட்ட சிவன் பின்னர் கந்தழியாகவும் சங்க காலங்களில் இன்னபிற பெயர்களாகவும் அழைக்கப்படுகிறான். சங்க காலம் வைதீகம் சார்ந்தே காணப்பட்டது. அக்கால கட்டத்தில் சமண பௌத்த சமயத்தின் தாக்கம் அவ்வளவாகக் காணப்படவில்லை. சமயப் பூசல்களும் அவ்வளவாக இல்லை. ஆனால் சங்கம் மருவிய காலத்தில் சமண பௌத்தம் மேலோங்கிய நிலைக்குச் செல்கிறது. அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் பெரும்பாலும் சமண பௌத்த அறங்களையே மிகுதியும் வலியுறுத்துகின்றன. வைதீகம் சார்ந்த செய்திகள் சிலவாகவே காணப்படுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சிவன்**

சைவ சமயக் கடவுள்களாக சிவனும், சிவனின் மனைவியாக உமையாளும், மகன்களாக முருகன், கணபதியும் கருதப்படுகின்றனர். இப்பாகுபாடு ஆரிய திராவிடக் கலப்பினால் ஏற்பட்டதாகும். சங்க இலக்கியங்களில் மேற்காண் கடவுள்கள் பற்றிய பாடல்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. சங்கம் மருவிய இலக்கியங்களில் குறைவாகவே கிடைக்கின்றன. சிவனைப் பற்றிய பாடல்கள் நாலடியார், ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, இன்னிலை, இனியவை நாற்பது ஆகிய நூல்களில்

காணப்படுகின்றன. அப்பாடல்களில் சிவனின் தன்மைகள் உருவ அமைப்பு, பண்பு நலன்கள் முதலியவை சொல்லப்படுகின்றன.

“கண்முன் றுடையானும் காக்கையும் பையரவும்”[14]

என்ற நாலடியாரின் பாடலடிக்கு இளவளகனார், “தோழி, காமவேட்கையை மிகுவிக்கும் காமனையும் குயிலையும் நிலவையும் பெண் பிறவியையும் வெறுத்துக் காமனை மீண்டும் உயிர்ப்பித்த சிவபிரான்’ என்கிறார். காமனின் மேல் உள்ள கோபத்தினால் அவனை எறித்ததும், பின்பு உயிர்ப்பித்ததும் என சிவபுராணக் கதையை வெளிப்படுத்துவதாக நாலடியார் பாடல் அமைந்துள்ளது.

மேற்கண்ட பாடலில் தேவர்களில் ஒருவனான ‘இராகு’ பற்றிய செய்தியும் காணப்படுகிறது. ‘பையரவும்’ என்ற சொல் இராகுவைக் குறிப்பதாக அமைகிறது. ‘இராகு நிலவை விழுங்கி பின்னர் மீண்டும் உமிழ்ந்ததைக்’ கூறுவதாக நாலடியாரின் பாடல் குறிப்பிடுகின்றது. நாலடியார் சிவனை முக்கண் உடையவன் என்றும், காமனைத் தீக்கிரையாக்கிப் பின்னர் உயிர்ப்பித்தவன் என்றும் கூறுகின்றது.

ஐந்திணை ஐம்பதில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் வைதீகக் கடவுள்கள் பலவற்றையும் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. அது சிவனைப் பற்றிக் கூறும்போது,

“இயங்கெய் லெய்தவன் றார்பூப்ப வீதோ”[15]

என்கிறது. சிவன் முப்புரங்களை எறித்த செய்தியைக் கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

முன்பொருகாலத்தில் தாராக்கன், கமலாக்கன், வித்யுன்மாலி என்ற மூவரும் தரகாசூரனின் மகன்களாவர். இவர்கள் மூவரும் தங்களின் தவோபலத்தால் பொன், வெள்ளி, இரும்பினால் ஆன மிக வலிமையான கோட்டைகளைப் பெற்றனர். மக்களுக்குப் பல்வேறு விதமான தீங்குகளையும் செய்தனர். இதனைத் தாங்கமுடியாத தேவர்களும் மக்களும் சிவபெருமானிடம் முறையிட, ஒரு நொடியில் பொற்கோட்டை, வெள்ளிக்கோட்டை, இரும்புக் கோட்டை ஆகிய மூன்று அரக்கர்களின் கோட்டையும் எறித்து மக்களைக் காத்தார். இதனையே ஐந்திணை ஐம்பது 'இயங்கெயி லெய்தவன்' எனச் சுட்டுகிறது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான 'இன்னிலை' என்ற நூலிற்கு பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடல் இயற்றியுள்ளார். அப்பாடலிலும் சிவபெருமானின் சிறப்புகளும், சிவனை வணங்க வேண்டியதன் அவசியத்தையும் அறியமுடிகிறது.

"வேலற் றரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதழ்ந்தெறி கொன்றையன்
கூட்டா வுலகங் கெழீஇய மலிந்தே''[16]

முருகனைப் படைத்தவனும், விரிசடை உடையவனும், இயமனைச் சினந்து கொன்றை மாலை அணிந்தவனும், உமையாளுக்கு தனது இடப்பாகத்தை கொடுத்தவனுமாகிய சிவனே எல்லா உலக இயக்கங்களுக்கும் துணையாக இருக்கிறான் என்கிறது இன்னிலை. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் சிவனே காரணமாக அமைகிறான் என்பதே இப்பாடலின் உட்பொருளாக அமைகிறது. 'வேலற்றரீஇய' என்றதனால்

படைத்தல் தொழிலையும், அவ்வேலனால் இந்திரனைக் காத்ததன் காரணமாக காத்தற் தொழிலையும், கூற்றம் கதழ்ந்நெறி என்றதனால் அழித்தல் தொழிலையும் சிவனே செய்கிறான் என்ற செய்தி மேற்காண் பாடலில் மறைமுகமாகச் சொல்லப்படுகிறது. மேலும் சக்தியும் சிவமும் சேர்ந்தே உலக உயிர்களைப் படைத்து, அவைகளைக் காக்கவும் செய்கின்றனர் எனவும் இன்னிலை கூறுகிறது.

ஐந்திணை ஐம்பது நூலானது சிவன் முக்கண் உடையவன் என்பதையும், ஆலகால விசத்தை உண்டதையும், எல்லாவற்றிற்கும் காரணமாய் இருப்பதையும் கூறுவதாக அமைந்துள்ளது.

"................................. கண்ணுதலின்
முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னாலஞ்சேர்
கண்டத்தா னீன்ற களிறு''[17]

கண்ணை நெற்றியில் கொண்ட தலையை உடையவனாகவும், இவ்வுலகமாகிய அண்டத்தை தன் வடிவமாகக் கொண்டவனாகவும், எல்லாவற்றிற்கும் முழுமுதற் காரணமாகவும், இவ்வுலகைக் காக்கும் பொருட்டு ஆலகால விஷத்தை உண்டு, நஞ்சு பொருந்தியிருக்கும்படியான கழுத்தினை உடையவனாகவும் சிவபெருமான் உள்ளான் என்று சிவனின் உருவ அமைப்பையும், உலகைக் காக்கும் ஆற்றலையும் கூறுகின்றது.

இன்னா நாற்பதும் சிவனை முக்கண் உடையவன் என்றே குறிப்பிடுகிறது.

"முக்கட் பகவன் அடிதொழா தார்க்கின்னா''[18]

முக்கண்களை உடைய சிவனை வணங்கி அவன் அடி தொழாமல் இருப்போர்க்கு இன்னாததே நிகழும் என்ற இன்னா நாற்பதின் கருத்தை உள்வாங்கி இனியவை நாற்பதானது.

"கண்முன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிது"[19]

என்கிறது.

இன்னா நாற்பது 'சிவனைத் தொழாதார்க்கு இன்னாத செயல்களே நிகழும் என்று எதிர்மறையாகச் சொன்னதையே 'சிவனைத் தொழுதால் இனிது நடக்கும்' என நேர்மறையாக இனியவை நாற்பது கூறுகிறது.

சங்கம் மருவிய இலக்கியங்களில் சிவனைப் பற்றி சிலநூல்களே பாடுகின்றன. அவற்றிலும் சில பாடல்களே சிவனைப் பற்றியதாக அமைந்துள்ளன. அறநூல்கள் பெரும்பாலும் சமண பௌத்தர்களால் இயற்றப்பட்டதாதலின் அவற்றில் சிவன் பற்றிய பாடல்கள் மிகுதியாக இடம்பெறவில்லை.

அகநூல்களில் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் சிவனைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. அவற்றில் சிவனின் உருவ வருணனை மிகுதியாகப் பேசப்படுகிறது. சிவன் முக்கண்களை உடையவன், இவ்வண்டத்தை தன் உடலாகக் கொண்டவன், உமையாளுக்கு தன்னில் சரிபாதி உடலைக் கொடுத்து, சிவசக்தியாகி, இவ்வுலக உயிர்களைப் படைத்துக் காப்பவன், இவ்வுலக நன்மைக்காக ஆலகால விஷத்தை உண்டு அதனை தன் கழுத்திலே வைத்திருப்பவன், தனது திருவடியை வணங்குவோருக்கு எல்லா நன்மைகளையும் செய்பவன் என்று சிவன் காட்டப்படுகிறான்.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் முருகன்**

தமிழகத்தில் மிகுதியான மக்களால் வழிபடக் கூடிய கடவுளாக முருகன் காணப்படுகிறார். சைவ சமயக் கடவுள்களில் சிவனுக்கு அடுத்தோ அல்லது சிவனுக்கு இணையாகவோ போற்றப்படும் கடவுளாக முருகன் உள்ளார். தொல்காப்பிய காலத்திற்கு முன்பிருந்தே முருகன் வழிபாடு தமிழகத்தில் இருந்துள்ளது. பெரும்பாலானோர் முருகனையே தமிழ்க் கடவுளாக ஏற்றுக் கொள்கின்றனர். தொல்காப்பியம் கூறும் 'சேயோன் மேய மைவரை உலகம்' என்பதில் சேயோன் என்பது முருகனையே சுட்டுவதாகக் கூறுவர். சேயோன் வழிபாடுதான் பின்னர் சைவ சமயமாக மாற்றமடைவதாகவும் கூறுவர். வைதீக சமயம் தமிழகம் வந்த பிறகு தான் சேயோன் வழிபாடு என்பது சிவவழிபாடாகவும் முருகன் சிவனின் மகனாகவும் மாற்றமடைகிறது.

வைதீக சமயத்தாரால் சிவனும் பார்வதியும் கணவன் மனைவியாகவும் முருகனும், கணபதியும் அவர்களின் பிள்ளைகளாகவும் கொள்ளப்படுகின்றனர். தொடக்கத்தில் இந்நால்வருக்குமென தனிச் சமயங்களே இருந்தன.

“சக்தி, கணபதி, குமாரன் (சுப்பிரமணியன்) இவர்களின் பெயரில், சாக்தம், காணபத்யம், கௌமாரம் என்ற சமய உட்பிரிவுகள் உண்டு. ஆனால் இவை, தனித்துவம் பெறவில்லை. சைவத்திற்குள் இவை, அடக்கம் பெற்றுள்ளன”[20] என்பர் தி.சு.நடராஜன்.

வைதீக சமயத்தின் வளர்ச்சிக்குப் பிறகு, அதன் கிளைச் சமயங்களாகக் கருதப்படும் சாக்தம், காணபத்யம், கௌமாரம் முதலியவையனைத்தும் வளர்நிலை அடையாமல் வைதீகத்தினுள்ளேயே அடங்கி விட்டன. முருகனும்

சிவன் பார்வதியின் மகனாக்கப்பட்டார். கணபதியின் தம்பியாக்கப்பட்டார். முருகன் பற்றிய பாடல்கள் சங்க இலக்கிய காலங்களிலிருந்தே கிடைத்து வருகின்றன. சங்க இலக்கியங்கள் முருகனை வேலன் என்ற பெயரால் சுட்டுகின்றன. குறிஞ்சித் திணைக்குக் கடவுளாகவும் முருகன் சுட்டப்படுகிறான். வேலன் வெறியாட்டு என்பது சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்திற்குப் பின் வந்த சங்கம் மருவிய இலக்கியங்களிலும் முருகனைப் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் முருகனின் அழகை வர்ணிப்பதாகவும், முருகனின் பண்பு நலன்களைக் கூறுவதாகவும், முருகனின் வீரச் செயல்களை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. இந்நூலில் வேலன், சத்தியான், கடம்பமர்ந்தான் என்ற பெயர்களில் முருகன் குறிக்கப்படுகிறான். அகத்திணை நூல்களில் உள்ள பாடல்களிலேயே முருகனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

“வெறிகமழ் வெற்பனென் மெய்நீர்மை கொண்ட
தறியாண்மற் றன்னோ! அணங்கணங்கிற் றென்று
மறியீர்த் துதிரந்தூய் வேலற்றரீஇ
வெறியோ டலம்வரும் யாய்’’[21]

என்ற ஐந்திணை ஐம்பது பாடல் சங்ககால வெறியாட்டு நிகழ்வினைக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவியின் மேனி மாற்றத்திற்கு அணங்கே காரணம் என எண்ணி, தலைவியின் தாயானவள் வெறியாட்டும் பூசாரியை அழைத்து, ஆட்டுக்குட்டியை பலிகொடுத்து, அதன் குருதியை நாற்புறமும் தெளித்து முருகனுக்கு புசை செய்து வருகிறாள்’ என்கிறது. இப்பாடல், முருகனை வணங்கி பூசை செய்வதால் தலைவிக்கு உண்டான நோய் நீங்கும்

என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக மேற்காண் பாடலானது அமைந்துள்ளது.

இதேபோல ஐந்திணை ஐம்பதில் உள்ள மற்றொரு பாடலிலும் முருகனைப் பற்றிய செய்தி காணப்படுகிறது.

"................... இருண்டெழுந்து
செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி''[22]

முருகன் கடம்பமாலையை அணிந்தவன் என்பதும், அவனது வேற்படையானது மின்னலைப் போன்று மின்னுவதாக உள்ளது என்பதும் ஐந்திணை ஐம்பது பாடலின் வழி அறியமுடிகிறது.

திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடலும் முருகனின் வேல் தன்மையைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

"கருங்கடன் மாந்திய வெண்டலைக் கொண்மூ
விருங்கடன்மா கொன்றான் வேன்மின்னிப் – பெருங்கட
றன்போன் முழங்கித் தளவங் குருந்தனைய''[23]

பெரிய கடலின் இடையே காணப்பட்ட மாமர வடிவினை உடைய சூரபத்மனை வெட்டி வீழ்த்திய முருகனின் வேலானது, மின்னலைப் போல மின்னுகிறது என திணைமாலை நூற்றைம்பதும் முருகனின் வேல் தன்மையைக் கூறுவதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

இன்னா நாற்பதில் உள்ள பாடல் ஒன்று முருகன் திருவடியைத் தொழுதால் அனைத்துத் துன்பங்களும் நீங்கி நிறைவான இன்பம் கிடைக்கும் என்பதாக அமைகிறது.

“சக்கரத்தானை மறப்பின்னா வாங்கின்னா
சத்தியான் றாடொழா தார்க்கு’’[24]

வேற்படையை உடைய முருகனின் திருவடியைத் தொழாதவர்க்கு துன்பமே நிகழும் என்றும், திருவடியைத் தொழுபவர்க்கு அனைத்துத் துன்பங்களும் நீங்கி இன்பம் உண்டாகும் என்றும் கூறுகிறது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சில பாடல்களே முருகனைப் பற்றியதாக அமைந்துள்ளது. அப்பாடல்கள் பெரும்பாலும் முருகனின் வேற்படைச் சிறப்பைக் கூறுவதாக உள்ளன. முருகனின் வேலானது அரக்கர்களை அழிக்கும் வல்லமை உடையது என்றும், அது மின்னலைப் போன்று மின்னுகிறது என்றும், முருகன் அழகு நிறைந்தவன் என்றும், கடம்ப மலர்களை மாலையாக அணிபவன் என்றும் கூறுவதோடு, சங்ககால வேலன் வெறியாட்டு நிகழ்வினையும் கூறுவதாக அமைந்துள்ளது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் கணபதி**

கணபதி, பிள்ளையார், விநாயகர் என்ற சொல்லாடல் சங்கம் மருவிய இலக்கியங்களில் இல்லை. ‘களிறு’ என்ற சொல்லாலேயே கணபதி குறிப்பிடப்படுகிறார். ‘களிறு’ என்பது ‘யானை முகன்’ என்ற கணபதியின் மற்றொரு பெயரைக் குறிப்பதாக உள்ளது. ஐந்திணை எழுபது நூலில் உள்ள பாடல் கணபதி சிவனின் மகன் என்பதைக் கூறுவதாக அமைகிறது.

“எண்ணும் பொருளினிதே யெல்லா முடிந்தெமக்கு
நண்ணுங் கலையணைத்து நல்குமால் – கண்ணுதலின்
முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னாலஞ்சேர்
கண்டத்தா னீன்ற களிறு’’[25]

மேற்கண்ட பாடல் சிவபெருமானின் பெருமையைச் சுட்டும் விதமாக அமைந்துள்ளதோடு, யானை முகக் கடவுளாகிய கணபதியை ஈன்றவன் என்றும் கூறுகிறது. மேலும் யானைமுகக் கடவுளைத் தொழுபவர்க்கு எல்லாம் இனிதாக முடிவதோடு, கல்விச் செல்வமும் கிடைக்கும் என்பதாக கணபதியின் சிறப்பு மேற்கண்ட பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பார்வதி**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பார்வதி என்ற சொல் இல்லை 'உமையாள்' என்றும் 'வாலிழை' என்றும் பார்வதி குறிக்கப்படுகிறாள்.

"ஒட்டிய காதல் உமையாள் ஒரு பாலா"[26]

"வாலிழை பாகத் தமரிய கொழுவேற்"[27]

இவ்விரு பாடல் வரிகளும் பார்வதியாகிய உமையாளைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இவ்விரண்டிலும் சிவன் தன் சரிபாதியை உமையாளுக்குக் கொடுத்ததைக் கூறுவதாக அமைந்துள்ளது.

சைவ சமயக் கடவுள்களான சிவன், பார்வதி, முருகன், கணபதி ஆகியோரைப் பற்றிய பாடல்கள் அனைத்தும், அவர்களின் திருவுருவ அமைப்பு அவர்களின் பண்பு நலன்கள், மக்களுக்குச் செய்த அருளிச் செயல்கள் ஆகியனவும் இவ்விறைவன்களை வணங்கி அவர்களின் திருவடியைப் பற்றுவோருக்கு எல்லாத் துன்பங்களும் நீங்கி நிறைந்த இன்பம் தரும் என்பதாகவும் அமைகின்றது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் வைணவம்**

வைதீக சமயத்தில் ஒரு பிரிவாகக் கருதப்படுவது வைணவ சமயமாகும். வைணவர்களின் கடவுளாக விஷ்ணு குறிப்பிடப்படுகிறார். விஷ்ணு என்பது வடஇந்தியாவில் வணங்கப்படுகின்ற கடவுளாகும். வைதீகம் தென்னிந்திய வைணவ சமயத்தை இணைக்கும் போது விஷ்ணு வைணவ சமயக் கடவுளான திருமாலுடன் இணைக்கப்படுகிறார். விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் பரந்துள்ளவன், நன்மை செய்பவன் என்று பொருள் கொள்கின்றனர்.

“அடியவர்களை மாயையிலிருந்து விடுவிப்பவன் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்பவன், என்றெல்லாம் பொருள் கூறினும், இச்சொல்லை விடவும் ‘பகவான்’ என்ற சொல்லையே பல இடங்களிலும் பயன்படுத்துகின்றனர். இதனாலேயே பாகவத சமயம் பாகவத தருமம் எனத் திருமால் நெறியைக் கூறி வருகின்றனர்”[28]

தமிழகத்தில் விஷ்ணு என அழைப்பதை விடவும், திருமால் என அழைப்பதே பெரும்பான்மையாகக் காணப்படுகிறது. திருமால் என்பதில் உள்ள ‘மால்’ என்பதற்கு அடியவர்களிடம் நீங்காத அன்பு கொண்டவன் எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. ‘வாசுதேவன்’ என்ற பொருளிலும் ‘மால்’ என்ற சொல் குறிப்பிடப்படுகின்றது. சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றிலும் மால் என்ற சொல்லால் திருமால் குறிப்பிடப்படுகிறார்.

“மரம்செல மிதத்த மா அல் போல (அகம்)
மல்லரை மறம்சாய்த்த மால் போல் (கலி)
நீர்செல நிமிர்ந்த மால் போல (பெரும்பாண்)”[29]

முதலிய சங்கஇலக்கியப் பாடல்வரிகள் திருமாலை மால் என்ற பெயரால் குறிப்பிடுகின்றன. மேலும்,

“கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன் விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமணன், சிரிதரன், இருடிகேசன், பற்பநாபன், தாமோதரன்''[30]

மாயோன், நீலநிற வண்ணன் என்ற பெயர்களாலும் திருமால் அழைக்கப்படுகிறார். திருமாலுடைய கடவுட் தன்மையை ஏற்று, திருமாலுக்கு அடிமை செய்து, திருமாலே கதியென நினைத்து வாழ்வோரையே வைணவர்கள் எனப்பொதுவாகக் கூறினாலும் இராமானுசருக்குப் பின் அவரைப் பின்பற்றுவோர் தங்களின் நெறியினை ஸ்ரீவைஷ்ணவம் என்றே கூறி வருகின்றனர். வைணவ சமய நெறியைப் பின்பற்றுவோர் கடைபிடிக்க வேண்டிய நெறியென சிலவற்றைக் கூறுகின்றனர்.

“(1) தாபம் : விஷ்ணுவின் சின்னங்களாகிய சங்கு சக்கரங்களைத் தோள்களில் முத்திரையிட்டுக் கொள்ளுதல்

(2) புண்டரம் : நெற்றியிலும் நெஞ்சிலும் திருமண்ணும் ஸ்ரீசூரணமும் கொண்டு நாமமிட்டுக் கொள்ளுதல்

(3) நாமம் : விஷ்ணுவின் அடியான் என்பதை வெளிப்படுத்த அவன் திருநாமத்தோடு ‘தாசன்’ என்ற பெயரையும் சேர்த்துத் தன்னைக் குறிப்பிடுதல்

(4) மந்திரம் : தீட்சை பெற்று ஆசாரியனிடம் மந்திரம் கேட்டல்

(5) இஜ்யை : பகவானை ஆராதிக்கும் முறையினை உபதேச வாயிலாகப் பெறுதல்

இவற்றைப் பஞ்ச சமஸ்காரம் என்பர். இவை விதிப்படி ஆசிரியனிடம் பெறத்தக்கவை. பஞ்ச சமஸ்காரத்தை சமாச்ரயணம் (பற்றுதல்) எனவும் குறிப்பிடுவர். இவற்றோடு நாள்தோறும் செய்யத்தக்க கிரியைகளையும் வற்புறுத்துவர். அவை அபீகமனம், நீராடல், பிராத்தனை, உபாதானம்: உடலைப் பேணுமளவே பொருள் முயற்சி மேற்கொள்ளல், இதனை அபரிக்ரகம் என்பர்''[31]

இந்நெறி இராமானுஜரால் சொல்லப்பட்டதாகும். இந்நெறியை கடைபிடிப்பதே வைணவ மரபாகக் கொள்ளப்படுகிறது. தீவிர வைணவர்கள் கடைபிடிக்கப்படும் ஒழுகலாறுகளாக மேற்கண்ட நெறிகள் குறிப்பிடப்படுகின்றன. இவ்வைணவ வழிபாட்டு மரபானது வேதகாலத்திற்கு முற்பட்டதாகவே காணப்படுகிறது. வேத இலக்கியங்களிலேயே வைணவம் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. வேத இலக்கியங்களில் காணப்படும் வைணவம் சார்ந்த கருத்துக்களை பின்வருமாறு தொகுக்கலாம்.

'ரிக் வேதத்தின் பத்தாவது நூலில் உள்ள 19–ஆவது செய்யுட் தொகுதி மனிதனைப் பற்றிய பதினாறு செய்யுட்கள் கொண்டதாகும். (புருட சூக்தம்), இப்பகுதியில் விட்டுணுவிற்குப் புருடன் என்ற பெயரும் இவ்வுலகம் அவனுடைய படைப்பு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. தைத்திரியத் தொகுதியில் விட்டுணுவை நோக்கி வேள்வி செய்தால் ஒருவன் பாதுகாப்பு, பொருள் மற்றும் நல்வாழ்வு பெறலாம் என்ற குறிப்பு காணப்படுகிறது. நலன் செய்தலும்

மனிதர்க்கு உதவுவதில் நாட்டமும் இறைவனுடைய இரு சிறந்த தன்மைகளாகச் சொல்லப்படுகின்ற உலகியல் ஒழுங்கையும் இயற்கைச் சட்டங்களையும் விட்டுணு நடத்துவதால் உலகைக் காப்பவராகக் கருதப்படுகிறார்.

எசுர் வேதத்தில் விட்டுணுவைக் குறிப்பிடும் பல செய்யுட்கள் அவருக்குத் திருப்படையல் அளிப்பதைக் குறிப்பிடுகின்றது. இவ்வேதத்தின் இறுதிப் பாடல் சிரியையும், இலக்குமியையும் விட்டுணுவின் துணைவியர்களாகக் குறிப்பிடுகின்றது.

சாம வேதத்தில் பல செய்யுட்கள் விட்டுணுவைக் குறிப்பதாக அமைகின்றன. வேதங்களின் சடங்கியல் (பிராமணங்கள்) பகுதியிலும் விட்டுனு இந்துக் கடவுள்களில் முதன்மையான இடத்தை வகிப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது'[32] என வேதங்களில் காணப்படுகின்ற வைணவக் கருத்துக்களை சுருக்கமாகத் தருகிறார் ஆர்.நரசிம்மன். உலகில் உள்ள அனைத்து உயிர்கள், அனைத்துப் பொருட்கள் என்பனவற்றின் உள்ளிருந்து ஆட்சி புரியும் இறைவனாக விஷ்ணு உள்ளதாக வைணவ இலக்கியங்கள் கூறுகின்றன. இறைவனை மிஞ்சிய சக்தி எதுவுமில்லை. இறைவனை விடவும் நுண்ணியது எதுவுமில்லை. இறைவனாலேயே இவ்வுலகம் இயங்குகின்றது.

“வைணவத்தின் கருத்தான இறைவன் இயற்கையின் உயிராகும் என்பது பிருகதாரண்யக உப நிடதத்தில் காணப்படுகிறது. அது இறைவனை உலகின் உள்உறைவானாகக் குறிப்பிடுகிறது. மேலும் அது தன்னுள்ளே இருந்து தன்னைக் கட்டுப்படுத்தும் இறைவனைப் பூமியானது அறிவதில்லை எனவும், அவ்விறைவனின் உடலே இப்பூமியாகும் எனவும் குறிப்பிடுகின்றது.

இறைவன் உலகின் உள்ளிருந்து அதனை ஆட்சி செய்கிறான். உலகம் முழுமையும் பரவி நின்று அதனை மேற்பார்வை இடுவதுடன் அதன் உள் உறைவானாகவும் பேசப்படுகின்றான். இறைவனை அனைத்தும் என்றும், வடிவம் என்றும், வடிவமற்றது என்றும், அறிவு என்றும், அறிவற்றது என்றும், நிலையானது என்றும், செயல் கொண்டது என்றும் கூறுகிறது. இறைவன் உண்மைகளுக்கெல்லாம் பேருண்மையாகும்''[33] என வைணவ உபநிடதங்கள் விஷ்ணுவின் தன்மைகளை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் திருமால்**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பலவற்றிலும் வைணவம் சார்ந்த பாடல்கள் காணப்படுகின்றன. வைணவக் கடவுள்களான திருமால் பற்றியும் திருமகள் பற்றியும் இந்நூல்கள் கூறுகின்றன. திருக்குறள் சமயம் சாரா நூலாக இருந்தாலுங்கூட திருமாலப் பற்றிய செய்திகள் பலவும் சொல்லப்பட்டுள்ளன. கடவுள் வாழ்த்துப் பகுதியில் அமைந்துள்ள பத்து குறள்களும் எந்தக் கடவுளையும் குறிப்பிடாமல் பொதுமையான கடவுட் தன்மையே கூறப்பட்டாலும், அவற்றிலும் வைணவ சமயத்தின் தாக்கத்தினையும் திருமாலின் பெருமையினையும் காணமுடிகிறது.

''கற்றதனால்ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''[34]

''மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்''[35]

“தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது”[36]

“அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீத்தல் அரிது”[37]

“கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை”[38]

“பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்”[39]

என்ற குறள்கள் அனைத்துமே இறைவன் திருவடிகளைப் பற்றுவதையே குறிப்பதாக அமைந்துள்ளன. இறைவன் திருவடிகளை வணங்குவதையே உயர்ந்த வழிபாட்டு முறையாக வைணவ மரபு கருதுகிறது. திருமாலின் உறைவிடம் ‘பரமபதம்’ என அழைக்கப்படுகிறது. ‘பதம்’ என்ற சொல்லுக்கு வேகம், கால், தங்குமிடம், அடி என்ற பல்வேறு பொருட்கள் காணப்படுகின்றன. இறைவனின் திருவடியைப் பற்றுவோருக்கே பரமபத யோகம் கிடைக்கும் என்பதை உணர்த்துவதாகவே இச்சொல் வைணவர்களால் குறிக்கப்படுகின்றது. திருமால் வழிபாட்டில் திருவடி தொழுதல் என்பது இன்றியமையாததாகும்.

“அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி”[40]

என உலகளந்தவனின் அடியைத் தொழுதால் நன்மை விளையும் என்கிறார் ஆண்டாள். பிறசமயங்களை விடவும் திருவடி தொழுதலை மிகுதியும் வலியுறுத்துவது வைணவ சமயமே ஆகும். வைணர்களின் ‘சரணாகதித் தத்துவம்’ இறைவன் திருவடிகளைப் பற்றுதலையே முதன்மையாகக்

கொண்டுள்ளது. திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் உள்ள குறள்கள் பலவும் இறைவன் திருவடிகளைப் பற்றுதலையே கூறுவதாக உள்ளதால் இக்குறள்கள் வைணவம் சார்ந்த குறள்கள் என்று கூறவும் இடந்தருகின்றது.

"மடியிலா மன்னவன் எய்தும் அடியளந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு"[40]

"தாம்வீழ்வார் மென்றோள் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு"[41]

என்ற குறள்களும் திருமாலையே குறிக்கின்றன. முதல்குறளில் திருமால் வாமன அவதாரம் எடுத்து இவ்வுலகை அளந்த நிகழ்வு சுட்டப்படுகிறது. இரண்டாவது குறளில் கூறப்படும் 'தாமரைக் கண்ணான் உலகு' என்பதற்கு 'நித்திய சூரிகள் சூழ இருக்கும் திருமால் உலகு' என பொருள் தருகிறார் பரிமேலழகர். இவ்வாறாக சமயப் பொதுமையை உணர்த்தும் திருக்குறளில் வைணவம் சார்ந்த கருத்துகள் இலைமறையாகக் காணப்படுகின்றன.

பழமொழி நானூறில் பல பாடல்கள் வைணவம் சார்ந்து காணப்படுகின்றன. திருமால் பசுக்கூட்டங்களைக் காத்த செய்தியும், திருமாலின் சுயரூப தரிசனம் பற்றிய செய்தியும், கோவர்த்தன மலையை குடையாய் பிடித்த செய்தியும், திருமாலின் கருட வாகனம் பற்றிய செய்தியும் இந்நூலில் காணப்படுகின்றன.

"வாட்டிற லானைவளைந் தார்கள் அஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி – காட்டப்

பொருவறு தன்மைகண்டு அஃதொழிந்தார்; அஃதால்
உருவு திருவூட்டு மாறு’’[42]

என்ற பாடலில் திருமாலின் உருவ அழகு குறிப்பிடப்பட்டுள்ளது. ‘திருமாலைக் கொல்ல வந்த பகைவர்கள் அவரின் பேரொளி பொருந்திய உருவ அழகைக் கண்டு தம்மனம் மாறினார்கள் என்பதன் வழி தன் உருவ அழகிலேயே பகைவரை வெல்லும் ஆற்றல் படைத்தவராக திருமால் காட்டப்படுகிறார்.

“நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும்
உரைத்தால் உரைபெறுதல் உண்டு’’[43]

திருமால் கிருஷ்ண அவதாரத்தில் பசுக்கூட்டங்களை மேய்த்த நிகழ்வினைக் கூறுகிறது மேற்கண்ட பாடல். திருமால் கருட வாகனத்தை உடையவன் என்பதையும், உலகளந்ததையும் கூறுவதாக,

“.................... கொற்றப்புள்
ஊர்ந்துலகம் தாவின் அண்ணலே யாயினும்
சீர்ந்தது செய்யா தார்’’[44]

என்ற பாடல் அமைகிறது.

“ஆவிற்கு அரும்பணி தாங்கிய மாலையும்
கோவிற்குக் கோவயன் என்னுலகம் கூறுமால்
தேவர்க்கு மக்கட்கு எனல் வேண்டா’’[45]

என்ற பாடல், ‘பசுக்கூட்டங்களுக்கு மிகுந்த துன்பம் வந்த காலத்தில் கோவர்த்தன கிரியை குடையாகப் பிடித்து, பசுக்களின் துயரைக் காத்த திருமாலையே மாடுமேய்க்கும் இடையன் என்று சொல்கிறார்கள்’ என்கிறது.

திருமால் பசுக்கூட்டங்களை மேய்த்தல், கோவர்த்தன கிரியைத் தூக்குதல், கருட வாகனத்தை உடையவனாதல் போன்ற செய்திகளைக் கூறுவதாக பழமொழி நானூறு பாடல்கள் அமைந்துள்ளன.

நான்மணிக்கடிகையின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் திருமாலின் அருட்தன்மையையும் மேனியழகையும் வீரச்செயல்களையும் கூறுவதாக அமைகிறது.

“மதிமன்னு மாயவன் வாள்முகம் ஒக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ஒக்கும் பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்’’[45]

“படியை மடியகத் திட்டான் அடியினால்
முக்காற் கடந்தான் முழுநிலம் – அக்காலத்து
ஆநிரை தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்’’[46]

முதல் பாடல் ‘திருமாலின் திருமேணி வருணனையைக் கூறுவதாக அமைகிறது. திருமாலின் முகம் ஒளிபொருந்திய சந்திரனைப் போன்றும்; திருமாலின் கையில் உள்ள சக்கரம் கதிர்களை உடைய சூரியனைப் போன்றும்; திருமாலின் கண்கள் தாமரை மலர்களைப் போன்றும்; திருமேனி காயாம்பூவைப் போன்றும் இருக்கும்’ என திருமாலின் திருமேனி அழகைக் குறிப்பிடுவதாக அமைகிறது.

இரண்டாவது பாடல் திருமாலின் வீரச் செயல்களைக் கூறுவதாக அமைகிறது. திருமால் தன் வயிற்றினுள் உலகையே வைத்துள்ளான்

என்கிறது. இதற்கு இரு புராணக் கதைகளைக் கூறுகின்றனர். திருமால் கிருஷ்ண அவதாரத்தில் தன் தாய் யசோதையிடம் இவ்வுலகமே தன்னுள் இருப்பதாக வாயினைத் திறந்து காட்டியதையும், மச்ச அவதாரத்தில் நீர்ப் பிரளயத்திலிருந்து இவ்வுலகைக் காக்க தன் வயிற்றினுள்ளே இவ்வுலகை வைத்திருந்ததையும் வெளிப்படுத்தும் விதமாகவே ‘படியை மடியகத்து இட்டான்’ என நான்மணிக்கடிகை கூறுகிறது. மாவலிச் சக்கரவர்த்தியின் செருக்கை அடக்க வாமன அவதாரம் எடுத்து மூவுலகை அளந்ததையும், கிருஷ்ண அவதாரத்தில் கோவர்த்தன மலையை குடையாய் பிடித்ததையும், பாணாசூரனை அவன் மதிற்கோட்டையோடு அழித்ததையும் நான்மணிக்கடிகை கூறுகிறது.

திரிகடுகத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலும் மேற்கண்ட நூல்களில் இடம்பெற்றுள்ள திருமாலின் பெருமைகளைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

“கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்
தண்ணறும் பூங்குறுந்தம் சாய்ந்ததூஉம் – நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ணன் அடி”[47]

மூன்றடியால் மூவுலகை அளந்தவனும், கிருஷ்ண அவதாரத்தில் குருந்த மரத்தையும், வண்டியையும் உடைத்தவனும், காயாம்பூ போன்ற மேனியைக் கொண்டவனுமாகிய திருமாலின் அடியினைப் பற்றினால் சிறப்பாக இருக்க முடியும் என்பதாக திரிகடுகம் கூறுகிறது.

“தொன்மான் குழாய்மாலை யானைத் தொழலினிதே”[48]

என்ற இனியவை நாற்பது பாடல் வரியானது ‘பழைய மாட்சிமையுடைய துழாய் மாலையை அணிந்த திருமாலைத் தொழுதால் இனிது நடக்கும்’ என்கிறது. இன்னா நாற்பது நூலானது, ‘சக்கரப் படையை உடைய திருமாலை மறந்தால் தீமையே விளையும்’ என்கிறது. இதனை,

“சக்கரத்தானை மறப்பின்னா’’[49]

என்ற வரியின் மூலம் அறியலாம். கார் நாற்பது திருமால் பற்றிக் கூறும்போது,

“பெருங்கடல் வண்ணன் புனைமார்பிற் றார்போல்
திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் வீழ’’[50]

என்கிறது. ‘கடலைப் போன்ற நீலநிற உடலையும், வானவில்லின் வண்ணம் போன்ற கழுத்தையும் உடையவன் திருமால்’ என்கிறது கார் நாற்பது.

ஐந்திணை ஐம்பது நூலானது கம்சனின் மற்போர் வீரர்களை வென்றவன் திருமால் என்கிறது.

“மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து’’[51]

கம்சனால் ஏவப்பட்ட மற்போர் வீரர்களை வென்ற கண்ணன் நீலநிறத்தினை உடையவனாக உள்ளான் என ஐந்திணை ஐம்பது கூற, கரிய நிறம் கொண்டவனாக திருமால் உள்ளதாக திணைமாலை நூற்றைம்பது கூறுகிறது.

“இருள்பரந் தாழியான் றின்னிறம் போற் றம்மு’’[52]

என்ற பாடல் வரியின் மூலம் திருமால் கரிய நிறமுடையவன் என்பதை அறியலாம். இந்நூலில் உள்ள மற்றொரு பாடல் திருமாலின் சக்கரச் சிறப்பைக் கூறுவதாக உள்ளது.

“பாழிபோன் மாயவன்றன் பற்றார் களிற்றெறிந்த
வாழிபோல் ஞாயிறுகல் சேரத் – தோழியோ’’[53]

திருமாலின் சக்கரம் போல் தோற்றமுடைய கதிரவன் மேற்கு திசையில் மறைந்தான் என்கிறது திணைமாலை நூற்றைம்பது. இறுதியாக இன்னிலை நூலானது திருமாலின் திருவடித் தொழுதலை வலியுறுத்தவதாக அமைந்துள்ளது.

“................................... மாலின்
விரிநிழ றாமெய்தார் தீப்பழுவத் துய்ப்பர்
உரிமை யிவணோநா தார்’’[54]

தாம் செய்யும் கடமையை அறியாத மாந்தர் பாவம் பலபுரிந்து நரக துன்பத்தை அடைவர். அறச்செயல்களைச் செய்வோறே திருமாலின் திருவடி நிழலை அடைவர். அதுவே மாந்தர்களின் கடமையுமாகும் என்கிறது இன்னிலை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள திருமாலைப் பற்றிய பாடல்கள் அனைத்தும் திருமாலின் மேனி அழகையும், அவர் எடுத்த அவதாரங்களில் அசூரர்களை அழித்ததையும், கூறுவதாகவே அமைந்துள்ளது. மேலும், வைணவர்கள் கூறும் சரணாகதித் தத்துவமான இறைவன் திருவடியே கதியென்று தன்னை ஒப்படைத்தலையும் கூறுவதாக சங்கம் மருவிய இலக்கியப் பாடல்கள் அமைந்துள்ளன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் திருமகள்**

புராணங்களில் திருமாலின் மனைவியாக திருமகள் போற்றப்படுகிறாள். திருமகளை இலக்குமி எனவும் அழைப்பர். திருமகள் செல்வத்திற்கு

அதிபதியாக காட்டப்படுகிறாள். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள பாடல்களில் சில திருமகளின் சிறப்பினைக் கூறுவதாக அமைந்துள்ளது.

பிறரின் பொருள் மீது பொறாமை கொள்ளக் கூடாது என்ற கருத்தினை திருவள்ளுவர் திருமகள் மீது ஏற்றிக் கூறுகிறார்.

“அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்’’[53]

‘பிறரின் பொருள் மீது பொறாமைப் படுபவனைக் கண்டால், திருமகளும் அவன் மீது பொறாமை கொண்டு, அவனிடத்தில் வறுமை புகுமாறு கைகாட்டி விடுவாள்’ என்கிறது. மற்றொரு குறள் ‘விருந்தினரை முகமலர்ந்து வரவேற்று நன்முறையில் பேணுபவன் இல்லத்தில் திருமகள் முகமும் அகமும் மலர்ந்து தங்கியிருப்பாள் என்பதாக அமைகிறது.

“அகனமர்ந்து செய்யாள் உறையும், முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்’’[54]

என்ற குறள் மேற்கண்ட பொருளில் அமைகிறது.

“வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக
நிலைப்பானை நீங்கும் திரு’’[55]

எடுத்த செயலையே குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றுபவனிடம் மட்டுமே திருமகள் நிலைத்திருப்பாள், என திருமகளின் பெருமையை உணர்த்துவதாக மேற்கண்ட குறள் அமைகிறது.

“மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரை யினாள்’’[56]

“இருமணப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு’’[57]

என்ற குறள்கள் திருமகளின் தன்மையைக் கூறுவதாக அமைகிறது. ‘சோம்பல் இல்லாமல் முயற்சி செய்பவனின் முயற்சியின் உள்ளே திருமகள் உள்ளாள்’ எனவும்; வரைவின் மகளீர், கள், சூது இம்மூன்றைக் கொண்டவரிடத்தே திருமகள் சேரமாட்டாள்’ எனவும் கூறுவதாக அமைகின்றன. திருக்குறளில் உள்ள திருமகள் பற்றிய குறள்கள் அனைத்தும் செல்வத்தின் கடவுளாகவே காட்டப்படுகின்றன.

சமணம் சார்ந்த நாலடியாரில் உள்ள பாடல்களில் சிலவும் திருமகளின் பெருமையைக் கூறுவதாக அமைகின்றன.

“பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்ல லுழப்ப தறிதிரேல் – தொல்சிறப்பின்
நாவின் கிழத்த யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து’’[58]

“நாறாத் தகடேபோல் நன்மலர்மேற் பொற்பாவாய்
நீராய் நிலத்து விளியரோ’’[59]

இவ்விரு பாடல்களும் திருமகளின் குணத்தையும், சிறப்பையும் கூறுவதாக அமைந்துள்ளன. ‘கல்வி கேள்விகளில் சிறந்தோராகக் கருதப்படும் சான்றோர்கள் வறுமையுற்றவர்களாகவே காணப்படுகின்றனர். அதற்குக் காரணம், சான்றோர்களிடம் நாமகள் (சரஸ்வதி) குடியிருப்பதால், கோபமுற்று திருமகள் அவர்களிடம் செல்வதில்லை’ என்பதாக முதல் பாடல் அமைகிறது. இரண்டாவது பாடல் ‘தாமரை மலரில் வீற்றிருக்கும் பொன்னாலான பாவையைப் போல் திருமகள் உள்ளாள்’ என்கிறது.

திருமகளானவள் நற்குணமுடைய பெரியோரின் செயல்களை முடித்து வைப்பவள் என்றும், செல்வத்தைத் தருபவள் என்றும் நான்மணிக்கடிகை கூறுகிறது.

“கண்டே செய்பவாங் கம்மியர் உண்டெனக்
கேட்டதே செய்ய புலனாள்வார் – வேட்ட
இனியவே செய்ய அமைந்தார் – முனியாதார்
முன்னிய செய்யுந் திரு’’[60]

“நில்லெனவும் நில்லா உயிரெனைத்தும் – நல்லாள்
உடம்படின் தானே பெருகுங் – கெடும்பொழுதில்
கண்டனவுங் கானா கெடும்’’[61]

“கைத்துடையான் காமுற்றது உண்டாகும் வித்தின்
முளைக்குழாய் நீருண்டேல் உண்டாந் திருக்குழாம்
ஒண்செய்யான் பார்த்துறின் உண்டாகும் மற்றவள்
துன்புறுவான் ஆகிக் கெடும்’’[62]

என்ற நான்மணிக்கடிகையின் மூன்று பாடல்களும் திருமகள் சினமில்லாத பெரியோர்கள் எண்ணியதை நிறைவேற்றுவாள் என்றும், திருமகள் அருள் பெற்றாள் மட்டுமே செல்வம் பெருகும் என்றும், இல்லையாயின் வறுமையே ஏற்படும் என்றும் கூறுவதாக அமைகிறது.

திரிகடுகமும் பழமொழி நானூறும் திருமகளை தாமரை மலரில் வீற்றிருப்பவள் என்கிறது.

“பொன்வரைக் கோங்கேர்முலைப் பூந்திருவே யாயினும்’’[63]

"பொருகடல் தண்சேர்ப்ப – பூந்தாமரை மேல்

திருவொடும் இன்னாது துச்சு''[64]

என்ற இரு பாடல் வரிகளும் மலர்களால் அலங்கரிக்கப்பட்டவளாகவும், தாமரை மலரின் வீற்றிருப்பவளாகவும் திருமகள் உள்ளாள் என்கிறது. இதே கருத்தினை ஐந்திணை ஐம்பது நூலானது,

"புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய்''[65]

என்றும்,

"திருவொருங்கு மென்சாயற் றேங்கோதை மாத''[66]

என்றும் கூறுகிறது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இடம்பெற்றுள்ள திருமகள் சார்ந்த பாடல்கள், திருமகளை செல்வம் நிறைந்தவளாகவும், திருமகள் இருக்கும் இடங்களில் தான் செல்வம் இருக்கும் என்பதாகவும், திருமகள் தாமரை மலரில் வீற்றிருப்பவளாகவும், பொன்மேனியை உடையவளாகவும், நாமகள் இருக்கும் இடங்களில் இருக்கமாட்டாள் என்பதாகவும் காட்டுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பிற வைதீக தெய்வங்கள்**

வைதீக சமயம் சைவம் வைணவம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டாலும் இவ்விரு பிரிவுகளுக்கும் பொதுவான தெய்வங்கள் வைதீக சமயத்தில் காணப்படுகின்றன. வைதீக சமயத்தில் தேவர்களாகக் கருதப்படும் இந்திரன், இந்திராணி, எமன், குபேரன், காமன் முதலியவர்கள் பற்றிய பாடல்கள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒருசில இடங்களில் காணப்படுகின்றன.

தேவர்களின் தலைவனாகவும் தேவலோகத்தின் அரசனாகவும் இந்திரன் கருதப்படுகிறான். சைவ வைணவக் கடவுள்களுக்கு இணையாக இந்திரன் போற்றப்படுகிறான். நாலடியார் இந்திரனை ‘சிவந்த கண்களை உடையவன் என்றும், திருமாலைப் போல அழகுடையவன்’ என்றும் கூறுகிறது. ‘எவரையும் இகழாமை, பொய் கூறாமை போன்ற நற்குணங்களை உடையவன் இந்திரன்’ எனவும்; நான்மறை ஒழுக்கத்தைப் பாதுகாத்து நடப்பவன்’ எனவும் ஏலாதி கூறுகிறது. இதனை,

“அம்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண் மால் ஆயினும் ஆகமன்’’[67]

“கூந்தல், மயில் அன்னாய்! – குழீஇயவான் விண்ணோர்க்கு
வேந்தனாம் இவ்வுலகம் விட்டு’’[68]

“மறைபுரிந்து வாழுமேல் மண்ணொழிந்து, விண்ணோர்க்கு
இறைபுரிந்து வாழ்தல் இயல்பு’’[69]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம். மற்றுமொரு நாலடியார் பாடல் இந்திரனின் பெருமையையும், உலகம் முழுதும் தன் ஆதிக்கத்தை செலுத்துவதையும் கூறுவதாக அமைகிறது.

“சக்கரச் செல்வம் பெறினும், விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல், எக்காலும்
முந்திரிமேற் காணி மிருவதேல், கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும்’’ [70]

‘சான்றோர்கள் இந்திரன் போல செல்வத்தைப் பெற்றாலும் வரம்பு கடந்து பேச மாட்டார்கள் என்றும், கீழோர் குறைந்த அளவே செல்வம் இருந்தாலும்

இந்திரனைப் போல எண்ணி இறுமாப்படைவர் என்றும், இந்திரன் இவ்வுலகையே தன் ஆணையால் கட்டுப்படுத்துபவன்' என்றும் மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது. இவ்விதம் இந்திரனைப் பற்றிய செய்திகள் சில பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படுகின்றன.

இந்திரனின் மனைவியாக இந்திராணி ஆவாள். இவள் தேவர்களின் தலைவியாகவும் கருதப்படுகிறாள். இந்திராணி அயிராணி என்ற பெயரால் நாலடியாரில் குறிப்பிடப்படுகிறாள்.

> "அரும்பெறல் கற்பின் அயிராணி அன்ன
> பெரும் பெயர்ப் பெண்டிர் எனினும்'' [71]

என்ற பாடலில் இந்திராணி 'அயிராணி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறாள். இந்திராணி கற்பில் சிறந்தவள் என்பதாக மேற்கண்ட பாடல் கூறுகிறது.

**எமன் (கூற்றுவன்)**

எமனை 'கூற்றுவன்' என்றும் 'இயமன்' என்றும் அழைப்பர். எமன் சூரிய தேவனின் மைந்தனாகக் கருதப்படுகிறார். இவரே பூமியில் பிறந்த முதல் மனிதர் என வைதீக சமயம் கூறுகிறது. தான் செய்த அளவற்ற புண்ணியத்தின் பயனாக, இறந்தபின் உயிர்களைக் கொண்டு செல்லும் ஆற்றலைப் பெற்றவராக எமன் விளங்குகிறார். எமனைப் பற்றிய பல செய்திகள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படுகின்றன. திருக்குறளில் எமன் பற்றிய பல குறள்கள் இடம்பெற்றுள்ளன.

> "கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
> ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு'' [72]

“கொல்லாமை மேற்கொண் டொழுகு வான்
செல்லாது உயிருண்ணும் கூற்று’’[73]

“கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை’’[74]

மேற்கண்ட குறள்கள் எமனைப் பற்றியும் அவன் தொழில் பற்றியும் கூறுவதாக அமைந்துள்ளது. ‘தவ வலிமை முழுமையாகப் பெற்றவரைக் கொல்ல எமன் அஞ்சுவான்’ என்றும், ‘பிற உயிர்களைக் கொல்லாது வாழ்பவனின் உயிரை எமன் எடுக்க விரும்பமாட்டான்’ என்றும், ‘எமனே எதிர்த்து வந்தாலும் அதனை எதிர்த்து வெற்றி பெறுவதே சிறந்த படை’ என்றுமான எமனின் தொழில் பற்றியும், ஆற்றல் பற்றியும் திருக்குறள் கூறுகிறது.

திருக்குறள் மட்டுமல்லாது இன்னபிற பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் எமன் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. நாலடியார் எமனைப் பற்றிக் கூறும் போது, ‘நல்லனவற்றை உடனே செய்யாமல் இருந்தால் எமன் சினந்து வருவான்’ என்றும், ‘நல்லறம் செய்தவர் எமன் வரும் போது துன்பம் அடைய மாட்டார்’ என்றும், ‘பெரியோரின் அறிவுரையைக் கேட்பதும் எமனிற்கு அஞ்சுவதுமே நற்குணம்’ என்றும் கூறுகிறது. இதனை,

“சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று’’[75]

“வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்’’[76]

“அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்’’[77]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம். இது போன்ற இன்னும் பல பாடல்கள் இந்நூலில் காணப்படுகின்றன. நான்மணிக்கடிகையில் உள்ள பாடல்கள் சிலவும் எமனைப் பற்றி கூறுவதாக அமைந்துள்ளன. எமன் உயிர்களின் இறப்பிற்காக மகிழ்வான்; தான் கவரும் உயிர்கள் சொல்வதை எமன் கேட்கமாட்டான் என்பதாக நான்மணிக்கடிகை கூறுகிறது. இதனை,

“துளிநோக்கி வாழும் உலகம் உலகின்
விளிநோக்கி இன்புறூஉம் கூற்று’’[78]

“கூற்றமும் கூறுவ செய்து உண்ணாது ஆற்ற’’[79]

என்ற பாடல்கள் வெளிப்படுத்துகின்றது. இவை மட்டுமல்லாது ‘எதற்கும் அஞ்சாதவன் கூட எமன் வரும் போது வீடுபேறடையும் ஒழுக்கத்தைக் கற்க வேண்டும்’ (ஏலாதி.22:3–4) என ஏலாதியும்; ‘அழகு, செல்வம், குடிப்பிறப்பு முதலியவற்றை எமனிடமிருந்து காத்துக் கொண்டவர் எவரும் இல்லை’ (பழமொழி, 183:3–4) என பழமொழி நானூறும்; எமன் எப்போது வேண்டுமானாலும் வருவான். எனவே, நல்லகுணம் உடையவரோடு சேருங்கள், பிறர் பொருளை கவராதீர், தீய சொற்களைக் கூறாதீர்’ (சிறுப.24:3–4) என சிறுபஞ்ச மூலமும்: ‘எமன் எப்போது வேண்டுமானாலும் வருவான் என்பதை உணர்ந்து நல்லனவற்றைச் செய்தல் இனிது’ (இனியவை, 28:2) என இனியவை நாற்பதும் கூறுகின்றது.

தேவர்களில் ஒருவனாக குபேரன் விளங்குகிறான். குபேரனை வைசிரவண்ணன் என பௌத்த சமயத்தார் அழைப்பர். சமண சமயத்தார் குபேரனை சாவானுபூதி என்று வழிபடுகின்றனர். செல்வத்திற்கு

அதிபதியாக குபேரன் கருதப்படுகிறான். குபேரனைப் பற்றி ஏலாதி கூறும்போது,

> ''எண்ணனாய் மாதவர்க் ஊணாந்தான் – வைசிர
> வண்ணனாய் வாழ்வான் வகுத்து''[80]

என்கிறது. இப்பாடலில் குபேரனின் குணம் சுட்டப்படுகிறது. 'வேண்டியவர்க்குப் பொருளையும், தவம் புரிபவர்க்கு உணவையும் அளிப்பவன் குபேரனைப் போல் வாழ்வான்' என்கிறது ஏலாதி.

காமனைப் பற்றிய பாடல்கள் சிலவும் பதினெண் கீழ்கணக்கில் காணப்படுகின்றன. மக்களுக்கு காம உணர்வைத் தூண்டும் கடவுளாக காமன் வைதீக சமயத்தாரால் கருதப்படுகிறாள்.

> ''பருவராலும் பைதலும் காணான்கொல் காமன்
> ஒருவர்கண் நின்றொழுகு வான்'' [81]

> ''எண்ணுளவால் ஐந்திரண்டு ஈத்தான்கொல்! என்னாம்கொல் ?
> கண்ணுளவால் காமன் கணை''[82]

> ''லென்னே செறிகாமம் பூட்டு மயில்மாரன்
> மன்னரசான் மாண்பூப் புலகு''[83]

என்ற பாடல்கள், 'கணவனைப் பிரிந்த மனைவியருக்குத் தனிமைத் துன்பத்தைத் தருபவன் காமன்' என்றும்: 'உயிர்களுக்கு காதலை ஊட்டுவதற்காக ஐந்து மலர்கணைகளை கொண்டிருப்பவன்' என்றும் காமனின் பண்பு நலன்களைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளன.

## தொகுப்புரை

சங்கம் மருவிய சமயங்கள் பெரும்பாலும் சமண பௌத்த சமயங்களாகவே காணப்படுகின்றன. இக்கால இலக்கியங்களில் அறக்கருத்துக்களே மிகுதியும் உள்ளன. அறக்கருத்துக்கள் பெரும்பாலும் அவைதீகம் சார்ந்ததாகவே காணப்படுகின்றன. வைதீகக் கருத்துகள் சிலவாகவே கிடைக்கின்றன.

வைதீக சமயமானது வடஇந்தியாவிலிருந்து தமிழகம் வந்ததாகும். சமணம், பௌத்தம், வைதீகம் இம்மூன்று சமயங்களும் ஒரே காலகட்டத்தில் தான் தமிழகம் வருகின்றன. சமண, பௌத்த சமயங்களின் தாக்குதலைத் தாங்கிக் கொள்ளவும், அவைகளை வீழ்த்தவும் சைவ சமயமும், வைணவ சமயமும் வைதீக சமயத்துள் இணைக்கப்படுகின்றன.

சைவ சமயம் ஹராப்பா நாகரீக காலத்தில் இருந்தே மக்களால் கடைபிடிக்கப்பட்ட சமயமுறையாகும். அக்காலத்தில் வணங்கப்பட்ட ‘பசுபதியும்’ வைதீக சமயத்தாரால் வணங்கப்பட்ட ‘உத்திரனும்’ ஆரிய திராவிட கலப்பிற்குப் பின் சிவபெருமானாக உருமாற்றம் செய்யப்படுகின்றன. சிவன், பார்வதி, பிள்ளையார், முருகன் முதலிய கடவுள்கள் சைவ சமயக் கடவுள்களாகவும் உறவுமுறைகளுக்குள்ளும் அடக்கப்படுகின்றன. சைவ சமயக் கடவுள்களாகக் காணப்படும் இந்நால்வரைப் பற்றியும் சங்கம் மருவிய இலக்கியங்களில் உள்ள சில நூல்களில் கூறப்பட்டுள்ளன. சிவனைப் பற்றிக் கூறும்போது முக்கண் உடையவன் என்றும், ஆலகால விஷம் உண்டவன் என்றும், உமையாளை தன் இடப்பாகத்தே கொண்டவன் என்றும், கணபதி, முருகனின் தந்தை என்றுமான செய்திகள் இவ்விலக்கியங்களில் காணப்படுகின்றன. முருகனைப் பற்றிக் கூறும்போது முருகனின் வேற்படையையும், கடம்பமாலை அணிந்துள்ள

முறையையும் கூறுவதாக அமைகின்றன. கணபதியை ‘களிறு’ எனவும், கல்விச் செல்வம் கொடுப்பவன் எனவும் கூறும் மருவிய இலக்கியங்கள், உமையாளைக் கூறும்போது, சிவனின் சரிபாதி எனவும், ‘வாலிழை’ என்னும் பெயர் கொண்டவள் எனவும் கூறுகின்றன.

வைதீக சமயத்தின் மற்றொரு பிரிவு வைணவம் ஆகும். வைணவ சமயம் திருமாலைக் கடவுளாகக் கொண்டதாக அமைகிறது. திருமால் பற்றிய செய்திகள் வேதங்களிலேயே காணப்படுகின்றன. சங்கம் மருவிய இலக்கியங்களின் பல பாடல்கள் திருமாலின் பெருமையக் கூறுவதாக அமைந்துள்ளன. திருமால் மூவடியால் உலகை அளந்ததையும், திருமேனி அழகையும், பல அவதாரங்கள் எடுத்து அசூரர்களை அழித்ததையும், திருமால் திருவடியைத் தொழுதால் துன்பங்கள் அனைத்தும் நீங்கி இன்பம் விளையும் என்பதையும் கூறுவதாக அமைகின்றன. திருமாலின் மனைவியான திருமகள், செல்வக் கடவுளாகவும் தாமரை மலரில் வீற்றிருப்பவளாகவும், பொன் போன்ற மேனியை உடையவளாகவும் சங்கம் மருவிய இலக்கியங்கள் கூறுகின்றன.

தேவர்கள் சைவ வைணவ சமயங்களுக்குப் பொதுவானவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களில் இந்திரன், இந்திராணி, எமன், குபேரன், காமன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் சிலவும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன. இந்திரன் தேவலோகத் தலைவனாகவும், எமன் கூற்றுவனாகவும், குபேரன் செல்வத்திற்கு அதிபதியாகவும், காமன் மக்களிடம் காம உணர்வை உண்டாக்குபவனாகவும் மருவிய இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. அழகரசன், பக்தி–அனுபவம்–அரசியல், ப. 23.
2. தி.சு.நடராசன், தமிழ்ச் சமூகத்தில் வைதீக சமயம், ப.39.
3. மயிலை சினி.வேங்கடசாமி, சமயங்கள் வளர்த்த தமிழ், பக்.33–34.
4. மேலது, ப.35.
5. மேலது, பக்.35–36.
6. ஆர்.நரசிம்மன், வைணவ மரபும் மெய்ப்பொருளியலும், ப.2.
7. மயலை சீனி.வேங்கடசாமி, சமயங்கள் வளர்த்ததமிழ், பக்.32–33.
8. கா.அரங்கசாமி, சிவசமய வரலாறு, பக்.9–10.
9. மேலது, ப.29.
10. த.ஆதிமூலம், மயிலையார் பார்வையில் சமயத்தமிழ், ப.41.
11. ஆசிரியர்குழு, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி–4, ப.367.
12. கா.அரங்கசாமி, சிவசமய வரலாறு, ப.15.
13. மயிலை சீனி.வேங்கடசாமி சமயங்கள் வளர்த்த தமிழ், ப.32.
14. நாலடி, பா.எண். 400.
15. ஐ. ஐம்பது, பா.எண். 1, க.வா.
16. இன்னிலை, பா.எண். 1, க.வா.
17. ஐந்.ஐம்பது, பா.எண். 1, க.வா.
18. இன்னா, பா.எண். 1, க.வா.
19. இனியவை, பா.எண். 1, க.வா.
20. தி.சு.நடராசன், தமிழ்ச்சமூகத்தில் வைதீகசமயம், ப.6.
21. ஐ. ஐம்பது, பா.எண். 20.
22. ஐ. ஐம்பது, பா.எண். 1,க.வா.

23. தி.நூ.ஐம்பது, பா.எண். 93.

24. இன்னா, பா.எண். 1, க.வா.

25. ஐ. எழுபது, பா.எண். 1, க.வா.

26. பழமொழி, பா.எண். 77.

27. இன்னிலை, பா.எண். 1. க.வா.

28. ப.அருணாசலம், வைணவ சமயம் (ஓர் அறிமுகம்), ப.15.

29. இந்திரா பார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம், பக்.36–37.

30. ப.அருணாசலம், வைணவ சமயம் (ஓர் அறிமுகம்), ப.19.

31. மேலது, பக்.20–21.

32. ஆர்.நரசிம்மன், வைணவ மரபும் மெய்ப்பொருளியலும், பக்.3–4.

33. மேலது, ப.5.

34. குறள்.2.

35. மேலது, 3.

36. மேலது, 7.

37. மேலது, 8.

38. மேலது, 9.

39. மேலது, 10.

40. மேலது, 610.

41. மேலது, 1103.

42. பழமொழி, பா.எண். 80.

43. மேலது, பா.எண். 81.

44. மேலது, பா.எண்.191.

45. நான்மணி, பா.எண்.1, க.வா.

46. மேலது, பா.எண். 2. க.வா.

47. கடுகம், பா.எண். 1, க.வா.

48. இனியவை, பா.எண். 1, க.வா.

49. இன்னா, பா.எண். 1, க.வா.

50. கார். பா.எண். 1, க.வா.

51. ஐ. ஐம்பது, பா.எண். 1, க.வா.

52. தி.நூ.ஐம்பது, பா.எண். 96.

53. குறள், 167.

54. மேலது, 84.

55. மேலது, 519.

56. மேலது, 617.

57. மேலது, 920.

58. நாலடி. பா.எண். 252.

59. மேலது, பா.எண். 266.

60. நான்மணி. பா.எண். 41.

61. மேலது, பா.எண். 43.

62. மேலது, பா.எண். 67.

63. கடுகம், பா.எண். 45.

64. பழமொழி, பா.எண். 356.

65. ஐ.ஐம்பது, பா.எண். 14.

66. ஐ.ஐம்பது, பா.எண். 17.

67. நாலடி, பா.எண். 373:1–2.

68. ஏலாதி, பா.எண். 32:3–4.

69. ஏலாதி, பா.எண். 1 க.வா.

70. நாலடி, பா.எண். 346.

71. நாலடி, பா.எண். 38:1–2.

72. குறள். 269.

73. குறள். 326.

74. குறள். 765.

75. நாலடி, பா.எண். 4:3–4.

76. நாலடி, பா.எண். 35:3–4.

77. நாலடி, பா.எண். 172:1.

78. நான்மணி, பா.எண். 26:3–4.

79. நான்மணி, பா.எண். 39:2.

80. ஏலாதி, பா.எண். 49:3–4.

81. குறள். 1197.

82. தி.நூ.ஐம்பது, பா.எண். 8:3–4.

83. இன்னிலை, பா.எண். 24:3–4.

# முடிவுரை

அற இலக்கியங்கள் எனும் போது சங்க மருவிய இலக்கியங்கள் தான் நமக்கு நினைவிற்கு வரும். சங்க இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் முதன்மைப்படுத்த, சங்கம் மருவிய இலக்கியங்கள் அறத்தையே முதன்மைப்படுத்துகின்றன. பதினெட்டு நூல்களில் பதினோறு நூல்கள் அறநூல்களாகவே காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் சமயத் தாக்கம் அவ்வளவாக இல்லை. ஆனால் சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயங்களின் தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. சங்க மருவிய காலத்தில் சமணம், பௌத்தம், வைதீகம் என்ற இம்முச்சமயங்களும் தங்கள் ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் நிலைநிறுத்தும் பொருட்டு இலக்கியங்களில் தங்கள் சமயக் கருத்துக்களை மக்களிடம் பரப்பி விட்டனர். தமிழகத்தில் சமயப் பூசல்களின் தொடக்கம் சங்கம் மருவிய காலத்தில் தான். இவ்வாய்வில் முச்சமயங்கள் பற்றியும், அச்சமயங்கள் சார்ந்த செய்திகள் சங்கம் மருவிய இலக்கியங்களில் எவ்விதம் வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன.

சமயங்களின் தொடக்கமாக வழிபாடுகள் அமைகின்றன. வழிபாடுகளே அனைத்து சமயத்திற்கும் தோற்றுவாய் ஆகும். அச்சத்தின் அடிப்படையிலேயே வழிபாடுகள் தோன்றுகின்றன. இயற்கை வழிபாடே முதலில் தோன்றுகிறது. இயற்கையைக் கண்டு பயந்த, இயற்கையால் தனக்குத் தீங்கு விளையும் என எண்ணியதன் வெளிப்பாடே இயற்கை வழிபாடாகும். இயற்கையே தனக்கு ஆதாரம் என்று உணர்ந்தபின், அச்ச வழிபாடானது அன்பின் வழிபாடாக மாறுகிறது. இயற்கை வழிபாட்டிற்கு அடுத்து முக்கியமானது நடுகல்

வழிபாடாகும். தங்களுக்காகப் போரில் இறந்த வீரர்களை சிறப்பிக்கும் பொருட்டும், நன்றி கூறும் விதமாகவும் நடுகல் வழிபாடானது அமைகிறது. நடுகல் வழிபாட்டின் அடுத்த நிலையாக முன்னோர் வழிபாடும் குலதெய்வ வழிபாடும் அமைகிறது. இறந்த தாய் தந்தையரோ அல்லது தாத்தா பாட்டியோ ஆவியாக, ஆன்மாவாக இருந்து நம்மைக் காப்பர் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் முன்னோர் வழிபாடும் குலதெய்வ வழிபாடும் தோன்றுகின்றன. இவ்வழிபாடுகளில் வளர்நிலையே சமயம் என்ற அமைப்பாக மாற்றமடைகிறது.

ஒவ்வொரு இனத்தார், சாதியார், குலத்தார் என அவரவருக்கென தனித்த வழிபாடுகளால் மக்களினம் சிதறிக் கிடந்ததை ஒன்றிணைக்கும் முயற்சியே சமயம் ஆகும்.

சங்கம் மருவிய இலக்கியங்களில் அதிகம் ஆதிக்கம் செலுத்துவது சமண சமயமே ஆகும். இவ்விலக்கியங்களில் சமண சமயம் சார்ந்த செய்திகள் மிகுதியும் காணப்படுகின்றன. மகாவீரரால் புகழ்நிலை அடைந்த சமணம், தமிழ் அறஇலக்கியங்களில் மிகுதியான தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. சமண நெறிகளில் மாவிரதங்கள் எனப்படும் கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, காமமின்மை, அவாவறுத்தல் ஆகியவை மிகமுக்கியமானதாகும். இல்லறத்தார் துறவறத்தார் என அனைவரும் கடைபிடிக்க வேண்டிய நெறிகளாக இந்நெறிகள் சுட்டப்படுகின்றன. திருக்குறள், நாலடியார் போன்ற நூல்களில் இம்மாவிரதங்களுக்கென தனி அதிகாரங்களே காணப்படுகின்றன. மருவிய இலக்கியங்களில் காணப்படும் கொல்லாமை முதலிய அறங்கள் சமணர்களின் நெறிகளை உள்வாங்கி வெளிப்படுத்தும் விதமாகவே அமைந்துள்ளன. இவை

மட்டுமல்லாது இன்னபிற சமண நெறிகளும் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன.

சமண சமயத்தைப் போலவே பௌத்த சமயமும் அறநெறிகளையே மிகுதியும் வலியுறுத்துகின்றன. புத்தரால் வளர்க்கப்பட்ட பௌத்தம் நான்கு வாய்மைகள், எண்வகை மார்க்கங்கள், பஞ்சசீலம் ஆகிய நெறிகளைக் கொண்டுள்ளதாக விளங்குகின்றது. சமண சமயத்தாரால் கடைபிடிக்கப்படும் மாவிரதங்கள், பௌத்தர்களாலும் கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. பௌத்த நெறிகள் பலவும் சங்கம் மருவிய இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. மருவிய இலக்கியங்களில் காணப்படும் கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, வீடுபேறடைதல், அறியாமை பற்றிய செய்திகள் யாவும் பௌத்த அறத்தின் வெளிப்பாடாகவே அமைகின்றன.

கொல்லாமையை வலியுறுத்தும் சமண பௌத்த சமயங்களை அவைதீக சமயங்கள் என்றும், வேள்வி புரிதலை ஏற்றுக்கொள்ளும் சமயங்களை வைதீக சமயங்கள் எனவும் வகைப்படுத்துவர். வைதீச சமயங்கள் பலவாகக் கூறப்பட்டாலும் சைவமும் வைணவுமே அவற்றின் மிகமுக்கிய சமயங்களாகக் கருதப்படுகின்றன. சைவ சமயக் கடவுள்களான சிவன், பார்வதி, முருகன், பிள்ளையார் ஆகியோரைப் பற்றிய பாடல்கள் சங்கம் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன. சைவக்கடவுள்களின் தோற்றம், அவர்களை வழிபடுவதால் கிடைக்கும் நன்மைகள் முதலியவற்றைக் கூறுவதாக மருவிய இலக்கியங்களில் உள்ள பாடல்கள் அமைந்துள்ளன. வைணவம் திருமாலை முதன்மைக் கடவுளாகக் கொண்டு வழிபடக்கூடிய சமயமாகும் திருமாலின் அவதாரங்கள், பக்தர்களின் மீது அவர் கொண்டுள்ள பற்று, உலகளந்த

செய்திகள் முதலிய திருமாலின் பெருமையைக் கூறும் பாடல்கள் பலவும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.

வைதீக சமயத்தில் தேவர்கள் சைவ வைணவர்களின் பொதுவான தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர். இவர்களில் இந்திரன், எமன், குபேரன், காமன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் மருவிய இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. இந்திரன் தேவர்களின் தலைவனாகவும், எமன் கூற்றுவனாகவும், குபேரன் செல்வத்திற்கு அதிபதியாகவும், காமன் காதல் உணர்வை தூண்டுபவனாகவும் மருவிய இலக்கியங்கள் சுட்டுகின்றன.

## துணைநூற்பட்டியல்

**மூலநூல்கள்**


1. இராசமாணிக்கம்பிள்ளை, ம. (உ.ஆ.) 2003 பழமொழி நானூறு
   கழக வெளியீடு
   522, டி.டி.கே. சாலை
   ஆள்வார் பேட்டை
   சென்னை–18.

2. சங்கு புலவரவர்கள், தி. (உ.ஆ.) 2007 இன்னிலை
   கழக வெளியீடு
   522, டி.டி.கே. சாலை
   ஆள்வார் பேட்டை
   சென்னை–18.

3. நடராசபிள்ளை.அ. (உ.ஆ.) 2007 ஐந்திணையைம்பது
   கழக வெளியீடு
   522, டி.டி.கே. சாலை
   ஆள்வார் பேட்டை
   சென்னை–18.

4. நடராசபிள்ளை.அ. (உ.ஆ.) 2007 ஐந்திணையெழுபது
   கழக வெளியீடு
   522, டி.டி.கே. சாலை
   ஆள்வார் பேட்டை
   சென்னை–18.

| | | |
|---|---|---|
| 5. நடராசபிள்ளை.அ. (உ.ஆ.) | 2007 | திணைமாலை நூற்றைம்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 6. நடராசபிள்ளை.அ. (உ.ஆ.) | 2007 | திணைமொழி ஐம்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 7. பரிமேலழகர் (உ.ஆ.) | 2007 | திருக்குறள்<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 8. பாலசுந்தரம். தி.சு. (உ.ஆ.) | 2007 | நாலடியார்<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |

| | | | |
|---|---|---|---|
| 9. | பாலசுந்தரம். தி.சு. (உ.ஆ.) | 2007 | நான்மணிக்கடிகை<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 10. | பாலசுந்தரம் தி.சு. (உ.ஆ.) | 2007 | முதுமொழிக்காஞ்சி<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 11. | பாலசுந்தரம் தி.சு. (உ.ஆ.) | 2007 | ஆசாரக்கோவை<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 12. | பாலசுந்தரம் தி.சு. (உ.ஆ.) | 2007 | ஏலாதி<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |

| | | |
|---|---|---|
| 13. புன்னைவனநாதன். பு.சி. (உ.ஆ.) | 2007 | சிறுபஞ்சமூலம்<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 14. புன்னைவனநாதன். பு.சி. (உ.ஆ.) | 2007 | திரிகடுகம்<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 15. வேங்கடசாமி நாட்டார் ந.மு. (உ.ஆ) | 2007 | இனியவை நாற்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 16. வேங்கடசாமி நாட்டார் ந.மு. | 2007 | இன்னா நாற்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |

| | | |
|---|---|---|
| 17. வேங்கடசாமி நாட்டார் ந.மு. | 2007 | களவழி நாற்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 18. வேங்கடசாமி நாட்டார் ந.மு. | 2007 | கார் நாற்பது<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |


**துணைநூல்கள்**

| | | |
|---|---|---|
| 1. அப்பாதுரை எம்.ஆர். | 1952 | தம்மபதம்<br>சென்னை. |
| 2. அப்பாதுரையார். ஜி. | 1950 | புத்தர் அருள் அறம்<br>ஸ்ரீ சித்தார்த்தா அச்சகம்<br>தங்கவயல். |
| 3. அம்பேத்கர். பி.ஆர். | 1994 | புத்தரும் அவர் தம்மரும்<br>சித்தார்த்தா. வீ (தமிழில்)<br>தமிழாக்க நூல் வெளியீட்டுக்<br>கழகம்<br>சென்னை. |

| | | | |
|---|---|---|---|
| 4. | அம்பேத்கர். பி.ஆர். | 2003 | இந்துயிசத்தின் தத்துவம்<br>கோவிந்தசாமி.வெ. (தமிழில்)<br>புத்தா வெளியீட்டகம்<br>கோயம்புத்தூர். |
| 5. | அயோத்திதாசப் பண்டிதர் | 1999 | புத்தரது ஆதிவேதம்<br>தலித் சாகித்ய அகாடமி<br>சென்னை. |
| 6. | அயோத்திதாசப் பண்டிதர் | 1999 | சிந்தனைகள் தொகுதி ஒன்று<br>தலித் சாகித்ய அகாடமி<br>சென்னை. |
| 7. | அயோத்திதாசப் பண்டிதர் | 1999 | சிந்தனைகள் தொகுதி<br>இரண்டு<br>தலித் சாகித்ய அகாடமி<br>சென்னை. |
| 8. | அரங்கசாமி. கா. | 2010 | சிவசமய வரலாறு<br>விஷ்ணு பதிப்பகம்<br>கிழக்குத் தெரு<br>மதுரை–9. |
| 9. | அருணாசலம். ப. | 2002 | வைணவ சமயம்<br>(ஓர் அறிமுகம்)<br>முல்லை நிலையம்<br>தி.நகர், சென்னை–17. |

| | | |
|---|---|---|
| 10. அருணாசலம். ப. | 2007 | பக்தி இலக்கியம்<br>முல்லை நிலையம்<br>தி.நகர்,<br>சென்னை–17. |
| 11. அழகரசன்<br>(ப.ஆ.) | 2010 | பக்தி–அனுபவம்–அரசியல்<br>மாற்று பதிப்பகம்<br>அரும்பாக்கம்<br>சென்னை–106. |
| 12. அறவாணன். க.ப. | 2005 | தமிழ் மக்கள் வரலாறு<br>தமிழ்க் கோட்டம்<br>அமைந்தகரை<br>சென்னை–29. |
| 13. ஆர்ஜிவசாகர முனிவர் | 1997 | அருங்கலச் செப்பு<br>ஸ்ரீ சுருதகேவலி பத்ர பாடு<br>சாமி சேவாதளம்<br>குந்தகுந்தர் நகர். |
| 14. ஆறுமுகநாவலர். கே. | 1984 | இந்துமத இணைப்பு<br>விளக்கம்<br>எம்.எஸ்.எம். அச்சுக் கூடம்<br>நாகர் கோவில். |

| | | |
|---|---|---|
| 15. இந்திரா பார்த்த சாரதி | 1992 | தமிழ் இலக்கியங்களில் வைணவம்<br>தமிழ்ப் புத்தகாலயம்<br>திருவல்லிக் கேணி<br>சென்னை–5. |
| 16. இராமகிருஷ்ணன் | 2000 | மக்களின் சமயநெறி<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 17. இராமநாதன். ஆறு. | 2006 | தமிழர் வழிபாட்டு மரபுகள்<br>மெய்யப்பன் பதிப்பகம்<br>புதுத்தெரு<br>சிதம்பரம் – 608 001. |
| 18. இராமையா பிள்ளை | 1991 | பண்டைத் தமிழர் கடவுட் கொள்கை<br>ஆலயம் பதிப்பகம்<br>பைக்காரா<br>மதுரை–17. |
| 19. ஏகாம்பரநாதன். ஏ. | 1998 | சோழர் காலத்தில் சமண சமய வளர்ச்சி<br>ஜைன ஆய்வியல் கழகம்<br>சௌக்கார் பேட்டை<br>சென்னை–79. |

| | | |
|---|---|---|
| 20. கங்காதரன். ச. | 1982 | சைவநோக்கில்<br>புறச்சமயங்கள்<br>அங்கையற்கண்ணி அகம்<br>339, ஆழ்வார் நகர்<br>மதுரை–19. |
| 21. கந்தசாமி. சோ.ந. | 1977 | பௌத்தம்<br>சென்னைப் பல்கலைக் கழகம்<br>சென்னை. |
| 22. கிருஷ்ணன். மா. | 2000 | சமயப் புரட்சி<br>இளங்கோ பதிப்பகம்<br>சூளை மேடு<br>சென்னை–94. |
| 23. சக்குபாய். இரா. | 2006 | சங்ககாலத் தமிழர் சமயம்<br>பாலம் பதிப்பகம்<br>அண்ணாநகர் (கிழக்கு)<br>சென்னை–102. |
| 24. சாமி. பி.எல். | 2011 | தமிழ் இலக்கியத்தில்<br>தாய்த்தெய்வ வழிபாடு<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |

| | | |
|---|---|---|
| 25. சுப்பிரமணியன். நா | 1996 | இந்தியச் சிந்தனை மரபு<br>சவுத் ஏசியன் புக்ஸ்<br>சென்னை. |
| 26. சுப்பு ரெட்டியார். ந. | 2001 | சைவமும் தமிழும்<br>சைவ சித்தாந்த நூற்பதிப்புக்<br>கழகம்<br>டி.டி.கே. சாலை<br>சென்னை–18. |
| 27. செல்வநாதன். | 2003 | மதங்களும் மனித<br>ஒற்றுமையும்<br>கவின் பதிப்பகம்<br>புதுப்பெருங் களத்தூர்<br>சென்னை–63. |
| 28. ஞானி | 2008 | தமிழ் மெய்யியல் அன்றும்<br>இன்றும்<br>காவ்யா பதிப்பகம்<br>கோடம்பாக்கம்<br>சென்னை–24. |
| 29. நடராசன். தி.சு. | 2008 | தமிழகத்தில் வைதீக சமயம்<br>நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |

| | | |
|---|---|---|
| 30. நரசிம்மன். ஆர். | 1987 | வைணவ மரபும்<br>மெய்ப்பொருளியலும்<br>விஷ்ணு பதிப்பகம்<br>கிழக்குத் தெரு<br>மதுரை–9. |
| 31. நாராயணன். க. | 1992 | வழிகாட்டும் மதங்கள்<br>மணியம் பதிப்பகம்<br>இரத்தின முதலித் தெரு<br>குறிஞ்சிப்பாடி – 607302. |
| 32. நெடுஞ்செழியன். க. | 1989 | இந்தியப் பண்பாட்டில் தமிழும்<br>தமிழகமும்<br>மனிதம் பதிப்பகம்<br>திருச்சி. |
| 33. துரைசாமி பிள்ளை. சு. | 2009 | புறநானூறு<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 34. தேவநேயப் பாவாணர் | 2000 | தமிழர் மதம்<br>தமிழ்மண் பதிப்பகம்<br>இராயப்பேட்டை<br>சென்னை–14. |

| | | |
|---|---|---|
| 35. தேவநாதன் சி.எஸ். | 2009 | புத்தர் அருளிய தம்மபதம்<br>திருமகள் பதிப்பகம்<br>தி.நகர்<br>சென்னை–17. |
| 36. தேவபேரின்பன் | 2006 | தமிழர் தத்துவம்<br>நியு செஞ்சுரிபுக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 37. தோதாத்ரி. எஸ். | 2010 | வைணவம் (மார்க்சிய<br>பார்வை)<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 38. பார்த்தசாரதி. ஆர். | 2009 | சமணம்<br>நியூ செஞ்சுரிபுக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 39. பிக்கு சோமானந்தா | 1996 | தம்மபதம்<br>மகாபோதி சொசைட்டி<br>சென்னை. |

| | | |
|---|---|---|
| 40. பிள்ளை. கா.சு. | 2004 | தமிழர் சமயம்<br>கழக வெளியீடு<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 41. ரமணி. என். | 2001 | தம்மபதம்<br>கண்ணதாசன் பதிப்பகம்<br>சென்னை. |
| 42. ராகுல் சாங்கிருத்யாயன் | 2003 | இந்துத் தத்துவ இயல்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 43. ராகுல் சாங்கிருத்யாயன் | 2003 | பௌத்தத் தத்துவ இயல்<br>நியூ செஞ்சுரி புக் ஹவுஸ்<br>அம்பத்தூர்<br>சென்னை–98. |
| 44. ராபட் கிரீன் இங்கர்சால் | 2003 | மதம் என்பது என்ன ?<br>இரவிக்குமார் பதிப்பகம்<br>13, ரெட்டிதெரு,<br>ஆலந்தூர்<br>சென்னை–16. |
| 45. ராமஸ்வாமி. ப. | 1996 | புத்தர் போதனைகள்<br>முல்லை நிலையம்<br>தி.நகர்<br>சென்னை–17. |

| | | |
|---|---|---|
| 46. ராமஸ்வாமி. ப. | 1999 | போதி மாதவன்<br>முல்லை நிலையம்<br>தி.நகர்<br>சென்னை–17. |
| 47. வேங்கடசாமி நாட்டார். ந.மு. | 2009 | அகநானூறு<br>கழக வெளியீடு<br>522, டி.டி.கே. சாலை<br>ஆள்வார் பேட்டை<br>சென்னை–18. |
| 48. வேங்கடசாமி மயிலை. சீனி. | 2005 | சமயங்கள் வளர்த்த தமிழ்<br>நாம் தமிழர் பதிப்பகம்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை–54. |
| 49. வேங்கடசாமி மயிலை சீனி. | 2006 | பௌத்தமும் தமிழும்<br>நாம் தமிழர் பதிப்பகம்<br>திருவல்லிக்கேணி<br>சென்னை–54. |
| 50. வேங்கடசாமி மயலை சீனி. | 2009 | சமணமும் தமிழும்<br>பூம்புகார் பதிப்பகம்<br>பிராட்வே<br>சென்னை–108. |

# சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயம்

பெரியார் பல்கலைக்கழக முனைவர் பட்டத்திற்காக (பிஎச்.டி.)
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர்

**தி.கோகுலக்கண்ணன்**
**(பதிவு எண். R09TAM04)**

நெறியாளர்

**முனைவர் வை.இராமராஜபாண்டியன்**




தமிழ்த்துறை
பெரியார் பல்கலைக்கழகம்
பெரியார் பல்கலை நகர்
சேலம்–636 011.

சனவரி – 2016

# சங்கம் மருவிய இலக்கியங்களில் வைதீகம்

## முன்னுரை

வேள்வி புரிவதை முதன்மையாகக் கொண்ட வைதீக சமயங்கள் சமண பௌத்தர்களின் வருகையின் போதோ அல்லது சிலகாலம் முன்போ தான் தமிழகத்திற்குள் வருகின்றன. தமிழகத்தில் வைதீக சமயத்தின் வருகைக்கு முன்பிருந்தே சிவவழிபாடும் திருமால் வழிபாடும் இருந்துள்ளன. சமண பௌத்தர்களின் செல்வாக்கும் தாக்குதல்களும் வைதீக சமயத்தாருக்கு மிகுந்த அச்சத்தை ஏற்படுத்துகின்றன. சமண பௌத்த சமயத்தாரின் தாக்குதலில் இருந்து தற்காத்துக் கொள்ளும் பொருட்டும், மக்களிடையே செல்வாக்கைப் பெறவும் சிவ வழிபாடும் திருமால் வழிபாடும் வைதீக சமயத்துடன் இணைக்கப்படுகின்றன. சங்கம் மருவிய காலத்தில் தோன்றிய நூல்கள் பெரும்பாலும் சமண பௌத்தம் சார்ந்ததாக இருந்தாலும், அந்நூல்களிலும் வைதீகம் சார்ந்த பாடல்கள் காணக்கிடைக்கின்றன. அவ்வகையில் வைதீக சமய அறிமுகத்தையும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்ற வைதீகம் சார்ந்த கருத்துக்களையும் விளக்குவது இவ்வியலின் நோக்கமாகும்.

## வைதீகம் அறிமுகம்

வேள்விச் சடங்குகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கும் சமயங்கள் வைதீகச் சமயங்கள் என்றும், கொல்லாமை, புலால் உண்ணாமை போன்ற அஹிம்சை நெறியையும் உண்மை நெறியையும் வலியுறுத்தும் சமயங்கள் அவைதீக சமயங்கள் என்றும் கொள்ளப்படுகின்றன. வைதீக அவைதீக சமயங்கள் இரண்டுமே வடஇந்தியாவில் தான் தோற்றம் பெறுகின்றன. இதனை, “வேள்விச் சடங்குகளுடன் வந்த வைதிகப் பார்ப்பனியமும்

அஹிம்சையையும் உண்மையையும் தெளிவையும் கொல்லாமையையும் வலியுறுத்திய சமணபௌத்தமும், இன்னொரு வகையில் சொன்னால், வைதிக மதமும் அவைதிக மதமும் ஆகிய எல்லாம் வடக்கிலிருந்து தமிழ்நாட்டிக்கு வந்தவைதாம்''[1] என்கிறார் பொ.வேல்சாமி.

வைதீக சமயம் அவைதீக சமயம் என்று பிரிப்பதற்கு அடிப்படைக் காரணமாக அமைபவை வேள்விகள் ஆகும். வேள்விகள் வைதீகத்தில் மிக முக்கிய இடத்தைப் பெறுகின்றன. இறைவனின் அருளைப் பெறவும் வீடுபேறு அடையவும் வேள்விகள் துணை புரிவதாக பண்டைக்கால மக்களும் மன்னர்களும் கருதினர். "வேள்வி செய்வது வைதீக சமய நெறியில் ஒரு முக்கியமான சடங்கைக் குறிப்பதாகும். வேள்வி என்பது தீ வளர்த்து, பலி கொடுத்து, நெய் சொரிந்து செய்யப்படும் யாகம் அல்லது யக்ஞம் ஆகும்''[2] என்பர்.

வேள்விகளைப் பெரும்பாலும் அரசர்களே செய்து வந்தனர் வேள்வி புரிவதால் இறைவன் குளிர்ச்சியடைகிறான் என்றும், தாம் செய்த பாவங்களுக்கான பரிகாரங்கள் என்றும் அரசர்கள் நம்பினர். எனவே வேள்வி செய்தலை அரசர்கள் முதன்மையாகக் கொண்டனர். வைதீகம் தொடக்கத்தில் பார்ப்பனியம் சார்ந்ததாகவே காணப்படுகிறது. வடஇந்தியாவில் நிலைபெற்ற வைதீச சமயம் தென்னிந்தியாவிற்கு வரும்பொழுது இங்கு சிவன், திருமால் வழிபாடுகளே மக்களிடம் மிகுதியும் காணப்பட்டன. வைதீக சமயம் தமிழகத்தில் நுழையும் போதுதான் சமண பௌத்த சமயங்களும் தமிழகத்தில் நுழைகின்றன.

"கி.மு. மூன்றாம் நூற்றாண்டிலே ஜைன சமயமும் (சமண சமயம்) பௌத்த சமயமும் தலைகாட்டின. மௌரிய அரசன் காலத்தில் ஜைன சமயத்

துறவிகள் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். சந்திரகுப்தனின் பேரனான அசோகச் சக்கரவர்த்தி காலத்தில் பௌத்த மதத் துறவிகள் தமிழ்நாட்டுக்கு வந்தார்கள். ஏறத்தாழ அக்காலத்திலேயே வைதிக சமயத்தாராகிய பிராமணர் (வடமொழி வேதமதத்தார்) தமிழ்நாட்டுக்கு வந்திருந்தார்கள். ஆனால், வைதிக பிராமணர் சிறு தொகையினராக இருந்தார்கள்''[3] என்று மயிலை சீனி.வேங்கடசாமி.

தொடக்கத்தில் சிறு குழுவினராக இருந்ததினால் வைதீக சமயத்தாரால் தமிழகத்தில் கோலோச்ச முடியவில்லை. தமிழகம் வந்த சமண முனிவர்களும் பௌத்த பிக்குகளும் தங்களின் கொள்கைகளை மக்களிடையே பரப்பி செல்வாக்கடைந்து வந்தனர். இதனால் வைதீக சமயம் மிகுந்த நெருக்கடிக்கு உள்ளானது. மிகவும் இக்கட்டான நிலையில் இருந்த வைதீக சமயத்தார் தங்களின் சமயத்தை நிலைநிறுத்தும் பொருட்டு தமிழர்களின் ஆதி சமயமாக இருந்த சைவ வைணவ சமயங்களை தங்கள் சமயத்துடன் இணைக்கும் முயற்சியில் ஈடுபட்டனர். இதனை, "வைதிகப் பிராமணர், தாங்கள் முன்பு பகைமை பாராட்டிய சைவ சமயத்தவரோடு சேர்ந்து கொண்டு, தங்களுக்கு பக்கபலத்தைத் தேடிக்கொள்ள வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆகவே, அவர்கள் தங்களைவிட பலமடங்கு பலமுடைய சைவ சமயத்துடன் கலந்து இசைந்து போகவேண்டியவர்கள் ஆனார்கள். அதனால் திராவிட ஆரிய சமயத்தொடர்பு ஏற்பட்டது''[4] என்ற கருத்துக்கள் புலப்படுத்தும்.

திராவிட ஆரியத் தொடர்பு ஏற்பட்டதன் பின்னர் திராவிடக் கடவுள்கள் ஆரியக் கடவுள்களாக உருமாற்றம் செய்யப்பட்டன. சிவனும், திருமாலும் வைதீகக் கடவுள்கள் என்ற நிலையை அடைந்தன. சிவன் திருமால் இருவரும் ஆரியர்கள் வணங்கும் உருத்திரன், விஷ்ணு என்ற கடவுள்களாகக்

கற்பிக்கப்பட்டனர். சிவன் விஷ்ணு ஆகிய இருவரையும் முதன்மைக் கடவுள்களாகக் கொண்டும் முருகன், உமையாள், திருமகள் முதலியோரை இவர்களின் உறவுகளாகக் கொண்டும் வைதீக சமயத்தார் தங்களின் சமயத்தை வடிவமைத்தார்கள்.

“சைவருடைய சிவபெருமான் வைதீகருடைய உருத்திரனுடன் பொருத்தி இணைத்துக் கூறப்பட்டார். சிவபெருமானுடைய அருட்சக்தியாகிய அம்மனுடன் (தேவியுடன்) மலையரசனாகிய இமயவானின் மகளாகிய உமையைப் பொருத்தினார்கள். பிறகு, சிவனுக்கும் உமைக்கும் பிறந்த பிள்ளை சண்முகன் (ஆறுமுகன்) என்று கற்பித்தார்கள். பின்னர், ஆறுமுகனும் தமிழருடைய முருகனும் ஒருவரே என்று கற்பித்தனர். முருகனுக்கு வள்ளி என்னும் தமிழ் மனைவி இருக்கவும், அதனோடு திருப்தியடையாமல், ஆரிய–திராவிட உறவைப் பலப்படுத்தும் பொருட்டு முருகனுக்குத் தேவயானி என்னும் ஆரியப் பெண்ணை மனைவியாகக் கற்பித்துக் கொண்டார்கள். அக்காலத்தில் பிள்ளையார் (கனபதி) வணக்கம் தமிழ்நாட்டில் ஏற்படவில்லை. பிற்காலத்தில் பிள்ளையார் வணக்கம் ஏற்பட்ட பிறகு, அவரையும் சிவபெருமானுடைய மகன் என்று இணைத்து விட்டார்கள். தமிழருடைய திருமால் என்னும் பெருமாளுடன் விஷ்ணு என்னும் வைதீக தெய்வத்தைப் பொருத்தி விட்டார்கள். விஷ்ணுவையும் திருமாலையும் ஒன்றாக்கிய பிறகு கிருஷ்ணன், பலராமன், இராமன் முதலியவர்களையும் விஷ்ணுவுடன் இணைத்து, இவர்கள் அவருடைய அவதாரங்கள் என்று கற்பித்து விட்டார்கள்’’[5]

வேதகாலம் அல்லது வைதீக காலம் என்பது, வைதீக மரபு அல்லது வைதீக சமயமரபின் உருவாக்கத்தைக் குறிப்பதாகவே அமைகிறது.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் ஆரியர்கள் தமிழகத்தில் நுழைந்து குடியமர்ந்த சூழ்நிலையில் உருவான மரபே வைதீக மரபாகும். தொன்மைத் திராவிட இனத்து மக்களிடம் சைவ வைணவ வழிபாட்டு மரபுகள் இருந்ததைப் போலவே, முருகவழிபாடும், சக்தி வழிபாடும், கணபதி வழிபாடும் தனித்தனி சமயங்களாகவே இருந்துள்ளன. இவைகள் பின்னர் சைவ வைணவ சமயங்களுடன் இணைக்கப்படுகின்றன.

“1. முருக வழிபாடு (கௌமாரம்), 2. சக்தி வழிபாடு (சாக்கதம்), 3. கனபதி வழிபாடு (காணாபத்யம்), 4. சூரிய வழிபாடு (சௌரம்), 5. சிவன் வழிபாடு (சைவம்), 6. விட்டுனு வழிபாடு (வைணவம்) என்பவையாகும். இவ்வழிபாட்டு முறைகளில் சூரிய, விட்டுனு வழிபாடு ஒருவகையாகவும், ஏனையவை சிவ வழிபாட்டு மரபைச் சார்ந்தவையாகவும் விளங்குகின்றன”[6] என்று உரைப்பர் நரசிம்மர்.

இன்றைய நிலையில் கௌமாரம், சாக்கதம், காணாபத்யம், சௌரம் ஆகிய சமயங்கள் முற்றிலும் அழிந்து சைவம் வைணவம் ஆகிய இருசமயங்களே வைதீக சமயங்கள் என்று கருதப்படுகின்றன.

தொடக்கத்தில் சமணம், பௌத்தம், வைதீகம் ஆகிய மூன்று சமயங்களுக்கு இடையேதான் பூசல்கள் இருந்து வந்தன. வைதீகத்தில் சைவம், வைணவம் என்ற இரு பிரிவுகள் இருந்தபோதிலும், அவை தங்களுக்குள்ளே எவ்வித காழ்ப்புணர்வையும் கொள்ளாமல் சமண பௌத்த சமயங்களை வீழ்த்துவதையே குறிக்கோளாகக் கொண்டு செயல்பட்டன. குறிப்பிட்ட காலகட்டம் வரை சைவ வைணவ சமயத்தாரிடையே எவ்வித பிரிவினையும் இல்லாமல் ஒன்றுபட்டே வந்துள்ளனர்.

“பழங்காலத்தில் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் திருக்கோவில்கள் ஒரே இடத்தில் அமைந்திருந்தன. பல இடங்களில் சிவனும் திருமாலும் ஒரே கோவிலில் வழிபடப்பட்டனர். பிற்காலத்திலேயே சைவ சமயமென்றும், வைணவ மதம் என்றும் தனித்தனி மதங்களாகப் பிரிக்கப்பட்டது போல, பழங்காலத்தில் பிரிக்கப்படாமல் இரண்டு தெய்வங்களும் ஒரே சமயக் கடவுளராக வழிபடப்பட்டனர். ஆழ்வார்கள், நாயன்மார்கள் காலத்தில் சைவ வைணவ மதப்பிரிவு ஏற்படாமல், சிவன் திருமால் வழிபாடு ஒன்றாகவே நிகழ்ந்து வந்தது. ஏறத்தாழ கி.பி.10ஆம் நூற்றாண்டு வரையில் இவ்விதமாக இருந்தது’’[7]

ஆழ்வார்கள் இயற்றிய பிரபந்தப் பாடல்களிலும் நாயன்மார்கள் இயற்றிய திருமுறைகளிலும் சிவன், திருமால் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. சைவ வைணவ இலக்கியங்களில் சமண பௌத்த எதிர்ப்பு நிலையே காணப்படுகின்றன. சைவ வைணவ சமயங்கள் பற்றி தொல்காப்பிய காலத்தில் இருந்தே நமக்குத் தரவுகள் கிடைக்கின்றன. தொல்காப்பியம் கூறும் ‘மாயோன்’ வழிபாடே வைணவமாகவும்; ‘சேயோன்’ வழிபாடே சைவ வழிபாடாகவும் பிற்காலத்தில் உருமாற்றம் பெறுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சைவம்**

சைவ சமயத்தின் முழுமுதற் கடவுளாகக் கருதப்படுபவன் சிவன். இந்துமதம் என்று சொல்லப்படும் வைதீக சமயத்தில் மும்மூர்த்திகளாகக் குறிப்பிடப்படுபவர்களில் சிவனும் ஒருவர். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களில் அழித்தல் தொழிலை சிவன் செய்வதாக வைதீகம் கூறுகின்றது. தொல்காப்பியர் சிவன் என்ற சொல்லை ‘சிவனும்’, ‘சிவணிய’, ‘சிவணல்’ என்பதாகப் பயன்படுத்துகிறார். சைவ சமயப் பற்றாளர்கள்

தொல்காப்பியர் பயன்படுத்திய சொல் சிவனையே குறிப்பிடுவதாகக் கருதுகின்றனர்.

“சிவன் என்ற சொல்லின் வேர் ‘சிவ’ என்பதாகும். தொல்காப்பியத்தில் முப்பதுக்கும் மேற்பட்ட இடங்களில் ‘சிவனும்’ (15 இடங்கள்) ‘சிவணிய’ (13 இடங்கள்) ‘சிவணல்’ (ஓரிடம்) ‘சிவணா’ (ஓரிடம்) என்னும் சொற்களைக் கூறியுள்ளார். இச்சொற்களின் பொருள் முறையே ‘பொருந்தும்’ ‘பொருந்திய’ ‘பொருந்தா’ என்பதாகும். இங்குச் சிவணிய மெய்யியல் கூறும் சிவத்தின் மூன்று வேறுபட்ட நிலைகளை ஒப்பிடுக. அவை ‘உடனாய்’, ‘வேறாய்’, ‘ஒன்றாய்’ (தனியாய்) என்பது புலப்படும். உலகத் தோற்றம் பற்றிக் கூறவந்த அறிவியலார் பலகோடி ஆண்டுகட்கு முன்னர் அனைத்தும் ஒரு ஒருமையயக இருந்தது. அதனை நுண்ணோக்கியால் கூட காணமுடியாது. திடீரென தோன்றிய பெருவெடிப்பால் அனைத்தும் உடன் தோன்றின. அந்த மூல ஆற்றல் மட்டும் வேறாக நின்று தனது தனித்தன்மையைக் காத்தது. பின்னர் யாவும் ஒடுங்கி அதனுள் கலந்து காணாமல் போகும் என்பர்”[8] தொல்காப்பியம் கூறும் ‘பொருந்தும்’, ‘பொருந்திய’, ‘பொருந்தா’ என்பது சிவனின் தன்மையாகக் கருதப்படும். ‘உடனாய்’, ‘ஒன்றாய்’, ‘வேறாய்’ என்றே சைவர்கள் பொருள் கொள்ளுகின்றனர். தொல்காப்பியம் கூறும் சேயோன் வழிபாட்டில் இருந்துதான் சைவம் தோன்றியருக்க இடமுண்டு.

“தொல்காப்பியர் குறிஞ்சி நிலத்தில் சிவத்தைச் சேயோனாகக் கொண்டார்”[9] சைவ சமயத் தோற்றத்திற்கு அடிப்படையாக இருந்த சேயோன் வழிபாடு, தமிழர்கள் வணங்கும் சிறு தெய்வங்களுக்கெல்லாம் பெருந்தெய்வமாக சிவனை அடையாளப்படுத்தும் விதமாக அமைந்தது. “சிவபெருமான் தென்னாட்டுத் தமிழரின் பழம்பெருங்கடவுள், தமிழர் சிறுதெய்வங்களையும்

வணங்கினார்கள். ஆனால் அச்சிறுதெய்வங்களுக்கெல்லாம் ஒரு பெருந்தெய்வமாக, முழுமுதற் கடவுளாகச் சிவபெருமானை தமிழர் வணங்கிப் போற்றினார்கள்.''[10]

வடஇந்தியாவில் சிவ வழிபாடு லிங்க வழிபாடாகவே இருந்திருக்கிறது. ஆரிய திராவிட இணைப்பிற்குப் பின் அவ்வழிபாடு சிவலிங்க வழிபாடு என மாறுகிறது. "சிவலிங்க வழிபாடு இலிங்க வழிபாடு என்று சொல்லப்படுகிறது. அரப்பா, மொகஞ்சதாரோ ஆகிய இடங்களில் தொல்பொருள் ஆராய்ச்சியாளர்கள் அகழாய்வு செய்தபோது அங்கு அட்டபந்தனம் பூசப்பட்ட இலிங்கங்கள் கண்டு பிடிக்கப் பெற்றுள்ளன. இவற்றிலிருந்து இலிங்கத்திற்கும் வீரசைவம், சைவசமயம் ஆகியவற்றிற்கும் தொடர்பு உண்டு எனத் தெரிகிறது.''[11]

ஹராப்பா மொகஞ்சதாரோ காலங்களில் காணப்பட்ட சிவலிங்க வழிபாடு பற்றி வாழ்வியற் களஞ்சியம் மேற்கண்டவாறு குறிப்பிடுகிறது. ஹராப்பா நாகரீக காலத்தில் வணங்கப்பட்ட 'பசுபதி' என்ற தெய்வமே பின்னர் வட இந்தியாவில் 'உருத்திரனாகவும்' தென்னிந்தியாவில் 'சிவனாகவும்' மாற்றமடைகின்றன. சிவவழிபாடு என்பது வேத காலத்திலோ அல்லது அதற்கு முன்னரோ கூட தோன்றியிருக்கக் கூடும். "இந்தியாவில் சிவ வழிபாடு மிகத் தொன்மையானது அமரகோசம் என்னும் நூல் சிவனை 48 பெயர்களால் குறிப்பிடுகிறது. வேதகால உருத்திரனே சிவன் எனக் கொள்ளப்படுகிறது. உருத்திரன் மேலாடை அணிந்து மலையினை உறைவிடமாகக் கொண்டவன் என்று வேதங்கள் கூறுகின்றன. அவருடைய ஆயுதங்கள் வில்லும் அம்பும் ஆகும். இவர் மூன்று உலகத்தின் தந்தையாகக் கருதப்பட்டார். சிவனுடைய மனைவியின் பெயர் அம்பிகை. வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள உருத்திரன்

கொடூரமானவராகச் சித்தரிக்கப்படுகின்றார். மக்கள் தங்களைத் தண்டிக்க வேண்டாம் என்றும் தங்களைக் காக்கும் படியும் இவரை வேண்டினர். இவர் மக்களின் அருமருந்தாகவும் விலங்குகளைக் காப்பவராகவும் விளங்கினார். எனவே இவர் ‘பசுபதி’ எனக் கூறப்பட்டார். உருத்திரன் கி.மு.6 ஆம் நூற்றாண்டு வரை கொடூரமான கடவுளாகவே கருதப்பட்டார். உருத்திரனை ஆரியர்கள் கொடூரமான கடவுளாகவே கருதினர். புராண காலத்தில் உருத்திரன் என்னும் பெயர் சிவனாக மாற்றப்பட்டது. திராவிடர்களே உருத்திரனைச் சிவனாக வழிபடத் தொடங்கினர் என்று கூறுவர். சிவன் சாந்த கடவுளாக மாறினும் அவர் தோலாடை தரித்து உடல் முழுமையும் திருநீறு பூசி மண்டையோட்டு மாலையணிந்து கையிலே கபாலம் ஏந்திக் காடுகளிலும் மலைகளிலும் சுற்றித் திரிபவராகச் சுட்டப்படுகிறார். ஆரியர்கள் சிவவழிபாட்டை ஏற்றுக் கொண்ட பின் இவர் முத்தொழில்களில் அழிக்கும் கடவுளாகக் கருதப்படுகிறார்.’’[12]

சிந்து சமவெளி காலத்தில் பசுபதியாகக் குறிக்கப்பட்டு பின்னர் உருத்திரனாகவும் புராண காலங்களில் சிவனாகவும் குறிக்கப்படுகிறார். சிந்து சமவெளி காலத்திற்கு முன்பிருந்த வேதகாலத்தில் இருந்தே சிவ வழிபாடு இலிங்க வழிபாடாக இருந்துள்ளது. சிவலிங்கம் என்ற சொல்லாடல் சங்ககாலத்திலோ அல்லது அதற்கு முன்போ கூட தமிழகத்தில் இல்லை. சங்ககாலத்தில் சிவனை பல பெயர்களால் சங்க இலக்கியங்களில் குறிக்கின்றனர். “சிவலிங்கத்துக்குத் தமிழர் வழங்கிய பெயர் ‘கந்தழி’ என்பது. இலிங்கம் என்னும் பெயர் பிற்காலத்தில் வழங்கத் தொடங்கிய பிறகு, பழைய கந்தழி என்னும் பெயர் மறைந்து விட்டது. கந்தழியாகிய சிவலிங்க வழிபாடு மிகத்தொன்மையானது. சிவபெருமானுக்குப் பல பெயர்கள் உண்டு. ஆதிரை

முதல்வன், ஆதிரையான், ஆலமர் கடவுள், ஆனேற்றுக் கொடியான், ஈர்ஞ்சடை அந்தணன், எரிதிகழ் கணிச்சியான், ஏற்றூர்தியான், கறையிடற்றண்ணல், காரியுண்டிக் கடவுள், கடையன், செல்லிடைப் பாகன், தாழ்சடைக் கடவுள், நீர்சடைக் கரந்தோன், நீலமீன்றொருவன், புதுத்திங்கட் கண்ணியான், மணிமிடற்றண்ணல், மழுவாள் நெடியோன், முக்கட் செல்வன் முதலிய பெயர்கள் சங்க நூல்களில் காணப்படுகின்றன''[13]

தொல்காப்பிய காலத்தில் சேயோனாக அழைக்கப்பட்ட சிவன் பின்னர் கந்தழியாகவும் சங்க காலங்களில் இன்னபிற பெயர்களாகவும் அழைக்கப்படுகிறான். சங்க காலம் வைதீகம் சார்ந்தே காணப்பட்டது. அக்கால கட்டத்தில் சமண பௌத்த சமயத்தின் தாக்கம் அவ்வளவாகக் காணப்படவில்லை. சமயப் பூசல்களும் அவ்வளவாக இல்லை. ஆனால் சங்கம் மருவிய காலத்தில் சமண பௌத்தம் மேலோங்கிய நிலைக்குச் செல்கிறது. அக்காலத்தில் தோன்றிய இலக்கியங்கள் பெரும்பாலும் சமண பௌத்த அறங்களையே மிகுதியும் வலியுறுத்துகின்றன. வைதீகம் சார்ந்த செய்திகள் சிலவாகவே காணப்படுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் சிவன்**

சைவ சமயக் கடவுள்களாக சிவனும், சிவனின் மனைவியாக உமையாளும், மகன்களாக முருகன், கணபதியும் கருதப்படுகின்றனர். இப்பாகுபாடு ஆரிய திராவிடக் கலப்பினால் ஏற்பட்டதாகும். சங்க இலக்கியங்களில் மேற்காண் கடவுள்கள் பற்றிய பாடல்கள் மிகுதியாகக் கிடைக்கின்றன. சங்கம் மருவிய இலக்கியங்களில் குறைவாகவே கிடைக்கின்றன. சிவனைப் பற்றிய பாடல்கள் நாலடியார், ஐந்திணை ஐம்பது, ஐந்திணை எழுபது, இன்னிலை, இனியவை நாற்பது ஆகிய நூல்களில்

காணப்படுகின்றன. அப்பாடல்களில் சிவனின் தன்மைகள் உருவ அமைப்பு, பண்பு நலன்கள் முதலியவை சொல்லப்படுகின்றன.

“கண்முன் றுடையானும் காக்கையும் பையரவும்’’[14]

என்ற நாலடியாரின் பாடலடிக்கு இளவளகனார், “தோழி, காமவேட்கையை மிகுவிக்கும் காமனையும் குயிலையும் நிலவையும் பெண் பிறவியையும் வெறுத்துக் காமனை மீண்டும் உயிர்ப்பித்த சிவபிரான்’ என்கிறார். காமனின் மேல் உள்ள கோபத்தினால் அவனை எறித்ததும், பின்பு உயிர்ப்பித்ததும் என சிவபுராணக் கதையை வெளிப்படுத்துவதாக நாலடியார் பாடல் அமைந்துள்ளது.

மேற்கண்ட பாடலில் தேவர்களில் ஒருவனான ‘இராகு’ பற்றிய செய்தியும் காணப்படுகிறது. ‘பையரவும்’ என்ற சொல் இராகுவைக் குறிப்பதாக அமைகிறது. ‘இராகு நிலவை விழுங்கி பின்னர் மீண்டும் உமிழ்ந்ததைக்’ கூறுவதாக நாலடியாரின் பாடல் குறிப்பிடுகின்றது. நாலடியார் சிவனை முக்கண் உடையவன் என்றும், காமனைத் தீக்கிரையாக்கிப் பின்னர் உயிர்ப்பித்தவன் என்றும் கூறுகின்றது.

ஐந்திணை ஐம்பதில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடல் வைதீகக் கடவுள்கள் பலவற்றையும் குறிப்பிடுவதாக அமைந்துள்ளது. அது சிவனைப் பற்றிக் கூறும்போது,

“இயங்கெய் லெய்தவன் றார்பூப்ப வீதோ’’[15]

என்கிறது. சிவன் முப்புரங்களை எறித்த செய்தியைக் கூறுவதாக இப்பாடல் அமைகிறது.

முன்பொருகாலத்தில் தாராக்கன், கமலாக்கன், வித்யுன்மாலி என்ற மூவரும் தரகாசூரனின் மகன்களாவர். இவர்கள் மூவரும் தங்களின் தவோபலத்தால் பொன், வெள்ளி, இரும்பினால் ஆன மிக வலிமையான கோட்டைகளைப் பெற்றனர். மக்களுக்குப் பல்வேறு விதமான தீங்குகளையும் செய்தனர். இதனைத் தாங்கமுடியாத தேவர்களும் மக்களும் சிவபெருமானிடம் முறையிட, ஒரு நொடியில் பொற்கோட்டை, வெள்ளிக்கோட்டை, இரும்புக் கோட்டை ஆகிய மூன்று அரக்கர்களின் கோட்டையும் எறித்து மக்களைக் காத்தார். இதனையே ஐந்திணை ஐம்பது 'இயங்கெயி லெய்தவன்' எனச் சுட்டுகிறது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றான 'இன்னிலை' என்ற நூலிற்கு பாரதம் பாடிய பெருந்தேவனார் கடவுள் வாழ்த்துப் பாடல் இயற்றியுள்ளார். அப்பாடலிலும் சிவபெருமானின் சிறப்புகளும், சிவனை வணங்க வேண்டியதன் அவசியத்தையும் அறியமுடிகிறது.

"வேலற் றரீஇய விரிசடைப் பெம்மான்
வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதழ்ந்தெறி கொன்றையன்
கூட்டா வுலகங் கெழீஇய மலிந்தே"[16]

முருகனைப் படைத்தவனும், விரிசடை உடையவனும், இயமனைச் சினந்து கொன்றை மாலை அணிந்தவனும், உமையாளுக்கு தனது இடப்பாகத்தை கொடுத்தவனுமாகிய சிவனே எல்லா உலக இயக்கங்களுக்கும் துணையாக இருக்கிறான் என்கிறது இன்னிலை. படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில்களுக்கும் சிவனே காரணமாக அமைகிறான் என்பதே இப்பாடலின் உட்பொருளாக அமைகிறது. 'வேலற்றரீஇய' என்றதனால்

படைத்தல் தொழிலையும், அவ்வேலனால் இந்திரனைக் காத்ததன் காரணமாக காத்தற் தொழிலையும், கூற்றம் கதழ்ந்நெறி என்றதனால் அழித்தல் தொழிலையும் சிவனே செய்கிறான் என்ற செய்தி மேற்காண் பாடலில் மறைமுகமாகச் சொல்லப்படுகிறது. மேலும் சக்தியும் சிவமும் சேர்ந்தே உலக உயிர்களைப் படைத்து, அவைகளைக் காக்கவும் செய்கின்றனர் எனவும் இன்னிலை கூறுகிறது.

ஐந்திணை ஐம்பது நூலானது சிவன் முக்கண் உடையவன் என்பதையும், ஆலகால விசத்தை உண்டதையும், எல்லாவற்றிற்கும் காரணமாய் இருப்பதையும் கூறுவதாக அமைந்துள்ளது.

> "................................. கண்ணுதலின்
> முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னாலஞ்சேர்
> கண்டத்தா னீன்ற களிறு''[17]

கண்ணை நெற்றியில் கொண்ட தலையை உடையவனாகவும், இவ்வுலகமாகிய அண்டத்தை தன் வடிவமாகக் கொண்டவனாகவும், எல்லாவற்றிற்கும் முழுமுதற் காரணமாகவும், இவ்வுலகைக் காக்கும் பொருட்டு ஆலகால விஷத்தை உண்டு, நஞ்சு பொருந்தியிருக்கும்படியான கழுத்தினை உடையவனாகவும் சிவபெருமான் உள்ளான் என்று சிவனின் உருவ அமைப்பையும், உலகைக் காக்கும் ஆற்றலையும் கூறுகின்றது.

இன்னா நாற்பதும் சிவனை முக்கண் உடையவன் என்றே குறிப்பிடுகிறது.

> "முக்கட் பகவன் அடிதொழா தார்க்கின்னா''[18]

முக்கண்களை உடைய சிவனை வணங்கி அவன் அடி தொழாமல் இருப்போர்க்கு இன்னாததே நிகழும் என்ற இன்னா நாற்பதின் கருத்தை உள்வாங்கி இனியவை நாற்பதானது.

“கண்முன் றுடையான்தாள் சேர்தல் கடிதினிது’’[19]

என்கிறது.

இன்னா நாற்பது ‘சிவனைத் தொழாதார்க்கு இன்னாத செயல்களே நிகழும் என்று எதிர்மறையாகச் சொன்னதையே ‘சிவனைத் தொழுதால் இனிது நடக்கும்’ என நேர்மறையாக இனியவை நாற்பது கூறுகிறது.

சங்கம் மருவிய இலக்கியங்களில் சிவனைப் பற்றி சிலநூல்களே பாடுகின்றன. அவற்றிலும் சில பாடல்களே சிவனைப் பற்றியதாக அமைந்துள்ளன. அறநூல்கள் பெரும்பாலும் சமண பௌத்தர்களால் இயற்றப்பட்டதாதலின் அவற்றில் சிவன் பற்றிய பாடல்கள் மிகுதியாக இடம்பெறவில்லை.

அகநூல்களில் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் சிவனைப் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன. அவற்றில் சிவனின் உருவ வருணனை மிகுதியாகப் பேசப்படுகிறது. சிவன் முக்கண்களை உடையவன், இவ்வண்டத்தை தன் உடலாகக் கொண்டவன், உமையாளுக்கு தன்னில் சரிபாதி உடலைக் கொடுத்து, சிவசக்தியாகி, இவ்வுலக உயிர்களைப் படைத்துக் காப்பவன், இவ்வுலக நன்மைக்காக ஆலகால விஷத்தை உண்டு அதனை தன் கழுத்திலே வைத்திருப்பவன், தனது திருவடியை வணங்குவோருக்கு எல்லா நன்மைகளையும் செய்பவன் என்று சிவன் காட்டப்படுகிறான்.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் முருகன்**

தமிழகத்தில் மிகுதியான மக்களால் வழிபடக் கூடிய கடவுளாக முருகன் காணப்படுகிறார். சைவ சமயக் கடவுள்களில் சிவனுக்கு அடுத்தோ அல்லது சிவனுக்கு இணையாகவோ போற்றப்படும் கடவுளாக முருகன் உள்ளார். தொல்காப்பிய காலத்திற்கு முன்பிருந்தே முருகன் வழிபாடு தமிழகத்தில் இருந்துள்ளது. பெரும்பாலானோர் முருகனையே தமிழ்க் கடவுளாக ஏற்றுக் கொள்கின்றனர். தொல்காப்பியம் கூறும் 'சேயோன் மேய மைவரை உலகம்' என்பதில் சேயோன் என்பது முருகனையே சுட்டுவதாகக் கூறுவர். சேயோன் வழிபாடுதான் பின்னர் சைவ சமயமாக மாற்றமடைவதாகவும் கூறுவர். வைதீக சமயம் தமிழகம் வந்த பிறகு தான் சேயோன் வழிபாடு என்பது சிவவழிபாடாகவும் முருகன் சிவனின் மகனாகவும் மாற்றமடைகிறது.

வைதீக சமயத்தாரால் சிவனும் பார்வதியும் கணவன் மனைவியாகவும் முருகனும், கணபதியும் அவர்களின் பிள்ளைகளாகவும் கொள்ளப்படுகின்றனர். தொடக்கத்தில் இந்நால்வருக்குமென தனிச் சமயங்களே இருந்தன.

''சக்தி, கணபதி, குமாரன் (சுப்பிரமணியன்) இவர்களின் பெயரில், சாக்தம், காணபத்யம், கௌமாரம் என்ற சமய உட்பிரிவுகள் உண்டு. ஆனால் இவை, தனித்துவம் பெறவில்லை. சைவத்திற்குள் இவை, அடக்கம் பெற்றுள்ளன''[20] என்பர் தி.சு.நடராஜன்.

வைதீக சமயத்தின் வளர்ச்சிக்குப் பிறகு, அதன் கிளைச் சமயங்களாகக் கருதப்படும் சாக்தம், காணபத்யம், கௌமாரம் முதலியவையனைத்தும் வளர்நிலை அடையாமல் வைதீகத்தினுள்ளேயே அடங்கி விட்டன. முருகனும்

சிவன் பார்வதியின் மகனாக்கப்பட்டார். கணபதியின் தம்பியாக்கப்பட்டார். முருகன் பற்றிய பாடல்கள் சங்க இலக்கிய காலங்களிலிருந்தே கிடைத்து வருகின்றன. சங்க இலக்கியங்கள் முருகனை வேலன் என்ற பெயரால் சுட்டுகின்றன. குறிஞ்சித் திணைக்குக் கடவுளாகவும் முருகன் சுட்டப்படுகிறான். வேலன் வெறியாட்டு என்பது சங்க இலக்கியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

சங்க இலக்கியத்திற்குப் பின் வந்த சங்கம் மருவிய இலக்கியங்களிலும் முருகனைப் பற்றிய பாடல்கள் காணப்படுகின்றன. இப்பாடல்கள் முருகனின் அழகை வர்ணிப்பதாகவும், முருகனின் பண்பு நலன்களைக் கூறுவதாகவும், முருகனின் வீரச் செயல்களை வெளிப்படுத்துவதாகவும் அமைந்துள்ளன. இந்நூலில் வேலன், சத்தியான், கடம்பமர்ந்தான் என்ற பெயர்களில் முருகன் குறிக்கப்படுகிறான். அகத்திணை நூல்களில் உள்ள பாடல்களிலேயே முருகனைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

> "வெறிகமழ் வெற்பனென் மெய்நீர்மை கொண்ட
> தறியாண்மற் றன்னோ! அணங்கணங்கிற் றென்று
> மறியீர்த் துதிரந்தூய் வேலற்றரீஇ
> வெறியோ டலம்வரும் யாய்''[21]

என்ற ஐந்திணை ஐம்பது பாடல் சங்ககால வெறியாட்டு நிகழ்வினைக் கூறுவதாக அமைந்துள்ளது. தலைவியின் மேனி மாற்றத்திற்கு அணங்கே காரணம் என எண்ணி, தலைவியின் தாயானவள் வெறியாட்டும் பூசாரியை அழைத்து, ஆட்டுக்குட்டியை பலிகொடுத்து, அதன் குருதியை நாற்புறமும் தெளித்து முருகனுக்கு புசை செய்து வருகிறாள்' என்கிறது. இப்பாடல், முருகனை வணங்கி பூசை செய்வதால் தலைவிக்கு உண்டான நோய் நீங்கும்

என்ற நம்பிக்கையை வெளிப்படுத்துவதாக மேற்காண் பாடலானது அமைந்துள்ளது.

இதேபோல ஐந்திணை ஐம்பதில் உள்ள மற்றொரு பாடலிலும் முருகனைப் பற்றிய செய்தி காணப்படுகிறது.

"................... இருண்டெழுந்து

செல்வக் கடம்பமர்ந்தான் வேன்மின்னி''[22]

முருகன் கடம்பமாலையை அணிந்தவன் என்பதும், அவனது வேற்படையானது மின்னலைப் போன்று மின்னுவதாக உள்ளது என்பதும் ஐந்திணை ஐம்பது பாடலின் வழி அறியமுடிகிறது.

திணைமாலை நூற்றைம்பது நூலில் உள்ள பாடலும் முருகனின் வேல் தன்மையைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

"கருங்கடன் மாந்திய வெண்டலைக் கொண்மூ

விருங்கடன்மா கொன்றான் வேன்மின்னிப் – பெருங்கட

றன்போன் முழங்கித் தளவங் குருந்தனைய''[23]

பெரிய கடலின் இடையே காணப்பட்ட மாமர வடிவினை உடைய சூரபத்மனை வெட்டி வீழ்த்திய முருகனின் வேலானது, மின்னலைப் போல மின்னுகிறது என திணைமாலை நூற்றைம்பதும் முருகனின் வேல் தன்மையைக் கூறுவதாக அமைந்துள்ளதைக் காணலாம்.

இன்னா நாற்பதில் உள்ள பாடல் ஒன்று முருகன் திருவடியைத் தொழுதால் அனைத்துத் துன்பங்களும் நீங்கி நிறைவான இன்பம் கிடைக்கும் என்பதாக அமைகிறது.

"சக்கரத்தானை மறப்பின்னா வாங்கின்னா
சத்தியான் றாடொழா தார்க்கு''[24]

வேற்படையை உடைய முருகனின் திருவடியைத் தொழாதவர்க்கு துன்பமே நிகழும் என்றும், திருவடியைத் தொழுபவர்க்கு அனைத்துத் துன்பங்களும் நீங்கி இன்பம் உண்டாகும் என்றும் கூறுகிறது.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் சில பாடல்களே முருகனைப் பற்றியதாக அமைந்துள்ளது. அப்பாடல்கள் பெரும்பாலும் முருகனின் வேற்படைச் சிறப்பைக் கூறுவதாக உள்ளன. முருகனின் வேலானது அரக்கர்களை அழிக்கும் வல்லமை உடையது என்றும், அது மின்னலைப் போன்று மின்னுகிறது என்றும், முருகன் அழகு நிறைந்தவன் என்றும், கடம்ப மலர்களை மாலையாக அணிபவன் என்றும் கூறுவதோடு, சங்ககால வேலன் வெறியாட்டு நிகழ்வினையும் கூறுவதாக அமைந்துள்ளது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் கணபதி**

கணபதி, பிள்ளையார், விநாயகர் என்ற சொல்லாடல் சங்கம் மருவிய இலக்கியங்களில் இல்லை. 'களிறு' என்ற சொல்லாலேயே கணபதி குறிப்பிடப்படுகிறார். 'களிறு' என்பது 'யானை முகன்' என்ற கணபதியின் மற்றொரு பெயரைக் குறிப்பதாக உள்ளது. ஐந்திணை எழுபது நூலில் உள்ள பாடல் கணபதி சிவனின் மகன் என்பதைக் கூறுவதாக அமைகிறது.

"எண்ணும் பொருளினிதே யெல்லா முடிந்தெமக்கு
நண்ணுங் கலையணைத்து நல்குமால் – கண்ணுதலின்
முண்டத்தா னண்டத்தான் மூலத்தா னாலஞ்சேர்
கண்டத்தா னீன்ற களிறு''[25]

மேற்கண்ட பாடல் சிவபெருமானின் பெருமையைச் சுட்டும் விதமாக அமைந்துள்ளதோடு, யானை முகக் கடவுளாகிய கணபதியை ஈன்றவன் என்றும் கூறுகிறது. மேலும் யானைமுகக் கடவுளைத் தொழுபவர்க்கு எல்லாம் இனிதாக முடிவதோடு, கல்விச் செல்வமும் கிடைக்கும் என்பதாக கணபதியின் சிறப்பு மேற்கண்ட பாடலில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பார்வதி**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் பார்வதி என்ற சொல் இல்லை 'உமையாள்' என்றும் 'வாலிழை' என்றும் பார்வதி குறிக்கப்படுகிறாள்.

"ஒட்டிய காதல் உமையாள் ஒரு பாலா"[26]

"வாலிழை பாகத் தமரிய கொழுவேற்"[27]

இவ்விரு பாடல் வரிகளும் பார்வதியாகிய உமையாளைக் குறிப்பதாக அமைந்துள்ளது. இவ்விரண்டிலும் சிவன் தன் சரிபாதியை உமையாளுக்குக் கொடுத்ததைக் கூறுவதாக அமைந்துள்ளது.

சைவ சமயக் கடவுள்களான சிவன், பார்வதி, முருகன், கணபதி ஆகியோரைப் பற்றிய பாடல்கள் அனைத்தும், அவர்களின் திருவுருவ அமைப்பு அவர்களின் பண்பு நலன்கள், மக்களுக்குச் செய்த அருளிச் செயல்கள் ஆகியனவும் இவ்விறைவன்களை வணங்கி அவர்களின் திருவடியைப் பற்றுவோருக்கு எல்லாத் துன்பங்களும் நீங்கி நிறைந்த இன்பம் தரும் என்பதாகவும் அமைகின்றது.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் வைணவம்**

வைதீக சமயத்தில் ஒரு பிரிவாகக் கருதப்படுவது வைணவ சமயமாகும். வைணவர்களின் கடவுளாக விஷ்ணு குறிப்பிடப்படுகிறார். விஷ்ணு என்பது வடஇந்தியாவில் வணங்கப்படுகின்ற கடவுளாகும். வைதீகம் தென்னிந்திய வைணவ சமயத்தை இணைக்கும் போது விஷ்ணு வைணவ சமயக் கடவுளான திருமாலுடன் இணைக்கப்படுகிறார். விஷ்ணு என்ற சொல்லுக்கு எங்கும் பரந்துள்ளவன், நன்மை செய்பவன் என்று பொருள் கொள்கின்றனர்.

“அடியவர்களை மாயையிலிருந்து விடுவிப்பவன் எல்லாப் பொருள்களிலும் ஊடுருவி நிற்பவன், என்றெல்லாம் பொருள் கூறினும், இச்சொல்லை விடவும் ‘பகவான்’ என்ற சொல்லையே பல இடங்களிலும் பயன்படுத்துகின்றனர். இதனாலேயே பாகவத சமயம் பாகவத தருமம் எனத் திருமால் நெறியைக் கூறி வருகின்றனர்”[28]

தமிழகத்தில் விஷ்ணு என அழைப்பதை விடவும், திருமால் என அழைப்பதே பெரும்பான்மையாகக் காணப்படுகிறது. திருமால் என்பதில் உள்ள ‘மால்’ என்பதற்கு அடியவர்களிடம் நீங்காத அன்பு கொண்டவன் எனப் பொருள் கொள்ளப்படுகின்றது. ‘வாசுதேவன்’ என்ற பொருளிலும் ‘மால்’ என்ற சொல் குறிப்பிடப்படுகின்றது. சங்க இலக்கியப் பாடல்கள் பலவற்றிலும் மால் என்ற சொல்லால் திருமால் குறிப்பிடப்படுகிறார்.

“மரம்செல மிதத்த மாஅல் போல (அகம்)
மல்லரை மறம்சாய்த்த மால் போல் (கலி)
நீர்செல நிமிர்ந்த மால் போல (பெரும்பாண்)”[29]

முதலிய சங்கஇலக்கியப் பாடல்வரிகள் திருமாலை மால் என்ற பெயரால் குறிப்பிடுகின்றன. மேலும்,

“கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன் விஷ்ணு, மதுசூதனன், திரிவிக்ரமன், வாமணன், சிரிதரன், இருடிகேசன், பற்பநாபன், தாமோதரன்”[30]

மாயோன், நீலநிற வண்ணன் என்ற பெயர்களாலும் திருமால் அழைக்கப்படுகிறார். திருமாலுடைய கடவுட் தன்மையை ஏற்று, திருமாலுக்கு அடிமை செய்து, திருமாலே கதியென நினைத்து வாழ்வோரையே வைணவர்கள் எனப்பொதுவாகக் கூறினாலும் இராமானுசருக்குப் பின் அவரைப் பின்பற்றுவோர் தங்களின் நெறியினை ஸ்ரீவைஷ்ணவம் என்றே கூறி வருகின்றனர். வைணவ சமய நெறியைப் பின்பற்றுவோர் கடைபிடிக்க வேண்டிய நெறியென சிலவற்றைக் கூறுகின்றனர்.

“(1) தாபம் : விஷ்ணுவின் சின்னங்களாகிய சங்கு சக்கரங்களைத் தோள்களில் முத்திரையிட்டுக் கொள்ளுதல்

(2) புண்டரம் : நெற்றியிலும் நெஞ்சிலும் திருமண்ணும் ஸ்ரீசூரணமும் கொண்டு நாமமிட்டுக் கொள்ளுதல்

(3) நாமம் : விஷ்ணுவின் அடியான் என்பதை வெளிப்படுத்த அவன் திருநாமத்தோடு ‘தாசன்’ என்ற பெயரையும் சேர்த்துத் தன்னைக் குறிப்பிடுதல்

(4) மந்திரம் : தீட்சை பெற்று ஆசாரியனிடம் மந்திரம் கேட்டல்

(5) இஜ்யை : பகவானை ஆராதிக்கும் முறையினை உபதேச வாயிலாகப் பெறுதல்

இவற்றைப் பஞ்ச சமஸ்காரம் என்பர். இவை விதிப்படி ஆசிரியனிடம் பெறத்தக்கவை. பஞ்ச சமஸ்காரத்தை சமாச்ரயணம் (பற்றுதல்) எனவும் குறிப்பிடுவர். இவற்றோடு நாள்தோறும் செய்யத்தக்க கிரியைகளையும் வற்புறுத்துவர். அவை அபீகமனம், நீராடல், பிராத்தனை, உபாதானம்: உடலைப் பேணுமளவே பொருள் முயற்சி மேற்கொள்ளல், இதனை அபரிக்ரகம் என்பர்''[31]

இந்நெறி இராமானுஜரால் சொல்லப்பட்டதாகும். இந்நெறியை கடைபிடிப்பதே வைணவ மரபாகக் கொள்ளப்படுகிறது. தீவிர வைணவர்கள் கடைபிடிக்கப்படும் ஒழுகலாறுகளாக மேற்கண்ட நெறிகள் குறிப்பிடப்படுகின்றன. இவ்வைணவ வழிபாட்டு மரபானது வேதகாலத்திற்கு முற்பட்டதாகவே காணப்படுகிறது. வேத இலக்கியங்களிலேயே வைணவம் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. வேத இலக்கியங்களில் காணப்படும் வைணவம் சார்ந்த கருத்துக்களை பின்வருமாறு தொகுக்கலாம்.

'ரிக் வேதத்தின் பத்தாவது நூலில் உள்ள 19–ஆவது செய்யுட் தொகுதி மனிதனைப் பற்றிய பதினாறு செய்யுட்கள் கொண்டதாகும். (புருட சூக்தம்), இப்பகுதியில் விட்டுணுவிற்குப் புருடன் என்ற பெயரும் இவ்வுலகம் அவனுடைய படைப்பு என்றும் குறிப்பிடப்பட்டுள்ளது. தைத்திரியத் தொகுதியில் விட்டுணுவை நோக்கி வேள்வி செய்தால் ஒருவன் பாதுகாப்பு, பொருள் மற்றும் நல்வாழ்வு பெறலாம் என்ற குறிப்பு காணப்படுகிறது. நலன் செய்தலும்

மனிதர்க்கு உதவுவதில் நாட்டமும் இறைவனுடைய இரு சிறந்த தன்மைகளாகச் சொல்லப்படுகின்ற உலகியல் ஒழுங்கையும் இயற்கைச் சட்டங்களையும் விட்டுணு நடத்துவதால் உலகைக் காப்பவராகக் கருதப்படுகிறார்.

எசுர் வேதத்தில் விட்டுணுவைக் குறிப்பிடும் பல செய்யுட்கள் அவருக்குத் திருப்படையல் அளிப்பதைக் குறிப்பிடுகின்றது. இவ்வேதத்தின் இறுதிப் பாடல் சிரியையும், இலக்குமியையும் விட்டுணுவின் துணைவியர்களாகக் குறிப்பிடுகின்றது.

சாம வேதத்தில் பல செய்யுட்கள் விட்டுணுவைக் குறிப்பதாக அமைகின்றன. வேதங்களின் சடங்கியல் (பிராமணங்கள்) பகுதியிலும் விட்டுனு இந்துக் கடவுள்களில் முதன்மையான இடத்தை வகிப்பதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது’[32] என வேதங்களில் காணப்படுகின்ற வைணவக் கருத்துக்களை சுருக்கமாகத் தருகிறார் ஆர்.நரசிம்மன். உலகில் உள்ள அனைத்து உயிர்கள், அனைத்துப் பொருட்கள் என்பனவற்றின் உள்ளிருந்து ஆட்சி புரியும் இறைவனாக விஷ்ணு உள்ளதாக வைணவ இலக்கியங்கள் கூறுகின்றன. இறைவனை மிஞ்சிய சக்தி எதுவுமில்லை. இறைவனை விடவும் நுண்ணியது எதுவுமில்லை. இறைவனாலேயே இவ்வுலகம் இயங்குகின்றது.

“வைணவத்தின் கருத்தான இறைவன் இயற்கையின் உயிராகும் என்பது பிருகதாரண்யக உப நிடதத்தில் காணப்படுகிறது. அது இறைவனை உலகின் உள்உறைவானாகக் குறிப்பிடுகிறது. மேலும் அது தன்னுள்ளே இருந்து தன்னைக் கட்டுப்படுத்தும் இறைவனைப் பூமியானது அறிவதில்லை எனவும், அவ்விறைவனின் உடலே இப்பூமியாகும் எனவும் குறிப்பிடுகின்றது.

இறைவன் உலகின் உள்ளிருந்து அதனை ஆட்சி செய்கிறான். உலகம் முழுமையும் பரவி நின்று அதனை மேற்பார்வை இடுவதுடன் அதன் உள் உறைவானாகவும் பேசப்படுகின்றான். இறைவனை அனைத்தும் என்றும், வடிவம் என்றும், வடிவமற்றது என்றும், அறிவு என்றும், அறிவற்றது என்றும், நிலையானது என்றும், செயல் கொண்டது என்றும் கூறுகிறது. இறைவன் உண்மைகளுக்கெல்லாம் பேருண்மையாகும்''[33] என வைணவ உபநிடதங்கள் விஷ்ணுவின் தன்மைகளை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் திருமால்**

பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் பலவற்றிலும் வைணவம் சார்ந்த பாடல்கள் காணப்படுகின்றன. வைணவக் கடவுள்களான திருமால் பற்றியும் திருமகள் பற்றியும் இந்நூல்கள் கூறுகின்றன. திருக்குறள் சமயம் சாரா நூலாக இருந்தாலுங்கூட திருமாலப் பற்றிய செய்திகள் பலவும் சொல்லப்பட்டுள்ளன. கடவுள் வாழ்த்துப் பகுதியில் அமைந்துள்ள பத்து குறள்களும் எந்தக் கடவுளையும் குறிப்பிடாமல் பொதுமையான கடவுட் தன்மையே கூறப்பட்டாலும், அவற்றிலும் வைணவ சமயத்தின் தாக்கத்தினையும் திருமாலின் பெருமையினையும் காணமுடிகிறது.

“கற்றதனால்ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்''[34]

“மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்''[35]

"தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது''[36]

"அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க் கல்லால்
பிறவாழி நீத்தல் அரிது''[37]

"கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை''[38]

"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவ னடிசேரா தார்''[39]

என்ற குறள்கள் அனைத்துமே இறைவன் திருவடிகளைப் பற்றுவதையே குறிப்பதாக அமைந்துள்ளன. இறைவன் திருவடிகளை வணங்குவதையே உயர்ந்த வழிபாட்டு முறையாக வைணவ மரபு கருதுகிறது. திருமாலின் உறைவிடம் 'பரமபதம்' என அழைக்கப்படுகிறது. 'பதம்' என்ற சொல்லுக்கு வேகம், கால், தங்குமிடம், அடி என்ற பல்வேறு பொருட்கள் காணப்படுகின்றன. இறைவனின் திருவடியைப் பற்றுவோருக்கே பரமபத யோகம் கிடைக்கும் என்பதை உணர்த்துவதாகவே இச்சொல் வைணவர்களால் குறிக்கப்படுகின்றது. திருமால் வழிபாட்டில் திருவடி தொழுதல் என்பது இன்றியமையாததாகும்.

"அன்றிவ்வுலகம் அளந்தாய் அடிபோற்றி''[40]

என உலகளந்தவனின் அடியைத் தொழுதால் நன்மை விளையும் என்கிறார் ஆண்டாள். பிறசமயங்களை விடவும் திருவடி தொழுதலை மிகுதியும் வலியுறுத்துவது வைணவ சமயமே ஆகும். வைணர்களின் 'சரணாகதித் தத்துவம்' இறைவன் திருவடிகளைப் பற்றுதலையே முதன்மையாகக்

கொண்டுள்ளது. திருக்குறள் கடவுள் வாழ்த்துப் பாடல்களில் உள்ள குறள்கள் பலவும் இறைவன் திருவடிகளைப் பற்றுதலையே கூறுவதாக உள்ளதால் இக்குறள்கள் வைணவம் சார்ந்த குறள்கள் என்று கூறவும் இடந்தருகின்றது.

“மடியிலா மன்னவன் எய்தும் அடியனந்தான்
தாஅய தெல்லாம் ஒருங்கு’’[40]

“தாம்வீழ்வார் மென்றோன் துயிலின் இனிதுகொல்
தாமரைக் கண்ணான் உலகு’’[41]

என்ற குறள்களும் திருமாலையே குறிக்கின்றன. முதல்குறளில் திருமால் வாமன அவதாரம் எடுத்து இவ்வுலகை அளந்த நிகழ்வு சுட்டப்படுகிறது. இரண்டாவது குறளில் கூறப்படும் ‘தாமரைக் கண்ணான் உலகு’ என்பதற்கு ‘நித்திய சூரிகள் சூழ இருக்கும் திருமால் உலகு’ என பொருள் தருகிறார் பரிமேலழகர். இவ்வாறாக சமயப் பொதுமையை உணர்த்தும் திருக்குறளில் வைணவம் சார்ந்த கருத்துகள் இலைமறையாகக் காணப்படுகின்றன.

பழமொழி நானூறில் பல பாடல்கள் வைணவம் சார்ந்து காணப்படுகின்றன. திருமால் பசுக்கூட்டங்களைக் காத்த செய்தியும், திருமாலின் சுயரூப தரிசனம் பற்றிய செய்தியும், கோவர்த்தன மலையை குடையாய் பிடித்த செய்தியும், திருமாலின் கருட வாகனம் பற்றிய செய்தியும் இந்நூலில் காணப்படுகின்றன.

“வாட்டிற லானைவளைந் தார்கள் அஞ்ஞான்று
வீட்டிய சென்றார் விளங்கொளி – காட்டப்

பொருவறு தன்மைகண்டு அஃதொழிந்தார்; அஃதால்

உருவு திருவூட்டு மாறு''[42]

என்ற பாடலில் திருமாலின் உருவ அழகு குறிப்பிடப்பட்டுள்ளது. 'திருமாலைக் கொல்ல வந்த பகைவர்கள் அவரின் பேரொளி பொருந்திய உருவ அழகைக் கண்டு தம்மனம் மாறினார்கள் என்பதன் வழி தன் உருவ அழகிலேயே பகைவரை வெல்லும் ஆற்றல் படைத்தவராக திருமால் காட்டப்படுகிறார்.

"நிரைப்புறங் காத்த நெடியோனே யாயினும்

உரைத்தால் உரைபெறுதல் உண்டு''[43]

திருமால் கிருஷ்ண அவதாரத்தில் பசுக்கூட்டங்களை மேய்த்த நிகழ்வினைக் கூறுகிறது மேற்கண்ட பாடல். திருமால் கருட வாகனத்தை உடையவன் என்பதையும், உலகளந்ததையும் கூறுவதாக,

"..................... கொற்றப்புள்

ஊர்ந்துலகம் தாவின் அண்ணலே யாயினும்

சீர்ந்தது செய்யா தார்''[44]

என்ற பாடல் அமைகிறது.

"ஆவிற்கு அரும்பணி தாங்கிய மாலையும்

கோவிற்குக் கோவயன் என்னுலகம் கூறுமால்

தேவர்க்கு மக்கட்கு எனல் வேண்டா''[45]

என்ற பாடல், 'பசுக்கூட்டங்களுக்கு மிகுந்த துன்பம் வந்த காலத்தில் கோவர்த்தன கிரியை குடையாகப் பிடித்து, பசுக்களின் துயரைக் காத்த திருமாலையே மாடுமேய்க்கும் இடையன் என்று சொல்கிறார்கள்' என்கிறது.

திருமால் பசுக்கூட்டங்களை மேய்த்தல், கோவர்த்தன கிரியைத் தூக்குதல், கருட வாகனத்தை உடையவனாதல் போன்ற செய்திகளைக் கூறுவதாக பழமொழி நானூறு பாடல்கள் அமைந்துள்ளன.

நான்மணிக்கடிகையின் கடவுள் வாழ்த்துப் பாடல்கள் திருமாலின் அருட்தன்மையையும் மேனியழகையும் வீரச்செயல்களையும் கூறுவதாக அமைகிறது.

"மதிமன்னு மாயவன் வாள்முகம் ஒக்கும்
கதிர்சேர்ந்த ஞாயிறு சக்கரம் ஒக்கும்
முதுநீர்ப் பழனத்துத் தாமரைத் தாளின்
எதிர்மலர் மற்றவன் கண்ஒக்கும் பூவைப்
புதுமலர் ஒக்கும் நிறம்''[45]

"படியை மடியகத் திட்டான் அடியினால்
முக்காற் கடந்தான் முழுநிலம் – அக்காலத்து
ஆநிரை தாங்கிய குன்றெடுத்தான் சோவின்
அருமை யழித்த மகன்''[46]

முதல் பாடல் 'திருமாலின் திருமேணி வருணனையைக் கூறுவதாக அமைகிறது. திருமாலின் முகம் ஒளிபொருந்திய சந்திரனைப் போன்றும்; திருமாலின் கையில் உள்ள சக்கரம் கதிர்களை உடைய சூரியனைப் போன்றும்; திருமாலின் கண்கள் தாமரை மலர்களைப் போன்றும்; திருமேனி காயாம்பூவைப் போன்றும் இருக்கும்' என திருமாலின் திருமேனி அழகைக் குறிப்பிடுவதாக அமைகிறது.

இரண்டாவது பாடல் திருமாலின் வீரச் செயல்களைக் கூறுவதாக அமைகிறது. திருமால் தன் வயிற்றினுள் உலகையே வைத்துள்ளான்

என்கிறது. இதற்கு இரு புராணக் கதைகளைக் கூறுகின்றனர். திருமால் கிருஷ்ண அவதாரத்தில் தன் தாய் யசோதையிடம் இவ்வுலகமே தன்னுள் இருப்பதாக வாயினைத் திறந்து காட்டியதையும், மச்ச அவதாரத்தில் நீர்ப் பிரளயத்திலிருந்து இவ்வுலகைக் காக்க தன் வயிற்றினுள்ளே இவ்வுலகை வைத்திருந்ததையும் வெளிப்படுத்தும் விதமாகவே 'படியை மடியகத்து இட்டான்' என நான்மணிக்கடிகை கூறுகிறது. மாவலிச் சக்கரவர்த்தியின் செருக்கை அடக்க வாமன அவதாரம் எடுத்து மூவுலகை அளந்ததையும், கிருஷ்ண அவதாரத்தில் கோவர்த்தன மலையை குடையாய் பிடித்ததையும், பாணாசூரனை அவன் மதிற்கோட்டையோடு அழித்ததையும் நான்மணிக்கடிகை கூறுகிறது.

திரிகடுகத்தில் உள்ள கடவுள் வாழ்த்துப் பாடலும் மேற்கண்ட நூல்களில் இடம்பெற்றுள்ள திருமாலின் பெருமைகளைக் கூறுவதாகவே அமைந்துள்ளது.

"கண்ணகல் ஞாலம் அளந்ததூஉம் காமருசீர்த்
தண்ணறும் பூங்குறுந்தம் சாய்ந்ததூஉம் – நண்ணிய
மாயச் சகடம் உதைத்ததூஉம் இம்மூன்றும்
பூவைப்பூ வண்ணன் அடி"[47]

மூன்றடியால் மூவுலகை அளந்தவனும், கிருஷ்ண அவதாரத்தில் குருந்த மரத்தையும், வண்டியையும் உடைத்தவனும், காயாம்பூ போன்ற மேனியைக் கொண்டவனுமாகிய திருமாலின் அடியினைப் பற்றினால் சிறப்பாக இருக்க முடியும் என்பதாக திரிகடுகம் கூறுகிறது.

"தொன்மான் குழாய்மாலை யானைத் தொழலினிதே"[48]

என்ற இனியவை நாற்பது பாடல் வரியானது 'பழைய மாட்சிமையுடைய துழாய் மாலையை அணிந்த திருமாலைத் தொழுதால் இனிது நடக்கும்' என்கிறது. இன்னா நாற்பது நூலானது, 'சக்கரப் படையை உடைய திருமாலை மறந்தால் தீமையே விளையும்' என்கிறது. இதனை,

"சக்கரத்தானை மறப்பின்னா''[49]

என்ற வரியின் மூலம் அறியலாம். கார் நாற்பது திருமால் பற்றிக் கூறும்போது,

"பெருங்கடல் வண்ணன் புனைமார்பிற் றார்போல்
திருவில் விலங்கூன்றித் தீம்பெயல் வீழ''[50]

என்கிறது. 'கடலைப் போன்ற நீலநிற உடலையும், வானவில்லின் வண்ணம் போன்ற கழுத்தையும் உடையவன் திருமால்' என்கிறது கார் நாற்பது.

ஐந்திணை ஐம்பது நூலானது கம்சனின் மற்போர் வீரர்களை வென்றவன் திருமால் என்கிறது.

"மல்லர்க் கடந்தா னிறம்போன் றிருண்டெழுந்து''[51]

கம்சனால் ஏவப்பட்ட மற்போர் வீரர்களை வென்ற கண்ணன் நீலநிறத்தினை உடையவனாக உள்ளான் என ஐந்திணை ஐம்பது கூற, கரிய நிறம் கொண்டவனாக திருமால் உள்ளதாக திணைமாலை நூற்றைம்பது கூறுகிறது.

"இருள்பரந் தாழியான் றின்னிறம் போற் றம்மு''[52]

என்ற பாடல் வரியின் மூலம் திருமால் கரிய நிறமுடையவன் என்பதை அறியலாம். இந்நூலில் உள்ள மற்றொரு பாடல் திருமாலின் சக்கரச் சிறப்பைக் கூறுவதாக உள்ளது.

“பாழிபோன் மாயவன்றன் பற்றார் களிற்றெறிந்த
வாழிபோல் ஞாயிறுகல் சேரத் – தோழியோ”[53]

திருமாலின் சக்கரம் போல் தோற்றமுடைய கதிரவன் மேற்கு திசையில் மறைந்தான் என்கிறது திணைமாலை நூற்றைம்பது. இறுதியாக இன்னிலை நூலானது திருமாலின் திருவடித் தொழுதலை வலியுறுத்தவதாக அமைந்துள்ளது.

“................................... மாலின்
விரிநிழ றாமெய்தார் தீப்பழுவத் துய்ப்பர்
உரிமை யிவணோநா தார்”[54]

தாம் செய்யும் கடமையை அறியாத மாந்தர் பாவம் பலபுரிந்து நரக துன்பத்தை அடைவர். அறச்செயல்களைச் செய்வோறே திருமாலின் திருவடி நிழலை அடைவர். அதுவே மாந்தர்களின் கடமையுமாகும் என்கிறது இன்னிலை.

பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள திருமாலைப் பற்றிய பாடல்கள் அனைத்தும் திருமாலின் மேனி அழகையும், அவர் எடுத்த அவதாரங்களில் அசூரர்களை அழித்ததையும், கூறுவதாகவே அமைந்துள்ளது. மேலும், வைணவர்கள் கூறும் சரணாகதித் தத்துவமான இறைவன் திருவடியே கதியென்று தன்னை ஒப்படைத்தலையும் கூறுவதாக சங்கம் மருவிய இலக்கியப் பாடல்கள் அமைந்துள்ளன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் திருமகள்**

புராணங்களில் திருமாலின் மனைவியாக திருமகள் போற்றப்படுகிறாள். திருமகளை இலக்குமி எனவும் அழைப்பர். திருமகள் செல்வத்திற்கு

அதிபதியாக காட்டப்படுகிறாள். பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் உள்ள பாடல்களில் சில திருமகளின் சிறப்பினைக் கூறுவதாக அமைந்துள்ளது.

பிறரின் பொருள் மீது பொறாமை கொள்ளக் கூடாது என்ற கருத்தினை திருவள்ளுவர் திருமகள் மீது ஏற்றிக் கூறுகிறார்.

“அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவள்
தவ்வையைக் காட்டி விடும்’’[53]

‘பிறரின் பொருள் மீது பொறாமைப் படுபவனைக் கண்டால், திருமகளும் அவன் மீது பொறாமை கொண்டு, அவனிடத்தில் வறுமை புகுமாறு கைகாட்டி விடுவாள்’ என்கிறது. மற்றொரு குறள் ‘விருந்தினரை முகமலர்ந்து வரவேற்று நன்முறையில் பேணுபவன் இல்லத்தில் திருமகள் முகமும் அகமும் மலர்ந்து தங்கியிருப்பாள் என்பதாக அமைகிறது.

“அகனமர்ந்து செய்யாள் உறையும், முகனமர்ந்து
நல்விருந்து ஓம்புவான் இல்’’[54]

என்ற குறள் மேற்கண்ட பொருளில் அமைகிறது.

“வினைக்கண் வினையுடையான் கேண்மை வேறாக
நிலைப்பானை நீங்கும் திரு’’[55]

எடுத்த செயலையே குறிக்கோளாகக் கொண்டு செயலாற்றுபவனிடம் மட்டுமே திருமகள் நிலைத்திருப்பாள், என திருமகளின் பெருமையை உணர்த்துவதாக மேற்கண்ட குறள் அமைகிறது.

“மடியுளான் மாமுகடி என்ப மடியிலான்
தாளுளாள் தாமரை யினாள்’’[56]

“இருமணப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு’’[57]

என்ற குறள்கள் திருமகளின் தன்மையைக் கூறுவதாக அமைகிறது. ‘சோம்பல் இல்லாமல் முயற்சி செய்பவனின் முயற்சியின் உள்ளே திருமகள் உள்ளாள்’ எனவும்; வரைவின் மகளீர், கள், சூது இம்மூன்றைக் கொண்டவரிடத்தே திருமகள் சேரமாட்டாள்’ எனவும் கூறுவதாக அமைகின்றன. திருக்குறளில் உள்ள திருமகள் பற்றிய குறள்கள் அனைத்தும் செல்வத்தின் கடவுளாகவே காட்டப்படுகின்றன.

சமணம் சார்ந்த நாலடியாரில் உள்ள பாடல்களில் சிலவும் திருமகளின் பெருமையைக் கூறுவதாக அமைகின்றன.

“பல்லான்ற கேள்விப் பயனுணர்வார் பாடழிந்து
அல்ல லுழப்ப தறிதிரேல் – தொல்சிறப்பின்
நாவின் கிழத்த யுறைதலாற் சேராளே
பூவின் கிழத்தி புலந்து’’[58]

“நாறாத் தகடேபோல் நன்மலர்மேற் பொற்பாவாய்
நீராய் நிலத்து விளியரோ’’[59]

இவ்விரு பாடல்களும் திருமகளின் குணத்தையும், சிறப்பையும் கூறுவதாக அமைந்துள்ளன. ‘கல்வி கேள்விகளில் சிறந்தோராகக் கருதப்படும் சான்றோர்கள் வறுமையுற்றவர்களாகவே காணப்படுகின்றனர். அதற்குக் காரணம், சான்றோர்களிடம் நாமகள் (சரஸ்வதி) குடியிருப்பதால், கோபமுற்று திருமகள் அவர்களிடம் செல்வதில்லை’ என்பதாக முதல் பாடல் அமைகிறது. இரண்டாவது பாடல் ‘தாமரை மலரில் வீற்றிருக்கும் பொன்னாலான பாவையைப் போல் திருமகள் உள்ளாள்’ என்கிறது.

திருமகளானவள் நற்குணமுடைய பெரியோரின் செயல்களை முடித்து வைப்பவள் என்றும், செல்வத்தைத் தருபவள் என்றும் நான்மணிக்கடிகை கூறுகிறது.

"கண்டே செய்பவாங் கம்மியர் உண்டெனக்
கேட்டதே செய்ய புலனாள்வார் – வேட்ட
இனியவே செய்ய அமைந்தார் – முனியாதார்
முன்னிய செய்யுந் திரு''[60]

"நில்லெனவும் நில்லா உயிரெனைத்தும் – நல்லாள்
உடம்படின் தானே பெருகுங் – கெடும்பொழுதில்
கண்டனவுங் கானா கெடும்''[61]

"கைத்துடையான் காமுற்றது உண்டாகும் வித்தின்
முளைக்குழாய் நீருண்டேல் உண்டாந் திருக்குழாம்
ஒண்செய்யான் பார்த்துறின் உண்டாகும் மற்றவள்
துன்புறுவான் ஆகிக் கெடும்''[62]

என்ற நான்மணிக்கடிகையின் மூன்று பாடல்களும் திருமகள் சினமில்லாத பெரியோர்கள் எண்ணியதை நிறைவேற்றுவாள் என்றும், திருமகள் அருள் பெற்றாள் மட்டுமே செல்வம் பெருகும் என்றும், இல்லையாயின் வறுமையே ஏற்படும் என்றும் கூறுவதாக அமைகிறது.

திரிகடுகமும் பழமொழி நானூறும் திருமகளை தாமரை மலரில் வீற்றிருப்பவள் என்கிறது.

"பொன்வரைக் கோங்கேர்முலைப் பூந்திருவே யாயினும்''[63]

“பொருகடல் தண்சேர்ப்ப – பூந்தாமரை மேல்

திருவொடும் இன்னாது துச்சு’’[64]

என்ற இரு பாடல் வரிகளும் மலர்களால் அலங்கரிக்கப்பட்டவளாகவும், தாமரை மலரின் வீற்றிருப்பவளாகவும் திருமகள் உள்ளாள் என்கிறது. இதே கருத்தினை ஐந்திணை ஐம்பது நூலானது,

“புனைபூந் தழையல்குற் பொன்னன்னாய்’’[65]

என்றும்,

“திருவொருங்கு மென்சாயற் றேங்கோதை மாத’’[66]

என்றும் கூறுகிறது. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் இடம்பெற்றுள்ள திருமகள் சார்ந்த பாடல்கள், திருமகளை செல்வம் நிறைந்தவளாகவும், திருமகள் இருக்கும் இடங்களில் தான் செல்வம் இருக்கும் என்பதாகவும், திருமகள் தாமரை மலரில் வீற்றிருப்பவளாகவும், பொன்மேனியை உடையவளாகவும், நாமகள் இருக்கும் இடங்களில் இருக்கமாட்டாள் என்பதாகவும் காட்டுகின்றன.

**சங்கம் மருவிய இலக்கியங்களில் பிற வைதீக தெய்வங்கள்**

வைதீக சமயம் சைவம் வைணவம் என இரண்டாகப் பிரிக்கப்பட்டாலும் இவ்விரு பிரிவுகளுக்கும் பொதுவான தெய்வங்கள் வைதீக சமயத்தில் காணப்படுகின்றன. வைதீக சமயத்தில் தேவர்களாகக் கருதப்படும் இந்திரன், இந்திராணி, எமன், குபேரன், காமன் முதலியவர்கள் பற்றிய பாடல்கள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒருசில இடங்களில் காணப்படுகின்றன.

தேவர்களின் தலைவனாகவும் தேவலோகத்தின் அரசனாகவும் இந்திரன் கருதப்படுகிறான். சைவ வைணவக் கடவுள்களுக்கு இணையாக இந்திரன் போற்றப்படுகிறான். நாலடியார் இந்திரனை 'சிவந்த கண்களை உடையவன் என்றும், திருமாலைப் போல அழகுடையவன்' என்றும் கூறுகிறது. 'எவரையும் இகழாமை, பொய் கூறாமை போன்ற நற்குணங்களை உடையவன் இந்திரன்' எனவும்; நான்மறை ஒழுக்கத்தைப் பாதுகாத்து நடப்பவன்' எனவும் ஏலாதி கூறுகிறது. இதனை,

"அம்கண் விசும்பின் அமரர் தொழப்படும்
செங்கண் மால் ஆயினும் ஆகமன்''[67]

"கூந்தல், மயில் அன்னாய்! – குழீஇயவான் விண்ணோர்க்கு
வேந்தனாம் இவ்வுலகம் விட்டு''[68]

"மறைபுரிந்து வாழுமேல் மண்ணொழிந்து, விண்ணோர்க்கு
இறைபுரிந்து வாழ்தல் இயல்பு''[69]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம். மற்றுமொரு நாலடியார் பாடல் இந்திரனின் பெருமையையும், உலகம் முழுதும் தன் ஆதிக்கத்தை செலுத்துவதையும் கூறுவதாக அமைகிறது.

"சக்கரச் செல்வம் பெறினும், விழுமியோர்
எக்காலும் சொல்லார் மிகுதிச்சொல், எக்காலும்
முந்திரிமேற் காணி மிருவதேல், கீழ்தன்னை
இந்திரனா எண்ணி விடும்'' [70]

'சான்றோர்கள் இந்திரன் போல செல்வத்தைப் பெற்றாலும் வரம்பு கடந்து பேச மாட்டார்கள் என்றும், கீழோர் குறைந்த அளவே செல்வம் இருந்தாலும்

இந்திரனைப் போல எண்ணி இறுமாப்படைவர் என்றும், இந்திரன் இவ்வுலகையே தன் ஆணையால் கட்டுப்படுத்துபவன்' என்றும் மேற்கண்ட பாடல் குறிப்பிடுகின்றது. இவ்விதம் இந்திரனைப் பற்றிய செய்திகள் சில பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படுகின்றன.

இந்திரனின் மனைவியாக இந்திராணி ஆவாள். இவள் தேவர்களின் தலைவியாகவும் கருதப்படுகிறாள். இந்திராணி அயிராணி என்ற பெயரால் நாலடியாரில் குறிப்பிடப்படுகிறாள்.

"அரும்பெறல் கற்பின் அயிராணி அன்ன
பெரும் பெயர்ப் பெண்டிர் எனினும்''[71]

என்ற பாடலில் இந்திராணி 'அயிராணி' என்ற பெயரால் அழைக்கப்படுகிறாள். இந்திராணி கற்பில் சிறந்தவள் என்பதாக மேற்கண்ட பாடல் கூறுகிறது.

**எமன் (கூற்றுவன்)**

எமனை 'கூற்றுவன்' என்றும் 'இயமன்' என்றும் அழைப்பர். எமன் சூரிய தேவனின் மைந்தனாகக் கருதப்படுகிறார். இவரே பூமியில் பிறந்த முதல் மனிதர் என வைதீக சமயம் கூறுகிறது. தான் செய்த அளவற்ற புண்ணியத்தின் பயனாக, இறந்தபின் உயிர்களைக் கொண்டு செல்லும் ஆற்றலைப் பெற்றவராக எமன் விளங்குகிறார். எமனைப் பற்றிய பல செய்திகள் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் காணப்படுகின்றன. திருக்குறளில் எமன் பற்றிய பல குறள்கள் இடம்பெற்றுள்ளன.

"கூற்றம் குதித்தலும் கைகூடும் நோற்றலின்
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு''[72]

“கொல்லாமை மேற்கொண் டொழுகு வான்
செல்லாது உயிருண்ணும் கூற்று”[73]

“கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை”[74]

மேற்கண்ட குறள்கள் எமனைப் பற்றியும் அவன் தொழில் பற்றியும் கூறுவதாக அமைந்துள்ளது. ‘தவ வலிமை முழுமையாகப் பெற்றவரைக் கொல்ல எமன் அஞ்சுவான்’ என்றும், ‘பிற உயிர்களைக் கொல்லாது வாழ்பவனின் உயிரை எமன் எடுக்க விரும்பமாட்டான்’ என்றும், ‘எமனே எதிர்த்து வந்தாலும் அதனை எதிர்த்து வெற்றி பெறுவதே சிறந்த படை’ என்றுமான எமனின் தொழில் பற்றியும், ஆற்றல் பற்றியும் திருக்குறள் கூறுகிறது.

திருக்குறள் மட்டுமல்லாது இன்னபிற பதினெண் கீழ்க்கணக்கு நூல்களிலும் எமன் சார்ந்த செய்திகள் காணப்படுகின்றன. நாலடியார் எமனைப் பற்றிக் கூறும் போது, ‘நல்லனவற்றை உடனே செய்யாமல் இருந்தால் எமன் சினந்து வருவான்’ என்றும், ‘நல்லறம் செய்தவர் எமன் வரும் போது துன்பம் அடைய மாட்டார்’ என்றும், ‘பெரியோரின் அறிவுரையைக் கேட்பதும் எமனிற்கு அஞ்சுவதுமே நற்குணம்’ என்றும் கூறுகிறது. இதனை,

“சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று”[75]

“வருந்தி உடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்கால் பரிவ திலர்”[76]

“அறிமின் அறநெறி அஞ்சுமின் கூற்றம்”[77]

என்ற பாடல் வரிகளின் மூலம் அறியலாம். இது போன்ற இன்னும் பல பாடல்கள் இந்நூலில் காணப்படுகின்றன. நான்மணிக்கடிகையில் உள்ள பாடல்கள் சிலவும் எமனைப் பற்றி கூறுவதாக அமைந்துள்ளன. எமன் உயிர்களின் இறப்பிற்காக மகிழ்வான்; தான் கவரும் உயிர்கள் சொல்வதை எமன் கேட்கமாட்டான் என்பதாக நான்மணிக்கடிகை கூறுகிறது. இதனை,

"துளிநோக்கி வாழும் உலகம் உலகின்
விளிநோக்கி இன்புறூஉம் கூற்று"[78]

"கூற்றமும் கூறுவ செய்து உண்ணாது ஆற்ற"[79]

என்ற பாடல்கள் வெளிப்படுத்துகின்றது. இவை மட்டுமல்லாது 'எதற்கும் அஞ்சாதவன் கூட எமன் வரும் போது வீடுபேறடையும் ஒழுக்கத்தைக் கற்க வேண்டும்' (ஏலாதி.22:3–4) என ஏலாதியும்; 'அழகு, செல்வம், குடிப்பிறப்பு முதலியவற்றை எமனிடமிருந்து காத்துக் கொண்டவர் எவரும் இல்லை' (பழமொழி, 183:3–4) என பழமொழி நானூறும்; எமன் எப்போது வேண்டுமானாலும் வருவான். எனவே, நல்லகுணம் உடையவரோடு சேருங்கள், பிறர் பொருளை கவராதீர், தீய சொற்களைக் கூறாதீர்' (சிறுப.24:3–4) என சிறுபஞ்ச மூலமும்: 'எமன் எப்போது வேண்டுமானாலும் வருவான் என்பதை உணர்ந்து நல்லனவற்றைச் செய்தல் இனிது' (இனியவை, 28:2) என இனியவை நாற்பதும் கூறுகின்றது.

தேவர்களில் ஒருவனாக குபேரன் விளங்குகிறான். குபேரனை வைசிரவண்ணன் என பௌத்த சமயத்தார் அழைப்பர். சமண சமயத்தார் குபேரனை சாவானுபூதி என்று வழிபடுகின்றனர். செல்வத்திற்கு

அதிபதியாக குபேரன் கருதப்படுகிறான். குபேரனைப் பற்றி ஏலாதி கூறும்போது,

> “எண்ணனாய் மாதவர்க் ஊணாந்தான் – வைசிர
> வண்ணனாய் வாழ்வான் வகுத்து”[80]

என்கிறது. இப்பாடலில் குபேரனின் குணம் சுட்டப்படுகிறது. ‘வேண்டியவர்க்குப் பொருளையும், தவம் புரிபவர்க்கு உணவையும் அளிப்பவன் குபேரனைப் போல் வாழ்வான்’ என்கிறது ஏலாதி.

காமனைப் பற்றிய பாடல்கள் சிலவும் பதினெண் கீழ்கணக்கில் காணப்படுகின்றன. மக்களுக்கு காம உணர்வைத் தூண்டும் கடவுளாக காமன் வைதீக சமயத்தாரால் கருதப்படுகிறாள்.

> “பருவராலும் பைதலும் காணான்கொல் காமன்
> ஒருவர்கண் நின்றொழுகு வான்” [81]

> “எண்ணுளவால் ஐந்திரண்டு ஈத்தான்கொல்! என்னாம்கொல் ?
> கண்ணுளவால் காமன் கணை”[82]

> “லென்னே செறிகாமம் பூட்டு மயில்மாரன்
> மன்னரசான் மாண்பூப் புலகு”[83]

என்ற பாடல்கள், ‘கணவனைப் பிரிந்த மனைவியருக்குத் தனிமைத் துன்பத்தைத் தருபவன் காமன்’ என்றும்: ‘உயிர்களுக்கு காதலை ஊட்டுவதற்காக ஐந்து மலர்கணைகளை கொண்டிருப்பவன்’ என்றும் காமனின் பண்பு நலன்களைக் குறிப்பிடுவதாக அமைந்துள்ளன.

## தொகுப்புரை

சங்கம் மருவிய சமயங்கள் பெரும்பாலும் சமண பௌத்த சமயங்களாகவே காணப்படுகின்றன. இக்கால இலக்கியங்களில் அறக்கருத்துக்களே மிகுதியும் உள்ளன. அறக்கருத்துக்கள் பெரும்பாலும் அவைதீகம் சார்ந்ததாகவே காணப்படுகின்றன. வைதீகக் கருத்துகள் சிலவாகவே கிடைக்கின்றன.

வைதீக சமயமானது வடஇந்தியாவிலிருந்து தமிழகம் வந்ததாகும். சமணம், பௌத்தம், வைதீகம் இம்மூன்று சமயங்களும் ஒரே காலகட்டத்தில் தான் தமிழகம் வருகின்றன. சமண, பௌத்த சமயங்களின் தாக்குதலைத் தாங்கிக் கொள்ளவும், அவைகளை வீழ்த்தவும் சைவ சமயமும், வைணவ சமயமும் வைதீக சமயத்துள் இணைக்கப்படுகின்றன.

சைவ சமயம் ஹராப்பா நாகரீக காலத்தில் இருந்தே மக்களால் கடைபிடிக்கப்பட்ட சமயமுறையாகும். அக்காலத்தில் வணங்கப்பட்ட ‘பசுபதியும்’ வைதீக சமயத்தாரால் வணங்கப்பட்ட ‘உத்திரனும்’ ஆரிய திராவிட கலப்பிற்குப் பின் சிவபெருமானாக உருமாற்றம் செய்யப்படுகின்றன. சிவன், பார்வதி, பிள்ளையார், முருகன் முதலிய கடவுள்கள் சைவ சமயக் கடவுள்களாகவும் உறவுமுறைகளுக்குள்ளும் அடக்கப்படுகின்றன. சைவ சமயக் கடவுள்களாகக் காணப்படும் இந்நால்வரைப் பற்றியும் சங்கம் மருவிய இலக்கியங்களில் உள்ள சில நூல்களில் கூறப்பட்டுள்ளன. சிவனைப் பற்றிக் கூறும்போது முக்கண் உடையவன் என்றும், ஆலகால விஷம் உண்டவன் என்றும், உமையாளை தன் இடப்பாகத்தே கொண்டவன் என்றும், கணபதி, முருகனின் தந்தை என்றுமான செய்திகள் இவ்விலக்கியங்களில் காணப்படுகின்றன. முருகனைப் பற்றிக் கூறும்போது முருகனின் வேற்படையையும், கடம்பமாலை அணிந்துள்ள

முறையையும் கூறுவதாக அமைகின்றன. கணபதியை ‘களிறு’ எனவும், கல்விச் செல்வம் கொடுப்பவன் எனவும் கூறும் மருவிய இலக்கியங்கள், உமையாளைக் கூறும்போது, சிவனின் சரிபாதி எனவும், ‘வாலிழை’ என்னும் பெயர் கொண்டவள் எனவும் கூறுகின்றன.

வைதீக சமயத்தின் மற்றொரு பிரிவு வைணவம் ஆகும். வைணவ சமயம் திருமாலைக் கடவுளாகக் கொண்டதாக அமைகிறது. திருமால் பற்றிய செய்திகள் வேதங்களிலேயே காணப்படுகின்றன. சங்கம் மருவிய இலக்கியங்களின் பல பாடல்கள் திருமாலின் பெருமையக் கூறுவதாக அமைந்துள்ளன. திருமால் மூவடியால் உலகை அளந்ததையும், திருமேனி அழகையும், பல அவதாரங்கள் எடுத்து அசூரர்களை அழித்ததையும், திருமால் திருவடியைத் தொழுதால் துன்பங்கள் அனைத்தும் நீங்கி இன்பம் விளையும் என்பதையும் கூறுவதாக அமைகின்றன. திருமாலின் மனைவியான திருமகள், செல்வக் கடவுளாகவும் தாமரை மலரில் வீற்றிருப்பவளாகவும், பொன் போன்ற மேனியை உடையவளாகவும் சங்கம் மருவிய இலக்கியங்கள் கூறுகின்றன.

தேவர்கள் சைவ வைணவ சமயங்களுக்குப் பொதுவானவர்களாகக் கருதப்படுகின்றனர். இவர்களில் இந்திரன், இந்திராணி, எமன், குபேரன், காமன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் சிலவும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன. இந்திரன் தேவலோகத் தலைவனாகவும், எமன் கூற்றுவனாகவும், குபேரன் செல்வத்திற்கு அதிபதியாகவும், காமன் மக்களிடம் காம உணர்வை உண்டாக்குபவனாகவும் மருவிய இலக்கியங்களின் வழி அறியமுடிகிறது.

## அடிக்குறிப்புகள்

1. அழகரசன், பக்தி–அனுபவம்–அரசியல், ப. 23.
2. தி.சு.நடராசன், தமிழ்ச் சமூகத்தில் வைதீக சமயம், ப.39.
3. மயிலை சினி.வேங்கடசாமி, சமயங்கள் வளர்த்த தமிழ், பக்.33–34.
4. மேலது, ப.35.
5. மேலது, பக்.35–36.
6. ஆர்.நரசிம்மன், வைணவ மரபும் மெய்ப்பொருளியலும், ப.2.
7. மயலை சீனி.வேங்கடசாமி, சமயங்கள் வளர்த்ததமிழ், பக்.32–33.
8. கா.அரங்கசாமி, சிவசமய வரலாறு, பக்.9–10.
9. மேலது, ப.29.
10. த.ஆதிமூலம், மயிலையார் பார்வையில் சமயத்தமிழ், ப.41.
11. ஆசிரியர்குழு, வாழ்வியற் களஞ்சியம் தொகுதி–4, ப.367.
12. கா.அரங்கசாமி, சிவசமய வரலாறு, ப.15.
13. மயிலை சீனி.வேங்கடசாமி சமயங்கள் வளர்த்த தமிழ், ப.32.
14. நாலடி, பா.எண். 400.
15. ஐ. ஐம்பது, பா.எண். 1, க.வா.
16. இன்னிலை, பா.எண். 1, க.வா.
17. ஐந்.ஐம்பது, பா.எண். 1, க.வா.
18. இன்னா, பா.எண். 1, க.வா.
19. இனியவை, பா.எண். 1, க.வா.
20. தி.சு.நடராசன், தமிழ்ச்சமூகத்தில் வைதீகசமயம், ப.6.
21. ஐ. ஐம்பது, பா.எண். 20.
22. ஐ. ஐம்பது, பா.எண். 1,க.வா.

23. தி.நூ.ஐம்பது, பா.எண். 93.

24. இன்னா, பா.எண். 1, க.வா.

25. ஐ. எழுபது, பா.எண். 1, க.வா.

26. பழமொழி, பா.எண். 77.

27. இன்னிலை, பா.எண். 1. க.வா.

28. ப.அருணாசலம், வைணவ சமயம் (ஓர் அறிமுகம்), ப.15.

29. இந்திரா பார்த்தசாரதி, தமிழ் இலக்கியங்களில் வைணவம், பக்.36–37.

30. ப.அருணாசலம், வைணவ சமயம் (ஓர் அறிமுகம்), ப.19.

31. மேலது, பக்.20–21.

32. ஆர்.நரசிம்மன், வைணவ மரபும் மெய்ப்பொருளியலும், பக்.3–4.

33. மேலது, ப.5.

34. குறள்.2.

35. மேலது, 3.

36. மேலது, 7.

37. மேலது, 8.

38. மேலது, 9.

39. மேலது, 10.

40. மேலது, 610.

41. மேலது, 1103.

42. பழமொழி, பா.எண். 80.

43. மேலது, பா.எண். 81.

44. மேலது, பா.எண்.191.

45. நான்மணி, பா.எண்.1, க.வா.

46. மேலது, பா.எண். 2. க.வா.

47. கடுகம், பா.எண். 1, க.வா.

48. இனியவை, பா.எண். 1, க.வா.

49. இன்னா, பா.எண். 1, க.வா.

50. கார். பா.எண். 1, க.வா.

51. ஐ. ஐம்பது, பா.எண். 1, க.வா.

52. தி.நூ.ஐம்பது, பா.எண். 96.

53. குறள், 167.

54. மேலது, 84.

55. மேலது, 519.

56. மேலது, 617.

57. மேலது, 920.

58. நாலடி. பா.எண். 252.

59. மேலது, பா.எண். 266.

60. நான்மணி. பா.எண். 41.

61. மேலது, பா.எண். 43.

62. மேலது, பா.எண். 67.

63. கடுகம், பா.எண். 45.

64. பழமொழி, பா.எண். 356.

65. ஐ.ஐம்பது, பா.எண். 14.

66. ஐ.ஐம்பது, பா.எண். 17.

67. நாலடி, பா.எண். 373:1–2.

68. ஏலாதி, பா.எண். 32:3–4.

69. ஏலாதி, பா.எண். 1 க.வா.

70. நாலடி, பா.எண். 346.

71. நாலடி, பா.எண். 38:1–2.

72. குறள். 269.

73. குறள். 326.

74. குறள். 765.

75. நாலடி, பா.எண். 4:3–4.

76. நாலடி, பா.எண். 35:3–4.

77. நாலடி, பா.எண். 172:1.

78. நான்மணி, பா.எண். 26:3–4.

79. நான்மணி, பா.எண். 39:2.

80. ஏலாதி, பா.எண். 49:3–4.

81. குறள். 1197.

82. தி.நூ.ஐம்பது, பா.எண். 8:3–4.

83. இன்னிலை, பா.எண். 24:3–4.

# முடிவுரை

அற இலக்கியங்கள் எனும் போது சங்க மருவிய இலக்கியங்கள் தான் நமக்கு நினைவிற்கு வரும். சங்க இலக்கியங்கள் காதலையும் வீரத்தையும் முதன்மைப்படுத்த, சங்கம் மருவிய இலக்கியங்கள் அறத்தையே முதன்மைப்படுத்துகின்றன. பதினெட்டு நூல்களில் பதினோறு நூல்கள் அறநூல்களாகவே காணப்படுகின்றன. சங்க இலக்கியங்களில் சமயத் தாக்கம் அவ்வளவாக இல்லை. ஆனால் சங்கம் மருவிய இலக்கியங்களில் சமயங்களின் தாக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது. சங்க மருவிய காலத்தில் சமணம், பௌத்தம், வைதீகம் என்ற இம்முச்சமயங்களும் தங்கள் ஆதிக்கத்தையும் செல்வாக்கையும் நிலைநிறுத்தும் பொருட்டு இலக்கியங்களில் தங்கள் சமயக் கருத்துக்களை மக்களிடம் பரப்பி விட்டனர். தமிழகத்தில் சமயப் பூசல்களின் தொடக்கம் சங்கம் மருவிய காலத்தில் தான். இவ்வாய்வில் முச்சமயங்கள் பற்றியும், அச்சமயங்கள் சார்ந்த செய்திகள் சங்கம் மருவிய இலக்கியங்களில் எவ்விதம் வெளிப்படுத்தப்பட்டுள்ளன என்பதைப் பற்றியும் கூறப்பட்டுள்ளன.

சமயங்களின் தொடக்கமாக வழிபாடுகள் அமைகின்றன. வழிபாடுகளே அனைத்து சமயத்திற்கும் தோற்றுவாய் ஆகும். அச்சத்தின் அடிப்படையிலேயே வழிபாடுகள் தோன்றுகின்றன. இயற்கை வழிபாடே முதலில் தோன்றுகிறது. இயற்கையைக் கண்டு பயந்த, இயற்கையால் தனக்குத் தீங்கு விளையும் என எண்ணியதன் வெளிப்பாடே இயற்கை வழிபாடாகும். இயற்கையே தனக்கு ஆதாரம் என்று உணர்ந்தபின், அச்ச வழிபாடானது அன்பின் வழிபாடாக மாறுகிறது. இயற்கை வழிபாட்டிற்கு அடுத்து முக்கியமானது நடுகல்

வழிபாடாகும். தங்களுக்காகப் போரில் இறந்த வீரர்களை சிறப்பிக்கும் பொருட்டும், நன்றி கூறும் விதமாகவும் நடுகல் வழிபாடானது அமைகிறது. நடுகல் வழிபாட்டின் அடுத்த நிலையாக முன்னோர் வழிபாடும் குலதெய்வ வழிபாடும் அமைகிறது. இறந்த தாய் தந்தையரோ அல்லது தாத்தா பாட்டியோ ஆவியாக, ஆன்மாவாக இருந்து நம்மைக் காப்பர் என்ற நம்பிக்கையின் அடிப்படையில் முன்னோர் வழிபாடும் குலதெய்வ வழிபாடும் தோன்றுகின்றன. இவ்வழிபாடுகளில் வளர்நிலையே சமயம் என்ற அமைப்பாக மாற்றமடைகிறது.

ஒவ்வொரு இனத்தார், சாதியார், குலத்தார் என அவரவருக்கென தனித்த வழிபாடுகளால் மக்களினம் சிதறிக் கிடந்ததை ஒன்றிணைக்கும் முயற்சியே சமயம் ஆகும்.

சங்கம் மருவிய இலக்கியங்களில் அதிகம் ஆதிக்கம் செலுத்துவது சமண சமயமே ஆகும். இவ்விலக்கியங்களில் சமண சமயம் சார்ந்த செய்திகள் மிகுதியும் காணப்படுகின்றன. மகாவீரரால் புகழ்நிலை அடைந்த சமணம், தமிழ் அறஇலக்கியங்களில் மிகுதியான தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளது. சமண நெறிகளில் மாவிரதங்கள் எனப்படும் கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, காமமின்மை, அவாவறுத்தல் ஆகியவை மிகமுக்கியமானதாகும். இல்லறத்தார் துறவறத்தார் என அனைவரும் கடைபிடிக்க வேண்டிய நெறிகளாக இந்நெறிகள் சுட்டப்படுகின்றன. திருக்குறள், நாலடியார் போன்ற நூல்களில் இம்மாவிரதங்களுக்கென தனி அதிகாரங்களே காணப்படுகின்றன. மருவிய இலக்கியங்களில் காணப்படும் கொல்லாமை முதலிய அறங்கள் சமணர்களின் நெறிகளை உள்வாங்கி வெளிப்படுத்தும் விதமாகவே அமைந்துள்ளன. இவை

மட்டுமல்லாது இன்னபிற சமண நெறிகளும் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன.

சமண சமயத்தைப் போலவே பௌத்த சமயமும் அறநெறிகளையே மிகுதியும் வலியுறுத்துகின்றன. புத்தரால் வளர்க்கப்பட்ட பௌத்தம் நான்கு வாய்மைகள், எண்வகை மார்க்கங்கள், பஞ்சசீலம் ஆகிய நெறிகளைக் கொண்டுள்ளதாக விளங்குகின்றது. சமண சமயத்தாரால் கடைபிடிக்கப்படும் மாவிரதங்கள், பௌத்தர்களாலும் கடைபிடிக்கப்பட்டு வருகின்றன. பௌத்த நெறிகள் பலவும் சங்கம் மருவிய இலக்கியங்களிலும் காணப்படுகின்றன. மருவிய இலக்கியங்களில் காணப்படும் கொல்லாமை, கள்ளாமை, கள்ளுண்ணாமை, வீடுபேறடைதல், அறியாமை பற்றிய செய்திகள் யாவும் பௌத்த அறத்தின் வெளிப்பாடாகவே அமைகின்றன.

கொல்லாமையை வலியுறுத்தும் சமண பௌத்த சமயங்களை அவைதீக சமயங்கள் என்றும், வேள்வி புரிதலை ஏற்றுக்கொள்ளும் சமயங்களை வைதீக சமயங்கள் எனவும் வகைப்படுத்துவர். வைதீச சமயங்கள் பலவாகக் கூறப்பட்டாலும் சைவமும் வைணவுமே அவற்றின் மிகமுக்கிய சமயங்களாகக் கருதப்படுகின்றன. சைவ சமயக் கடவுள்களான சிவன், பார்வதி, முருகன், பிள்ளையார் ஆகியோரைப் பற்றிய பாடல்கள் சங்கம் மருவிய இலக்கியங்களில் மிகுதியும் காணப்படுகின்றன. சைவக்கடவுள்களின் தோற்றம், அவர்களை வழிபடுவதால் கிடைக்கும் நன்மைகள் முதலியவற்றைக் கூறுவதாக மருவிய இலக்கியங்களில் உள்ள பாடல்கள் அமைந்துள்ளன. வைணவம் திருமாலை முதன்மைக் கடவுளாகக் கொண்டு வழிபடக்கூடிய சமயமாகும் திருமாலின் அவதாரங்கள், பக்தர்களின் மீது அவர் கொண்டுள்ள பற்று, உலகளந்த

செய்திகள் முதலிய திருமாலின் பெருமையைக் கூறும் பாடல்கள் பலவும் சங்கம் மருவிய இலக்கியங்களில் காணப்படுகின்றன.

வைதீக சமயத்தில் தேவர்கள் சைவ வைணவர்களின் பொதுவான தெய்வங்களாக வழிபடப்படுகின்றனர். இவர்களில் இந்திரன், எமன், குபேரன், காமன் ஆகியோரைப் பற்றிய செய்திகள் மருவிய இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படுகின்றன. இந்திரன் தேவர்களின் தலைவனாகவும், எமன் கூற்றுவனாகவும், குபேரன் செல்வத்திற்கு அதிபதியாகவும், காமன் காதல் உணர்வை தூண்டுபவனாகவும் மருவிய இலக்கியங்கள் சுட்டுகின்றன.